# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Friday, the 14th February 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Accumulation of handloom cloth for want of market*

*1 *S.N. Q.*—SRI N. K. PALANISAMI (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any stocks of handloom cloth are accumulated with the co-operative societies and private producers for want of market; and

(*b*) if so, what steps the Government propose to take for finding suitable market and for ensuring full employment for the handloom weavers?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The Government are aware that there is accumulation of stocks of handloom cloth with co-operatives. Particulars of the stocks with private producers are not available.

The All-India Handloom Board appointed some months back a special Sub-Committee to report on measures required for relieving the slump. The report of the Committee is now under the consideration of the Government of India.

Another Sub-Committee of the Standing Committee of the All-India Handloom Board is now examining the question of strengthening the competitive capacity of the Handloom Industry in the country. The Committee has not submitted its report yet.

SRI N. K. PALANISAMI : கைத்தறி துணி தேக்கத்திற்குக் காரணம் ரிபேட்டை குறைத்ததாக இருப்பதால் இந்த ஒரு அணுவாவது நிரந்தர ரிபேட்டாக இருக்குமா என்பதற்கு உத்தரவாதம் சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாம் இது விஷயமாக எடுத்துக் கொள்ளும் எல்லா முயற்சிகளும் இந்த ஒரு அணுவாவது நிச்சயமாக இருக்கவேண்டும் என்பதற்காகதான்.

SRI K. VINAYAKAM : Sir, the reason for the accumulated stock lying with the different stores is believed to be that there is no demand for it in foreign countries like Ceylon, Burma, and Malaya. Have the Government taken any steps to create a demand in those places? Previously there was demand for our goods in those markets.

THE HON. SRI R. VENKATARAMAN : That is also one of the reasons. The export of handloom cloth has fallen during the current year.

[14th February 1958

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : இப்பொழுது மில் துணிகளுக்கு ஒரு முனை விற்பனை வரிவந்து பல முனை விற்பனை வரி நீங்கியதன் காரணமாக மில் துணிகளின் விலை குறைந்து இருக்கிறது. அதன் காரணமாக கைத்தறித் துணிகள் தேங்கிக்கிடக்கின்றன. அதனால் கைத்தறித் துணியை வாங்குவதற்கும் இப்பொழுது இருக்கக்கூடிய தேக்கத்தைக் குறைப்பதற்கும் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்லும் காரணமாகவும் இருக்கலாம். ஆனால் சென்ற டிசம்பர் மாதம் 13-ம் தேதிதான் இந்த புதிய வரி விகிதம் அமுலுக்கு வந்தது. அதற்கு முன்னாலேயே கைத்தறி துணிக்கு தேக்கம் ஏற்பட்டிருக்கிறது. அந்த தேக்கத்தைப் போக்குவதற்குத்தான் அகில இந்திய கைத்தறி போர்ட் என்ன செய்யவேண்டும் என்று இப்பொழுது பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள்.

Sri V. K. KOTHANDARAMAN : கைத்தறி நெசவு தொழிலாளர்களுக்கு முழு நேர வேலை கிடைப்பதற்கு புதிதாக ஆரம்பிக்கப்போகும் தொழிற் சாலைகளில் சேர்ப்பதற்கு முழு கவனம் செலுத்துமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : அவர் கேட்கக் கூடிய கேள்வி எனக்குப் புரியவில்லை. எந்தத் தொழிற்சாலைகளில் சேர்க்க வேண்டும் என்று கேட்கிறார் என்பது புரியவில்லை.

Sri V. K. KOTHANDARAMAN : சிறிய தொழிற்சாலையாக இருந்தாலும் சரி, பெரிய தொழிற்சாலையாக இருந்தாலும் சரி, புதிதாக ஆரம்பிக்கப்போகும் தொழிற்சாலைகளில் பெரிய அளவில் கைத்தறி நெசவாளர்களை சேர்த்துக்கொள்வதற்கு சர்க்கார் கவனம் செலுத்துமா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : இப்பொழுது இருக்கக்கூடிய கைத்தறி நெசவாளர்களுக்கு கைத்தறி தொழிலிலேயே வேலை கிடைத்துக் கொண்டு இருக்கிறது. வருங்காலத்தில் மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்படுமோ என்ற பயத்தால்தான் நாம் அதை ஒழுங்குபடுத்துவதற்கு முழு கவனமும் நடவடிக்கையும் எடுத்துக்கொண்டிருக்கிறோம். கைத்தறியில் ஈடுபட்டிருக்கிறவர்களை ஒவ்வொரு தொழிற்சாலைகளிலும் அமைக்க வேண்டும் என்ற பிரச்னை இப்பொழுது எழவில்லை.

Sri A. VEDARATHNAM : வெளி நாடுகளில் நம்முடைய துணிக்கு கிராக்கி குறைந்து இருப்பதற்குக் காரணம் அதனுடைய தரக் குறைவு காரணமா ? அப்படியானால் அந்தத் தரத்தை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளுமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : நம்முடைய துணியின் தரம் குறையவில்லை. பல நாடுகளுக்கு நம்முடைய துணி அனுப்பப்படுகிறது. முக்கியமாக ஜப்பானிலிருந்து சில துணி வருவதால் அந்த நாடுகளில் நம்முடைய துணிக்கு தேவை குறைபடுகிறது.

*Bonus to textile workers*

* 2 *S.N. Q.*—Sri M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the dispute regarding bonus for the year 1956–57 between the workers and the managements of the Textile Mills in the Coimbatore district has been finally settled; and

(*b*) if so, on what basis?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) & (*b*) No, Sir. The Government discussed the issue with the parties in December 1957, and the parties expressed willingness to have direct

14th February 1958]

negotiations with a view to settling the dispute. The result of the direct negotiations are awaited. I may add that I have called a conference of the trade union representatives and the Mill-owners at Coimbatore on the 22nd of this month, and I will take up this issue with them.

*Unemployment relief*

* 101 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state the amount promised by the Central Government and the amount actually received towards the cost of unemployment relief scheme for the year 1957-58?

The Hon. Sri C. SUBRAMANIAM : During the First Five-Year Plan, the Government of India approved the following special schemes for the relief of unemployment :—

(1) *Scheme for the relief of the educated unemployed—opening of single-teacher schools.*—This scheme is not being continued during the Second Five-Year Plan, but the Government of India are giving assistance towards the cost of teachers appointed under this scheme during the First Plan period. A sum of Rs. 1·49 lakhs has been received representing one-half of the Central Government share towards the cost of the scheme during 1957–58. The other half of the Central contribution will be sanctioned on furnishing the figures of actual expenditure incurred by the State Government during 1957–58.

(2) *Expansion of power facilities for increasing employment opportunities.*—The Government of India approved a list of schemes on transmission lines and distribution costing Rs. 397·50 lakhs under the above programme, and agreed to give loan assistance to the same extent. Against this, assistance to the extent of Rs. 254·37 lakhs has been drawn up to the end of March 1957. Out of the balance of Rs. 143·13 lakhs, a sum of Rs. 25 lakhs has already been drawn during the current year. The expenditure on the approved schemes during 1957–58, is estimated at Rs. 37·15 lakhs.

There are no special unemployment relief schemes in the State Second Five-Year Plan, but the Plan as a whole has been formulated with a view to provide employment opportunities.

Sri N. K. PALANISAMI : கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும்போது கிட்டத்தட்ட மூன்று கோடி ரூபாய் இந்த ஸ்கீம் பிரகாரம் மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கும் என்றும் சுமார் 25 லட்சம் ரூபாய் இது வரையிலும் வாங்கி இருப்பதாகவும் குறிப்பிட்டார். அது தொடர்ந்து நிரந்தரமாக கிடைக்குமா ? இந்த மூன்று கோடி ரூபாய் தீர்ந்தவுடன் நிரந்தரமாக நமக்கு கிடைக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

[14th February 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : அவ்வப்போதுதான் திட்டத்தில் தீர்மானிக்கப்படும். இப்பொழுது கொடுத்திருப்பது இந்த திட்டத்தின் பிரகாரம் கொடுக்கப்பட்டிருப்பது. தொடர்ந்து அது கிடைக்குமா என்ற பிரச்னையைப்பற்றி பரிசீலனை செய்து அவ்வப்போது முடிவு செய்யப் பட்டு ஒதுக்கப்படும்.

*Wool processing factory*

* 102 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any wool processing factory has been set up by the Government in the State; and

(*b*) if so, the amount spent thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) One is being set up, Sir.

(*b*) Rs. 1,92,578·23.

SRI A. A. RASHEED : Sir, is it a fact that this is a joint venture of three States?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is set up by the co-operation of Andhra and Mysore.

SRI N. K. PALANISAMI : ஒவ்வொரு மாகாணமும் எவ்வளவு மூலதனம் போட்டிருக்கிறது என்பதைக் கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போடப்பட்ட மூல தனத்தில் சரி பாதியாக இரண்டு ராஜ்யங்களும் பங்கிட்டுக்கொள்ளுகின்றன.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த கம்பளி தொழிற்சாலைகளில் வேலை இல்லாமல் இருக்கிற கைத்தறி நெசவு தொழிலாளர்களை சேர்த்துக் கொள்வதற்கு சர்க்கார் சிபாரிசு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த கைத்தறி நெசவாளர்களை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அந்தத் தொழிலில் எடுத்துக்கொள்வதாக இருந்தால் கம்பளியில் வேலைசெய்யக் கூடிய பழக்க வழக்கம் உள்ளவர்களைத்தான் எடுத்துக்கொள்ளுவார்கள்.

*New girls' schools*

* 103 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state the amount of grant received from the Government of India for the opening of girls' schools in the State for the years 1956 and 1957?

THE HON. SRI C. SUBRAMANIAM : Grants are not received from the Government of India exclusively for the opening of girls schools. Grants are given by the Centre for—

(1) the additional enrolment of pupils (both boys and girls) in elementary schools; and

(2) the opening of additional classes in high schools.

14th February 1958]

The grants received and expected are as follows :—

| — | | | Grants received in 1956-57. | Grants expected in 1957-58. |
|---|---|---|---|---|
| | | | RUPEES IN LAKHS. | RUPEES IN LAKHS. |
| Elementary schools | .. | .. | 5·035 | 10·0 |
| Secondary schools | .. | .. | 0·5 | 2·0 |

SRI N. K. PALANISAMI : பெண்களுக்கு ஏற்படுத்தப்படும் பள்ளிக் கூடங்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட பணம் வாபஸ் ஆகிவிட்டது அல்லவா ? அப்படி வாபஸ் ஆகவிடாமல் அதை வாங்கிக்கொள்வதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி பணம் வாபஸ் ஆகி இருப்பதாக எனக்குத் தெரியாது. பணம் எங்கேயாவது ஒளிந்துகொண்டிருந்து அதை எனக்குத் தெரியப்படுத்தினால் அதை வாங்கி உபயோகப்படுத்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறேன். எவ்வளவு பணம் வைத்திருந்தாலும் அதை எடுத்துக்கொள்ள தயாராக இருக்கிறேன்.

SRI A. GOVINDASAMY : இந்த திட்டத்தின் கீழ் ஓராசிரியர் பள்ளிக் கூடங்களை மீண்டும் நிறுவுவதற்கு இந்த அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஓராசிரியர் பள்ளிக்கூடங்களைக் கொண்டுவருவதற்கு முன்னால் எந்த திட்டத்தின் அடிப்படையில் அதைக் கொண்டு வரவேண்டும் என்று திட்டக் கமிஷன் பரிசீலனை செய்து கொண்டு இருக்கிறது.

*Land reforms*

* 104 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state— 8-40 a.m.

(*a*) whether the Government was represented at the meeting of the Central Committee for Land Reforms held at New Delhi on 16th August 1956;

(*b*) whether any decisions were taken at that meeting; and

(*c*) if so what they were?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) I am sorry they cannot be revealed since the proceedings are being treated as secret at present.

* 125-A *Q.*—SRI N. K. PALANISAMI (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Government intend to bring in any legislation to fix ceiling on land holding?

THE HON. SRI M. A. MANICKAVELU : The matter is under the active consideration of the Government.

[14th February 1958

* 125-B *Q*.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) when the Government propose to introduce legislation regarding land reforms; and

(*b*) the reasons for the delay in introducing land reforms?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) Several measures of land reforms have already been enacted. If the hon. Member is referring to the question of fixing ceilings for land-holdings, I may say that the matter is under the active consideration of the Government. A Bill in this behalf will shortly be introduced.

SRI A. GOVINDASAMY : நிலச் சீர்திருத்தச் சட்டம் சம்பந்தமாக அடிப்படையிலே சட்டம் கொண்டுவருவோம் என்று சொல்லி, இரண்டு திட்டங்களை நிறைவேற்றிவிட்டார்கள். ஆனால், மூன்றாவது திட்டமாகிய நில உச்ச வரம்பு கட்டுவதிலே ஏன் காலம் கடத்தப்படுகிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூன்றாவது கட்டத்தையும் நிறைவேற்றுவதற்காக ஒரு மசோதா வருகிறது என்று முன்பே சொன்னேன்.

SRI R. SRINIVASA IYER : Sir, I desire to know whether Government have gathered statistics on the net income per acre of land under the several 'tharams' in the State?

THE HON. SRI M. A. MANICKAVELU : Not specifically on the lines, Sir. The Government have got some knowledge of income from lands. According to it, it is a rough estimate.

SRI A. GOVINDASAMY : அதிகப்படியாக நிலம் வாங்கக்கூடாது என்று நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயித்து சட்டம் கொண்டுவரப் போகிறார்களா ? அல்லது, யாராவது மேற்கொண்டு நிலம் வாங்குவதாக அரசாங்கத்திற்கு தகவல் கிடைத்து, சட்டம் கொண்டுவரப்போகிறார்களா ? அல்லது நிலசுவான்தார்களுக்கு எச்சரிக்கையாக சட்டம் கொண்டுவரப் போகிறோம் என்று சொல்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரி யாராவது வாங்கினார்களா என்று ஆராயவில்லை.

SRI K. R. NALLASIVAM : நிலச் சீர்திருத்த சட்டம் வருகிறது என்று தெரிந்து இப்போதே நிலச்சுவாந்தார்கள் தங்களிடம் அதிகப்படியாக இருக்கும் நிலங்களை விற்க முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதனால், எந்த நோக்கத்திற்காக சட்டம் கொண்டுவரப்படுகிறதோ, அதை நிறைவேற்றப்படமுடியாமல் போகலாம். இம்மாதிரி அதிகபட்சமாக நிலம் உள்ளவர்கள் நிலத்தை விற்பதால், சட்டத்தின் முழுப்பயன் கிடைக்காமற் போகும். ஆதலால், அதைத் தடுக்க ஏதாவது ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது வரப்போகிற மசோதா அதைத் தடுக்கும். சட்டத்தின் உதவி இல்லாமலேயே இம்மாதிரி கொஞ்ச கொஞ்சமாகப் பிரித்தால் நல்லதுதானே.

SRI R. SRINIVASA IYER : Sir, I desire to know whether the Government have come to any decision as to the imposition of a ceiling either income or extent irrespective of the income from the land.

14th February 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : That will be actually finalised when the Bill is brought. But, we are now oscillating between these two or three things.

SRI T. T. DANIEL : May I know whether the Government have taken into account the nature of holdings and income in Kanyakumari district and whether the Government have any idea of excluding certain categories like plantations, properties to be held in trust and so on?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the tenure is different in Kanyakumari district. I am trying to study and know it. Then only I will be able to tell anything specific on it.

SRI K. VINAYAKAM : While fixing a ceiling on the land holdings of an individual, will the Government adopt a uniform policy for the entire State and say that one individual can have only so many acres of wet land and so many acres of dry land in the entire district or will they adopt a policy or principle based on the fertility of the land according to the peculiar circumstances prevailing in each district.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, all these aspects of the question will be taken into consideration and finally a decision will be taken.

SRI A. GOVINDASAMY : இது விஷயமாக ஒரு முடிவுக்கு வருவதற்கு அரசாங்கத்தின் கொள்கை ஊசலாட்டத்தில் இருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படியானால், அந்த ஊசலாட்டம் எப்பொழுது நின்று, ஒரு நல்ல முடிவுக்கு அரசாங்கம் வரும் என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஊசலாட்டம் என்று சொன்னதற்குக் காரணம் என்னவென்றால், family holdingஐ வைத்துக் கொள்வதா ? Economic holdingஐ வைத்துக்கொள்வதா ? வருமானத்தை வைத்துக்கொள்வதா ? அல்லது நில விஸ்தீர்ணத்தை அடிப்படையாக வைத்துக்கொள்வதா ? என்ற பிரச்னைகளெல்லாம் வரும் போது, இன்னும் அதைப்பற்றி முடிவுக்கு வரவில்லை என்பதற்காகத்தான்.

SRI A. VEDARATHNAM : கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும்போது, மேலும் நிலம் வாங்க யாரேனும் முன்வருகிறார்களா என்ற விஷயத்தை ஆராயவில்லை என்று சொன்னார்கள். எல்லோரும் நிலத்தை விற்க முற்படும் இந்த நேரத்தில் நிலம் வாங்குபவர்களே இல்லை என்பதை அமைச்சர் அவர்கள் அறிவார்களா ? அப்படியிருக்க இந்தச் சட்டத்தைக் கொண்டுவரவேண்டிய அவசியமென்ன என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரி சட்டம் ஏற்பட்டால்தான் பொதுமக்களுக்கு நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயிப்பது பற்றிய அரசாங்கத்தினுடைய கொள்கை தெரியும், அதுவரைக்கும் அது நல்லதுதான் என்று நினைக்கிறேன்.

SRI N. K. PALANISAMI : டில்லியில் நடந்த கூட்டத்தில் நம் மாகாணத்தில் நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவருவதற்குத் தடங்கலாக இருந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்யும்போது நஷ்ட ஈடு கொடுப்பது சம்பந்தமான அரசியல் சட்டத்தின் 51, 51. ஏ பிரிவு பற்றி விவாதிக்கப்பட்டதா ? அதுபற்றி என்ன முடிவு செய்யப்பட்டது ?

[14th February 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தக் கூட்டத்திலே அனேக விஷயங்கள் விவாதிக்கப்பட்டன; **family holding and economic holding,** வருமானம், உச்ச வரம்பு நிர்ணயிப்பது போன்ற இம்மாதிரி அனேக விஷயங்கள் அதிலே விவாதிக்கப்பட்டன.

SRI A. R. SUBBIAH MUDALIAR : தமிழ் நாட்டில் உள்ளவர்களைப் பொறுத்தவரையில் உச்ச வரம்பு கட்டுவது நிலத்திற்கு மட்டுமா அல்லது தொழிலின் மூலம் வரக்கூடிய வருமானத்திற்குமா ? சொத்தின்பேரில் அதன் வருஷ வரும்படியின் அடிப்படையில் வரம்பு கட்டுவதற்கு ஏதாவது திட்டம் இருந்துக்கொண்டிருக்கிறதா ? உச்ச வரம்பு கட்டுவது நிலத்திற்கு மட்டும் இருக்கிறதா ? மற்ற சொத்துகளின் மூலம் வரக்கூடிய வருமானத்திற்கும் உச்ச வரம்பு இருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வருமானத்திற்கு உச்ச வருமானம் என்று நிர்ணயித்தால் அப்பொழுது வருமானத்தைப்பற்றி இருக்கும். அப்படி இல்லாமல் நில விஸ்தீர்ணத்தைப்பற்றி சட்டம் செய்யும் போது, அதன் வருமானத்தைப்பற்றி கவனிக்கவேண்டிய அவசியம் இல்லை.

### *Sri Shanmugar Mills, Rajapalayam*

* 105 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Sri Shanmugar Mills, Rajapalayam, has been locked out since 29th October 1957;

(*b*) if so, the reasons therefor; and

(*c*) what action the Government have taken to re-open the Mills?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The management has closed down the Mills from 29th October 1957.

(*b*) According to the management the Mill was closed for financial reasons.

(*c*) Under the present law, Government, cannot prevent a management from closing down its business. However the issue, whether the closure of the Mill is justified and to what relief the workers are entitled, has been referred for adjudication to the Industrial Tribunal, Madras.

### *Sathanur Project*

* 106 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of acres of land newly benefited in North Arcot and South Arcot districts by the construction of the Sathanur Reservoir Project;

(*b*) whether the Government have received any representation recently to the effect that after the construction of the Sathanur Project some parts in the South Arcot district, which have been already getting irrigation facilities from the Pennar, have been affected; and

(*c*) if so, the action taken thereon?

14th February 1958]

THE HON. SRI P. KAKKAN : (*a*) The Sathanur Reservoir Project benefits 15,300 acres in North Arcot district and 4,700 acres in South Arcot district.

(*b*) Yes.

(*c*) The matter was referred to the Chief Engineer (Irrigation). His report has been received and it is seen from the report that the Sathanur Reservoir Project has not interfered with the natural flows in the river. It is reported that the natural flows in the river are being let down scrupulously.

SRI A. GOVINDASAMY : சாத்தனூர் திட்டத்தினாலே பாதிக்கப் படவில்லையென்றும், மழை பெய்யாததினால் இந்த நிலைமை ஏற்பட்டது என்றும் மந்திரி அவர்கள் அறிவிக்கிறார்கள். மழையே பெய்யாதிருந்தால் சாத்தனூரில் எப்படி தண்ணீர் இருக்கமுடியும் ? எப்படி 3,000 ஏக்கராக்கள் சாகுபடி ஆனது என்றார் ?

THE HON. SRI P. KAKKAN : மழை அதிகமாகப் பெய்யும் காலத்திலே வீணாகப் போயிருக்கும் தண்ணீரைத் தேக்கி வைத்திருக்கிறார்கள். ஏற்கெனவே போய்க்கொண்டிருக்கும் தண்ணீரைத் தடுத்து நிறுத்தவில்லை.

SRI K. ANBAZHAGAN : சாத்தனூர் அணைக்கட்டு கட்டுவதற்கு முன்னாலே எலிச்சத்திரம், திருக்கோயிலூர் அணைக்கட்டுகளிலே எவ்வளவு அடிகள் தண்ணீர் அங்கே தேங்குவதற்கு அனுமதித்திருந்தார்களோ—சாத்தனூர் அணைகட்டுவதற்கு முன்னாலே—அதே அளவுத் தண்ணீர் இப்பொழுதும் அனுமதிக்கப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN: வடகிழக்குப் பருவ மழை சரியாக இல்லாததால் அந்த நிலைமை ஏற்பட்டது.

MR. SPEAKER : I think this subject was discussed under Rule 40 two days ago.

*Chief Minister's tour*

* 107 *Q.*—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the number of mahazars and petitions given to him when he toured the North Arcot district in September 1957; and

(*b*) the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Most of the mahazars and petitions presented to Chief Minister when he toured North Arcot in September 1957 were handed over by him in person to the Collector of North Arcot for taking action. It is not possible to state their numbers.

SRI S. M. ANNAMALAI : சுமார் ஐந்து மாதங்கள் ஆகியும்கூட, இவ்வளவு நாள் வரையிலும் ஒரு மனுகூட பரிசீலனை செய்யப்படவில்லை என்று கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மனுக்கள் பரிசீலனை செய்யப் படவில்லை என்று எந்த அடிப்படையின் பேரில் கனம் அங்கத்தினர் சொல்கிறார்கள் என்று தெரியவில்லை. கலெக்டர் அவர்கள் பரிசீலனை செய்திருப்பார் என்றுதான் நான் நம்புகிறேன்.

[14th February 1958

*Hand-pounding of rice.*

8-50 a.m. * 108 *Q.*—Sri P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state by steps taken—

(i) to promote hand-pounding of rice; and

(ii) to avoid manual labour in getting hand-pounded rice?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (i) Forty co-operative societies of workers for hand-pounding of paddy have been organized in various districts. A departmental production centre has also been started in Tiruchendur. Chakkies and winnowing fans are distributed at 50 per cent cost to interested individuals, co-operative societies and registered institutions in the Lower Bhavani Pilot Project area and in coastal and famine areas in Tirunelveli district. Instructions have been issued to Heads of Departments to use only hand-opnded rice in Government Institutions such as jails, hospitals, hostels, etc. Equipment and production subsidy and loan towards working capital are being given to registered institutions and co-operative societies engaged in the production of handpounded rice.

(ii) Hand-driven chakkies for dehusking paddy have been introduced to minimise the drudgery and to increase the output. Complete eradication of manual labour and introduction of mechanical contrivance for dehusking paddy will defeat the very purpose for which the scheme is sanctioned, viz., to provide more employment.

Sri P. G. MANICKAM : கைக்குத்தல்முறை அரிசி அபிவிருத்திக்காக சர்க்காரால் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை—பட்ஜெட் நிதியிலிருந்து—எத்தனை ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : எவ்வளவு செலவிடப்படும், எவ்வளவு செலவிடப்பட்டிருக்கிறது என்பதற்கான புள்ளிவிவரம் என்னிடத்தில் இப்போது இல்லை.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : With a view to encouraging the use of hand-pounded rice, will the Government consider the desirability of stopping the issue of fresh licences for rice mills hereafter?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Under the existing law, it is not possible absolutely to ban the installation of new rice mills. But Government are going into the question often and are restricting to the extent possible the coming into existence of new rice mills.

Sri T. T. DANIEL : Since hand-pounded rice cannot compete with milled rice. Will the Government issue orders to Collectors of various districts to purchase only hand-pounded rice for supply of meals during mid-day to children in schools?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Necessary and suitable instructions are now and then issued to the Collectors and other officials of the Government.

14th February 1958]

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களே, இத்தகைய கைக்குத்தல் அரிசியை மக்கள் உண்பதற்கு அதன் தரத்திற்காக அது போற்றப்படுகிறதா ? அல்லது ஒரு தொழிலாகக் கருதி போற்றப்படுகிறதா ? நியாயவிலைக் கடைகளில் கைக்குத்தல் அரிசியைக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தரத்திற்காகவும் வற்புறுத்தப்படுகிறது. மேலும் கைக்குத்தல் அரிசியில் சத்து இருக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டம் மிகுதியாகவுள்ள நம் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஓரளவு போக்குகிறது என்ற அடிப்படையிலும் கைக்குத்தல் அரிசி போற்றப்படுகிறது.

SRI M. K. SOMASUNDARAM : கைக்குத்தல் அரிசித் தொழிலை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று மற்ற மில்களுக்கு லைசென்சு கொடுக்கக் கூடாது என்று அரசாங்கம் உத்திரவு போட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது அப்படிச் செய்யக்கூடிய சந்தர்ப்பம் இல்லை. கைக்குத்தல் அரிசித் தொழிலில் போட்டியும் இருந்து, நியாயவிலைக் கடைகளில் வாங்குவாரும் அதிகமாகி அந்த அரிசிக்கு நெருக்கடி உண்டானால் அதைப்பற்றி கவனிக்கலாம். இப்போது அம்மாதிரி இல்லை. சர்க்கார் ஸ்தாபனங்களில் கைக்குத்தல் அரிசி உபயோகப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : இந்தக் கைக்குத்தல் அரிசி தேக ஆரோக்கியத்திற்கு நல்லது என்று கருதுவதால் சர்க்கார் நடத்துகின்ற ஆஸ்பத்திரியில் எல்லா இடங்களிலும் வழங்குவதற்கு சர்க்கார் யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு சர்க்கார் செய்துகொண்டு வருகிறது.

SRI A. VEDARATHNAM : கைக்குத்தல் அரிசியையும், மில் அரிசியையும் ஒன்றாக வளர்ப்பது என்பது சாத்தியம் அல்ல. சிங்கத்தையும் ஆட்டையும் ஒரு கூட்டில் அடைப்பது மாதிரி. மில்லை அடியோடு கட்டுப்படுத்த முடியாது என்றாலும் மின்சார நெருக்கடியின் காரணமாக வைத்துக்கொண்டு அம்மில்கள் வேலை செய்கிற நேரத்தைக் குறைக்க அரசாங்கம் முன்வருமா ? இதனாலும் மில் அரிசி உற்பத்தியைக் கட்டுப்படுத்த முடியாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சொல்லும் யோசனை நல்ல யோசனை. இதை இப்போது அமுலுக்கு கொண்டுவந்தால் பஞ்சம் ஏற்பட்டுவிடும்.

SRI S. LAZAR : How is the response from the consuming public in the matter of taking to hand-pounded rice?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : My own experience has been only those who are confined in jails and hospitals are taking to this. But people outside are not taking to this as freely as one would expect them to do.

### *State Bank of India*

* 109 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of branches of the State Bank of India in our State;

(*b*) the volume of business transacted by the Government through these Banks; and

[14th February 1958

(c) the relationship between the Government and these Banks?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Forty-one as on 1st January 1958.

(b)—

| Year. | Receipts. | Disbursements. |
|---|---|---|
| | Rs. IN LAKHS. | Rs. IN LAKHS. |
| 1955 .. .. | 53,00 | 39,84 |
| 1956 .. .. | 61,93 | 46,07 |

(c) According to section 21 of the Reserve Bank of India Act, 1934, the Reserve Bank of India are the Bankers of the Government. With reference to section 45 of the Reserve Bank of India Act, 1934, read with the third schedule thereto, the State Bank of India are the sole agents of the Reserve Bank of India at all places where there is a branch of the State Bank of India, and where there is no branch of the banking department of the Reserve Bank of India. The State Bank do Government cash business as agents of the Reserve Bank of India. The Reserve Bank of India pay commission to the State Bank of India at the following scale calculated on the total of receipts and payments dealt with on Government account for the quinquennium 1st April 1955 to 31st March 1960 :—

| | | |
|---|---|---|
| On the first Rs. 600 crores .. .. | 0·06 | of one per cent. |
| On the next Rs. 600 crores over Rs. 600 crores. | 0·04 | ,, |
| On the next Rs. 1,200 crores over Rs. 1,200 crores. | 0·02 | ,, |
| On the remainder .. .. .. | 0·01 | ,, |

SRI P. G. MANICKAM : ஸ்டேட் பாங்கின் மூலமாக விவசாயிகளுக்கு அவர்கள் செய்யும் பயிர்களை ஈடுவைத்து கடன் கொடுக்க ஒரு திட்டம் இருப்பதாகத் தெரிகிறது. அது எந்த முறையில் நடைபெறுகிறது என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஸ்டேட் பாங்கின் மூலமாகச் செய்யப்படவேண்டுமா ? என்கிற சர்ச்சை தீர்ந்து ரிசர்வ் பாங்கு மூலமாகச் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருப்பதாக எனக்குத் தெரிகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is there any proposal to extend these branches to all taluk headquarters?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is a proposal under consideration to open branches in 17 more places. I think these may cover some of the taluk headquarters also.

SRI R. SRINIVASA IYER : Now that the State Bank branches opened in almost all places where there are sub-treasuries, is there any proposal to transfer or take over experienced shroffs in treasuries to the State Bank branches?

14th February 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think we can interfere with the recruitment of staff in the State Bank of India. That is a free institution and I do not think we can impose our own staff on it.

SRI A. R. MARIMUTHU : கனம் சபாநாயகர் அவர்களே, கிராமாந்திரக் கடன் வசதிகளைப் பெருக்குவதற்கு இப்போது ஸ்டேட் பாங்கின் மூலமாக வசதி செய்யப்பட்டு வருகிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

*Tuberculosis Sanatorium*

* 110 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state— 9 a.m.

(*a*) whether he visited recently the newly built Tuberculosis Sanatorium at Caper Quarry at Cuddalore;

(*b*) whether the Government have received any representation for the grant of any subsidy for its maintenance; and

(*c*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) The matter is under consideration.

SRI A. GOVINDASAMY : இதை பரிசீலிப்பதாகச் சொன்னார்கள். இந்த ஆஸ்பத்திரியை நடைமுறைக்குக் கொண்டுவருவதற்கு அரசாங்கம் உடனடியாக நிதி அளிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த ஆஸ்பத்திரியின் செலவு விஷயமாக ஜில்லா கமிட்டி, "ரெக்கரிங், நான்-ரெக்கரிங்" என்று புள்ளி விவரங்கள் அனுப்பியிருக்கிறார்கள். "டைரக்டர் ஆப் மெடிகல் சர்வீஸ்" அனுப்பிய புள்ளி விவரம் அதிகமாகயிருக்கிறது. கட்டிடங்களை ஒரு இஞ்சினியர் பார்வையிட்டு "ரிப்போர்ட்" செய்யும்படிக் கேட்டிருக்கிறோம். நடவடிக்கை எடுக்கப்பட்டுத்தான் வருகிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI : சென்னையில் ஒரு ஐரோப்பிய க்ஷய ரோக நிபுணர் வந்திருப்பதாகவும், தீராத க்ஷயரோக வியாதிகளைத் தீர்த்து வைப்பதாகவும் சொல்லப்படுகிறது. அவர் மூலமாக எத்தனை நோயாளிகளுக்கு நிவாரணம் அளிக்கப்பட்டிருக்கிறது ?

MR. SPEAKER : மூலக் கேள்விக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : தென் ஆற்காட்டுக்கு அவர் வரவில்லை.

*Silk Weavers' Co-operative Society*

* 111 *Q.*—SRI K. ANBAZHAGAN (on behalf of Sri M. P. Subramaniam) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Deputy Registrar of Co-operative Societies, Salem, has received recently any application from the Silk Weavers' Co-operative Society, Chinthamaniyur village, Omalur taluk, Salem district, for registration; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir. But Deputy Registrar, Dharmapuri, has formulated proposals for the organization of a Silk Weavers Society at Chinthamaniyur.

(b) Steps are being taken for the registration of this society.

*Community Projects*

* 112 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether the Government have examined the Report of Dr. B. Metha's Committee on Community Projects; and

(b) if so, the changes to be made in the working of Community Projects.

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The report is under examination.

SRI N. K. PALANISAMI : அவர்கள் சிபார்சில், நிர்வாகத்தில் கலெக்டர்களுக்கு "பார்மல்" ஆக இருக்கக் கூடிய அதிகாரங்களைத் தவிர, அதிகாரிகளைத் தண்டிப்பதற்கும் அதிகாரம் இருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பதை இந்த சர்க்கார் ஏற்றுக் கொள்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுதுதான் இது பரிசீலனையில் இருப்பதாகச் சொன்னேன்.

*National Extension Schemes*

* 113 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) the reason why the National Extension Service Schemes have not been implemented so far in the Villupuram taluk; and

(b) whether the Government propose to include the Kandamangalam, the Vikravandi and the Kanchanur Blocks, South Arcot district, on 1st April 1958 under the National Extension Service Scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No particular reasons, Sir.

(b) The claims of this area, as also those of others not so far selected, will be duly considered when the Government of India next allot National Extension Service Blocks to this State.

* 114 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government propose to extend the National Extension Service Scheme to the entire State within the Second Five-Year Plan period?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI A. GOVINDASAMY : விழுப்புரம் தாலூகாவில் இதுவரையிலும் தேசீய விஸ்திரிப்பு திட்டம் வராமலிருப்பதற்கு எந்த விதமான காரணமும் இல்லையென்று சொன்னார்கள். ஆனால், வருகின்ற 1958 ௵ ஏப்ரல் ௴ 1ம்

14th February 1958]

தேதியிலாவது விழுப்புரம் தாலூகாவில் என்னுடைய தொகுதியை எடுத்துக் கொள்வார்களா ? நேற்றைய தினம் அங்கத்தினர்களுடைய ஒத்துழைப்பு வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஒத்துழைப்புத் தேவையானால், இதை உடனடியாக எடுத்துக் கொள்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிப் பார்க்கப் போனால் என்னுடைய தொகுதியான பொள்ளாச்சியில் எந்தவிதமான அபிவிருத்தித் திட்டமும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. ஆகையால் நான் இதிலே ஒத்துழைக்க முடியாது என்று சொல்லமுடியுமா ? என்னுடைய தொகுதி இன்னாருடைய தொகுதியென்று இந்தப் பிரச்சனையை அணுகக்கூடாது. ஏதாவது ஒரு பகுதியை எடுத்துக்கொள்ளவேண்டும்.

*The Madras Prevention of Insults to National Honour Act, 1957*

* 115 *Q.*—SRI P. S. CHINNADURAI, SRI T. S. RAMASWAMY PILLAI AND SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons arrested so far under the Prevention of Insults to National Honour Act, 1957;

(*b*) the number convicted; and

(*c*) the number sentenced to imprisonment for more than six months?

THE HON. SRI BHAKTAVATSALAM : (*a*) 2,737.

(*b*) 2,713.

(*c*) 875.

* 116 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Dravida Kazhagamites who were convicted under the Prevention of Insults to National Honour Act, 1957, for burning copies of the Constitution of India?

THE HON SRI M. BHAKTAVATSALAM : 2,713.

* 125-D. *Q.*—SRI M. P. SARATHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the total number of persons arrested and convicted under the Prevention of Insults to National Honour Act, 1957; and

(*b*) the steps taken by the Government towards the eradication of castes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 2,737 persons were arrested, and 2,713 persons were convicted, under the Prevention of Insults to National Honour Act, 1957.

(*b*) The Government have ordered that no mention of caste or community, other than the Scheduled Castes, Scheduled Tribes and Backward Classes, should be made in official documents and records. In the matter of recruitment to the public services, there

is now no reservation of appointments for any community other than the Scheduled Castes, the Scheduled Tribes and Backward Classes.

The caste problem is mainly a social problem which cannot be solved by statute alone. The Government hope that the problem will disappear gradually with the increasing spread of education and the establishment of a socialistic pattern of society.

SRI M. P. SARATHI : இம்மாதிரித் தொந்தரவுகள் ஏற்படாமல் இருக்க ஜாதிப் பெயரைப் போட்ட போர்டுகளை போடக்கூடாது என்று சர்க்கார் சட்டம் இயற்றுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போர்டு போடுவது வேறு விஷயம். போர்டில் ஜாதிப் பெயர் போடுவது பற்றி இங்கே அபிப்பிராய பேதம் தெரிவிக்கப்பட்டது.

SRI P. S. CHINNADURAI : கைது செய்யப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கைக்கும், ஆறு மாதத்திற்கு மேலே தண்டிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கைக்கும் வித்தியாசம் காணப்படுகிறது. அதாவது ஆறு மாதத்திற்கு மேல் தண்டனை விதிக்கப்பட்டவர்களின் தொகை குறைவாகவும், மொத்தம் தண்டிக்கப்பட்டவர்களின் தொகை அதிகமாகவும் காணப்படுகிறது. தண்டனைக் காலம் மூன்று வருடம் என்று சட்டத்தில் சொல்லியிருக்கிறது. தண்டனை கொடுப்பது சம்பந்தமாக சர்க்கார் ஏதாவது நடவடிக்கை காட்டுகிற கொள்கையை அனுஷ்டிக்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இவ்வளவுகூட அனுபவம் இல்லை என்று தோன்றுகிறது. இந்த சட்டசபை சட்டத்தைத்தான் இயற்றுகிறது. சட்டத்தின் பெயரால் அரசாங்கம் நடவடிக்கை எடுக்கிறது. நீதிபதி தண்டனை கொடுக்கிறார். நீதியும் நிர்வாகமும் பிரிக்கப்பட்டிருக்கிறது. நீதி செலுத்துகின்றவர்களுக்கும் அரசாங்கத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. சட்டத்தில் அதிகபட்ச தண்டனை குறிப்பிடப்பட்டிருக்கிறது. குறைவான தண்டனை கொடுப்பதோ, அதிகமாகக் கொடுப்பதோ நீதிபதியின் அபிப்பிராயத்தைப் பொறுத்ததாக இருக்கிறது.

SRI T. S. RAMASWAMY PILLAI : அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது, பட்டியல் ஜாதியினரையும், பிற்பட்ட வகுப்பினரையும் மட்டுமே சர்க்கார் தஸ்தாவேஜுகளில் குறிப்பிடவேண்டுமே தவிர, வேறு இதர ஜாதியினரைக் குறிப்பிடக்கூடாது என்று கூறுகிறார்கள். அத்தாட்சிப் பத்திரங்களில்கூட அவர்களுடைய ஜாதியின் பெயரை அதாவது " பறையன், புலையன் " என்று கூறப்படுவதை நீக்கியிருக்கிறார்களா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர்கள் ஒரு வாதத்தைச் சொன்னார்கள், அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். பட்டியல் ஜாதியில் யார் சேர்ந்தவர்கள், யார் சேராதவர்கள் என்ற பிரச்னை அப்போதைக்கப்போது பரிசீலிக்கப்பட்டு வருகிறது. சிலசமயம் தவறுதலாக பட்டியல் ஜாதியில் சேர்க்கப்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, ஸெர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்போது, எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்று போட்டுவிட்டால், பட்டியல் ஜாதியைச் சேர்ந்தவர்களா இல்லையா என்று தெரிந்துகொள்ளலாம்.

SRI A. GOVINDASAMY : திராவிட கழகத்தினர் அரசியல் சட்டத்தைக் கொளுத்தினதாகவா, அல்லது நகலைக் கொளுத்தினதாகவா சர்க்காருக்கு தகவல் கிடைத்தது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் நீண்ட அனுபவம் பெற்றவர். சட்டம் என்பது ஒன்று. சட்டத்தின் நகல் என்றால் எனக்குப் புரியவில்லை. அசல் சட்டம் எங்கே இருக்கிறது. அசல் சட்டம் சட்டசபையில் இருக்கிறதா என்று கேட்கிறேன் ?

14th February 1958]

**SRI A. A. RASHEED : What is the amount of fine collected from the prisoners ?**

**THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry, I do not have any information just now.**

**SRI S. B. ADITYAN :** ஆறு மாதத்திற்கு மேலாக 875 பேர்களைத் தண்டித்து இருப்பதாகச் சொன்னார்கள். ஆறு மாதத்திற்கு மேலாக இருந்தால் அதிகபட்சமான தண்டனை எவ்வளவு கொடுக்கப்பட்டது ? இரண்டு ஆண்டு தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது அல்லவா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கொடுக்கப்பட்டிருக்கிறது என்றுதான் நினைக்கிறேன். என்னென்ன தண்டனை கொடுக்கப்பட்டது என்பதைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

**SRI K. ANBAZHAGAN:** அரசியல் போராட்டங்களில் ஈடுபட்டவர்களிலே, பலர் கைது செய்யப்பட்டும் தண்டிக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டதால், அவர்களைச் சிறையில் வைத்திருப்பது அரசாங்கத்திற்கு வீண் செலவாதலாலும், அரசியல் போராட்டங்களில் ஈடுபட்டவர்களை அடிக்கடி விடுதலை செய்வதுதான் ஜனநாயகப் பண்பாதலாலும், அவர்களை விடுவிக்க அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டமிருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அரசியல் பெயரைச் சொன்னாலும் குற்றம் குற்றமே. அந்தக் குற்றத்திற்குத் தண்டனை கொடுக்க வேண்டிய ஏற்பாட்டைதான் செய்யவேண்டும். விடுதலை செய்யப்படுவது என்பது, நேற்று கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னதுபோல் அந்தந்த சந்தர்ப்பத்தைப் பொறுத்தது.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR :** இந்த அரசியல் சட்டத்தை எரித்தவர்களுக்கு அரசாங்கம் கடுமையான தண்டனை அதாவது என் தூக்கு தண்டனை கொடுக்கக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன் ? 9-10 a.m.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கேள்வி நேரத்திலே அதை கேட்கக்கூடாது. கோர்ட்டிலே அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

*Medium of instruction in colleges*

* 117 *Q.*—SRI A. VEDARATHNAM AND SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to introduce Tamil as the medium of instruction in colleges; and

(*b*) if so, when and in which colleges?

THE HON. SRI C. SUBARAMANIAM : (*a*) & (*b*) The question is under consideration.

* 118 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have taken any decision in regard to the medium of instruction in colleges; and

(*b*) the steps taken to implement it?

THE HON. SRI C. SUBRAMANIAM : The same answer as given to Question No. 117 applies to this question also.

[14th February 1958

SRI K. VINAYAKAM : What is the reaction of the University authorities as far as the introduction of Tamil as the medium of instruction in the Universities is concerned?

THE HON. SRI C. SUBARAMANIAM : It is a conservative reaction.

SRI N. K. PALANISAMI : இந்த சட்டத்தைப்பற்றி ஹைகோர்ட்டையும் கலந்தாலோசித்து " அடானமஸ் பாடிக்கும்" நாம் தீர்மானம் நிறைவேற்றி தமிழ் போதனு மொழி ஆவதற்கு சட்டத்தைத் திருத்துவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த பிரச்னே அந்த அடிப் படையில் இல்லே என்று கருதுகிறேன். இது எல்லோருடைய ஒத்துழைப்பின் பேரில்தான் பெற முடியும். இதில் அவசரப்பட்டால் நன்மை விளேவதை விட தீங்குதான் விளேயும்.

*Tannery labourers at Pallavaram*

* 119 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government are aware of the strike by the tannery labourers at Pallavaram; and

(*b*) if so, the steps taken to settle the dispute?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) In its letter, dated 16th October 1957, the Pallavaram-Chromepet Tannery Workers' Union raised certain demands and informed the managements that if the demands were not conceded within 14 days, the workers would go on a strike. Subsequently on the intervention of the Labour Officer, Madras, an amicable settlement was reached.

SRI A. A. RASHEED : How long will the strike continue and what is the loss in production?

THE HON. SRI R. VENKATARAMAN : The strike did not occur.

*Selected seed farm of Valavanur*

* 120 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have any proposal to set up a selected seed farm at Valavanur;

(*b*) if so, when it will be implemented; and

(*c*) the number of acres of lands to be made available for this purpose?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes. There are proposals to start two twin farms at Valavanur.

(*b*) The farms are expected to be started before the end of March 1958.

(*c*) 99·57 acres.

14th February 1958]

SRI A. GOVINDASAMY : இதற்காக தனியாக ஒரு நிர்வாகஸ்தரைப் போட்டு கவனிக்கப்படுமா அல்லது அந்த வளவனூர் விவசாய டெமான்ஸ்ரேடரே இதை கவனித்துக்கொள்வாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனியாக மேற்பார்வை செய்ய சர்க்காரில் உள்ளவர் பொறுப்பேற்பார்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : How many seed farms are going to be started in the State and what is the allotment made for the purpose?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : For the Plan period the proposal is to start 360 State Seed Farms of 25 acres each and this year it is proposed to start 136 seed farms. I do not have with me the information regarding the total expenditure that has been provided for the purpose.

SRI A. GOVINDASAMY : இதற்காக நிலம் லீஸ்ஸுக்கு வாங்கப் பட்டதா அல்லது விலைக்கு வாங்கப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது குத்தகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. அதில் ஒரு பகுதி நல்ல நிலம் என்று கருதப் பட்டால் அதை அக்கொயர் செய்யப்படும்.

*Minimum wages*

* 121 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have any scheme to fix minimum rates of wages for workers in all the industries?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

* 122 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have taken any steps to fix minimum wages and dearness allowance for workers in textile mills started after 1955; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 125-F *Q.*—SRI S. PAKKIRISAMY PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether minimum wages have been fixed for the workers of tobacco industry; and

(*b*) if not, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The Government fixed minimum rates of wages for the employment in tobacco (including beedi-making) manufactory in December 1950 but the notification fixing the wages was quashed by the High Court on the ground that it was vague and did not comply with the provisions of he Minimum Wages Act, 1948. The Minimum Wages

[14th February 1958

Act has recently been amended extending the time-limit to fix minimum wages up to 31st December 1959. Proposals for the constitution of an Advisory Committee to advise the Government in fixing minimum rates of wages are under the consideration of the Government.

SRI N. K. PALANISAMI : எல்லாத் தொழிலாளிகளுக்கும் மினிமம் வேஜ் நிர்ணயிக்கப்படலாம் என்று சொல்லி இருக்கும் போது, சில தொழிற்சாலைகளில் அப்படி செய்யவில்லை. அந்த நிபுணர் அதை தொழில் கோர்ட் மூலமாக வற்புறுத்த சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சட்டங்கள் நிறைவேற்றினாலும், அதை அமுலாக்குவதுதான் மிகவும் முக்கியம். இதுதான் சர்க்காரின் கொள்கை. எல்லா தொழிலாளிகளுக்கும் உடனடியாக அடிப்படை கூலி நிர்ணயித்து விட்டாலும் அதை நிறைவேற்றப்படக் கூடிய காலங்களில் ஏற்படக்கூடிய தொல்லைகளை விட அதை அமுலாக்கும் காலத்திலேதான் தொல்லைகள் நிறைய ஏற்படுகின்றன.

SRI S. LAZAR : ஒரு சில தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பளம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த சம்பளத்துடன் பஞ்சப்படியும் சேர்த்து நிர்ணயிக்கப்படுகின்றதா இல்லையா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அது அந்தந்த இடத்தைப் பொறுத்துதான். சில இடங்களில் பஞ்சப்படி சேர்த்து அமைக்கப்பட்டிருக்கிறது. சில இடங்களில் அப்படி இல்லை.

SRI V. K. KOTHANDARAMAN : எந்தெந்த வேலை ஆட்களுக்கு குறைந்தபட்ச சம்பளம் நிர்ணயிக்கப்பட்டது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதை இப்பொழுது சொல்வதற்கில்லை.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether the Government have taken into consideration the question of fixing rates of minimum wages for the salt workers, palmyrah fibre and coir workers in the State?

THE HON. SRI R. VENKATARAMAN : The question of fixing minimum wages for salt workers is under the active consideration of the Government.

SRI P. S. CHINNADURAI : 1955-ம் ஆண்டுக்கு பிறகு துவக்கப்பட்ட பஞ்சாலைகளில் தொழிலாளிகள் மிகவும் குறைந்த சம்பளம் பெற்று வருகின்ற காரணத்தினால் அவர்களுக்கு அதிக சம்பளம் நிர்ணயிக்க அரசாங்கம் உத்திரவிடுவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு நல்ல பலம் பொருந்திய சங்கங்கள் இருக்கின்றன. அவைகளின் மூலமாக அந்த விஷயத்தை ரெப்ரசென்ட் செய்யலாம். அப்படி முடியவில்லை என்றால் அதை தொழில் கோர்ட்டின் மூலமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம்.

SRI S. PAKKIRISAMI PILLAI : பீடி தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பளம் நிர்ணயிக்க ஒரு கமிட்டியை அரசாங்கம் நியமித்திருக்கிறது. ஆயிரம் பீடிக்கு கூலி ரூ. 1–12–0 இருந்ததை இப்பொழுது ரூ. 1–8–0 ஆக குறைத்திருக்கிறார்கள். அந்த குறைந்தபட்ச சம்பளத்தை நிர்ணயிக்கும்போது இந்த விஷயத்தை மனதில் கொண்டு அதிகப்படியான கூலியை நிர்ணயிக்கவேண்டும் என்று சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ?

14th February 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தவிதமான புகார்கள் சர்க்காருக்கு வந்துக்கொண்டுதான் இருக்கிறது. எந்தெந்த இடங்களில் கூலி தகராறுகள் நடந்துக்கொண்டிருக்கின்றவோ அந்தந்த இடங்களில் தொழில் தகராறு சட்டத்தின் மூலமாக அட்ஜுடிகேஷனுக்கு விட்டிருக்கிறோம்.

SRI T. S. RAMASWAMY PILLAI : டிரான்ஸ்போட் டிபார்ட்மென்டைச் சேர்ந்த தொழிலாளர்கள் ஒரு பகுதியினருக்கு குறைந்த பட்ச சம்பளம் விகிதம் அமுல் நடத்தப்படவில்லை. அப்படியிருந்தால் அதை அமுலுக்கு கொண்டுவருவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த பகுதியினருக்கு அவ் வாறு கிடைக்கவில்லை என்று தெரியாது. தகவல் கொடுத்தால் சர்க்கார் அதை பரிசீலனை செய்யும்.

SRI R. KRISHNASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, விவசாயத் தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச கூலியை நிர்ணயம் செய் தால் நிலப்பிரச்னை எல்லாம் தீர்ந்து அவர்களின் கஷ்டம் நீங்கும் என்று சொல்கிறார்கள். ஆகவே இந்த விஷயத்தை ஆராய சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1959 டிசம்பர் மாதத்திற் குள்ளாக விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த சம்பள கூலி நிர்ண யிக்கவேண்டுமென்று சட்டம் இருக்கிறது. அதை சர்க்கார் மனதில் கொண்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்.

SRI N. K. PALANISAMI : ஒரு பகுதியில் இருக்கக்கூடிய தொழிலாளர் களுக்கு குறைந்தபட்ச சம்பளம் கொடுத்து இன்னொரு பகுதியிலுள்ள தொழி லாளருக்கு அவ்வாறு இல்லாமல் இருப்பது சரி அல்ல. அதை சர்க்கார் எல்லோருக்கும் ஒரேமாதிரியாக நிர்ணயித்து கொடுப்பதற்கு ஏற்பாடு செய் வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : சில தொழிற்சாலைகளிலே முத லாளிகள் தொழிலாளிகளிடம் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் பிரகாரம் கூலி கொடுப்பதில்லை. ரூ. $1\frac{1}{2}$ கொடுக்கவேண்டுமென்றால் அவர்கள் ரூ. 0–12–0 தான் கொடுக்கிறார்கள். இதை பரிசீலனை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதுமாதிரி ஒப்பந்தப்படி சம்பளம் கொடுக்காவிட்டாலும் அந்தப் பகுதியில் உள்ள லேபர் ஆபீசரிடம் தெரிவித்து தொழில் தகராறு சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும்.

SRI A. MARIAPPAN : சேலம் மாக்னஸைட் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிப்பதற்கு சர்க்கார் உத்தேசித்திருக்கிறதா ? 9–20 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்கு கனம அங்கத்தினர் தனிக்கேள்வி கேட்கவேண்டும்.

SRI K. B. S. MANI : 1959-ம் வருஷத்திற்குள் விவசாய கூலிகளுக்கு குறைந்தபட்சக் கூலி நிர்ணயிக்கப்படும் என்று கனம் மந்திரி கூறினார். தற்போதுள்ள சட்டத்தில் விவசாயக் கூலிகள் என்ற பிரிவினருடன் ஏர் வாரம்தார்களும் மற்ற வாரம்தார்களும் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். விவசாயக் கூலிகளின் குறைந்த பட்சக் கூலி நிர்ணயச் சட்டத்தில், வயல் களில் தினப்படியாக வேலை செய்யும் தினக் கூலிகளும் கூலிகள் பிரிவினருடன் சேர்க்கப்படுவார்களா ?

[14th February 1958

THE HON. SRI R. VENKATARAMAN : குறைந்தபட்சக் கூலி நிர்ணயச் சட்டத்தில் 'காஷூவல் லேபர்' என்று சொல்லப்படக் கூடியவர்களுக்காக சில விதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அந்த விதிகள் இப்படிப்பட்ட தினக் கூலிகள் எல்லோருக்கும் பொருந்தும். அந்த விதிகளின்படி இவர்களுக்கும் குறைந்தபட்சக் கூலி நிர்ணயம் செய்யப்படும்.

*Maccoronie*

* 123 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any research has been conducted in regard to the food value of maccoronie; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) No resarch has been conducted in this State. However, the Central Food Technological Research Institute, Mysore has conducted some research on maccoronie. As a result of their research the following details are known :—

Maccoronie is a mixture of tapioca flour, wheat flour or semolina and specially prepared groundnut cake flour in the proportion of 60 : 25 : 15. The nutritive value of this product on the above composition will be roughly twice that of rice, containing about 10·5 per cent of proteins, 1·9 per cent fat and 1·8 per cent minerals.

SRI N. K. PALANISAMI : இதை நமது ராஜ்ய மக்கள் உணவாக உபயோகிக்காவிட்டாலும், அப்பளம், பாயசம், ரொட்டி முதலியவைகளைத் தயாரிப்பதற்கு இது உபயோகப்படுவதால், சர்க்கார் இதை வாங்கி அவர்களுக்கு வினியோகிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இங்கே தேவை இருந்தால் அதை இங்கே கிடைக்கச்செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம்.

MR. SPEAKER : The hon. Member, Sri Sattanatha Karayalar is not in his seat. The question and answer will be printed in the proceedings.

*Periyar Project*

* 124 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there was a strike recently by labourers in Periyar Project working under the Patel Engineering Company;

(*b*) if so, their demands; and

(*c*) the steps taken to settle the dispute?

**14th February 1958]**

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir. The workers resorted to satyagraha with the object of preventing the management from removing the machinery, etc., from the workspot without settling their claims.

(*b*) The demands related to—

(1) bonus for 1955, 1956 and 1957,

(2) leave wages,

(3) overtime pay for work on weekly holidays,

(4) overtime pay for overtime work,

(5) conditions of Transfer of Workers,

(6) dismissal and termination of services of workers, and

(7) certificate of service.

(*c*) the Labour Officer, Madurai, held conciliation and brought about an amicable settlement on 14th December 1957 and the Satyagraha was called off.

MR. SPEAKER : The hon. Member Sri Viswanathan is not in his seat. The question and answer will be printed in the proceedings.

*Phosphatic Nodules*

* 125 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether phosphatic nodules are found in abundance in and around Korai village, Lalgudi taluk; and

(*b*) if so, the industrial use to which they are to be put?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Phosphatic nodules are found in appreciable quantity in and around the Uttaturkarai area in Tiruchirappalli district.

(*b*) Phosphatic nodules are chiefly used for the manufacture of fertilizers. They are also used as raw materials for the preparation of phosphoric acid and several salts of phosphorus, especially those of sodium, pottassium and ammonium.

*Removal of caste names*

* 125-C *Q.*—SRI M. P. SARATHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons arrested so far in the agitation carried on by the Dravida Kazhagamites bfore the Murali Cafe, Triplicane, Madras, for the removal of the caste name from the sign board of the hotel;

(*b*) the number of cases launched in this connection ; and

(*c*) the approximate additional expenditure incurred by the Government thereby?

[14th February 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) Nine hundred and sixty-two persons were arrested in connection with the agitation before the Murali Cafe, Triplicane, Madras, all of whom were prosecuted.

(c) No additional expenditure was incurred by the Government in connexion with the agitation.

SRI A. GOVINDASAMY : "போர்டில் ஜாதிப் பெயர்களைப் போடும் ஹோட்டல்களுக்கு லைசென்ஸ் வழங்கமாட்டோம்" என்று கேரள சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அதை நம் சர்க்கார் பின்பற்றுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த சர்க்காருக்கு என்னென்ன வேண்டுமென்று தோன்றுகிறதோ அவைகளையெல்லாம் இது செய்யும். இன்னொரு சர்க்கார் செய்வதைப் பார்த்து இந்த சர்க்கார் எதையும் செய்யவேண்டிய அவசியம் இல்லை.

SRI A. V. P. ASAITHAMBI : நமது ராஜ்யத்திலுள்ள பல நகர சபைகள் ஜாதிப் பெயர்களைக் கொண்ட தொழில் ஸ்தாபனங்களுக்கு—ஹோட்டல்கள் உட்பட—லைசென்ஸ் வழங்கக்கூடாதென்று தீர்மானங்களை நிறைவேற்றிக்கொண்டே வருகின்றன. அதன்பேரில் ஒரு பொதுவான சட்டத்தை இயற்ற சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் இது சம்பந்தமாக தனிக் கேள்வி கேட்டால் நிலைமையை விளக்கமுடியும்.

SRI A. VEDARATHNAM : வகுப்புப் பூசல்களைக் கிளப்பி அதன் மூலம் பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டு நாட்டில் அமைதியின்மையை விளைவிக்கும் ஸ்தாபனங்களை சட்ட விரோதமான ஸ்தாபனங்கள் என்று தீர்மானிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்தாபனங்கள் கடைப்பிடித்துவரும் கொள்கைகளுக்கும் எடுத்துவரும் நடவடிக்கைகளுக்கும் தகுந்தாற்போல் அரசாங்கம் சட்டமியற்றவோ நடவடிக்கை எடுக்கவோ செய்யும். ஆனால் சர்க்கார் பொதுவாக ஒரு கொள்கையை நிர்ணயிக்கமுடியாது.

SRI K. ANBAZHAGAN : ஜாதிப் பெயர்களை பொது இடங்களில் நிலை பெறச் செய்வதைப் பாதுகாக்க அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒன்றும் இல்லை.

SRI K. VINAYAKAM : Sir, is it not the fuudamental right of an individual as guaranteed under the Constitution to call his caste or his institution or any of his business place with the cafe name written on the name board and if any step is taken by the Government to ban such an action, will it not be against the spirit of the Constitution ?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : I have not examined that aspect of the question. But I do not think that anyone can claim such a fundamental right to have boards as they please.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: ஜாதிப் பெயர்களை ஒழிக்க வேண்டுமென்பதற்காக குறிப்பிட்ட ஒரு ஜாதிக்காரர்களின் ஹோட்டல் போர்டுகளிலுள்ள பெயர்களை அழிக்கிறார்களே தவிர, எல்லா ஜாதிப் பெயர்களையும் அழிப்பதில்லை. ஆகையால் இது ஜாதி ஒழிப்பாகுமா அல்லது வகுப்பு துவேஷத்தை உண்டாகுவதாகுமா என்று அறிய விரும்புகிறேன்.

14th February 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த இயக்கத்தை நடத்துகிறவர்களிடம் இந்தக் கேள்வியைப் போடவேண்டும்.

*Communal organizations.*

* 125-E *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) what action the Government propose to take against those organizations which create class and race hatred and thus disturb the public tranquillity in the State ; and

(*b*) what action the Government propose to take to abolish the different classes in Society ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The action taken against any communal organization depends on the nature of the activities of the organization. The Government have always taken prompt and effective action against such organizations whenever their activities are subversive of law and order, and threaten the peace and security of the State, and they will continue to do so.

(*b*) The Government have ordered that mention of the names of castes or communities other than the Scheduled Castes, Scheduled Tribes and Backward Classes, should be eschewed in official documents and records. In the matter of recruitment to the public services, there is now no reservation of appointments for any community other than the Scheduled Castes, Scheduled Tribes and Backward Classes.

The problem of caste and classes, however, is mainly a social problem which cannot be resolved in a day by executive or legislative action. The Government hope that with the increasing spread of education and the establishment of a socialistic pattern of society, it will gradually disappear.

SRI K. ANBAZHAGAN : தேசிய கௌரவப் பாதுகாப்புச் சட்டத்தை நிறைவேற்றியதன் மூலம் தேசிய கௌரவம் பாதுகாக்கப்பட்டிருக்கிறதா, அல்லது அதன் பாதுகாப்பு பாதிக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேசீய கௌரவத்திற்கு எப்போதும் யாராலும் எந்த விதமான ஹானியும் ஏற்படுத்த முடியாது. ஆனால் அந்த கௌரவத்திற்கு முரண்பாடாக நடந்து கொள்கிறவர்கள் மீது தண்டனை விதிக்கப்பட்டு வருகிறது.

SRI A. VEDARATHNAM : பள்ளி மாணவர்கள் தங்கள் விண்ணப்பத்தில் ஜாதியைக் குறிக்கவேண்டிய அவசியம் ஏற்படுவதால் அதை நிறுத்த அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதற்கு தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

**II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 *RE* THE FAILURE OF MONSOON IN THE NORTH ARCOT DISTRICT AND THE CONSEQUENT NEED FOR REMISSION OF LAND REVENUE AND THE POSTPONEMENT OF RECOVERY OF LOANS.**

MR. SPEAKER : I have received notice from the hon. Member Sri S. M. Annamalai, calling the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance The hon. Member will now make a brief reference to the matter.

SRI S. M. ANNAMALAI : Sir, I rise to call the attention of the Hon. the Minister for Revenue to a matter of urgent public importance, namely—

"The failure of monsoon in North Arcot district and the consequent need for remission of land revenue and the postponement of recovery of loans."

கனம் தலைவர் அவர்களே, இவ்வாண்டு வட ஆற்காடு மாவட்டத்தில் பருவ மழை தவறியதன் காரணமாக பயிர்கள் அனைத்தும் சாவியாகப் போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சிறு சிறு ஏரிகளில் ஏறத்தாழ 15—20 நாட்களுக்குப் போதுமான தண்ணீர்தான் வந்தது. அதன் காரணமாக, கிச்சிலிச் சம்பா பயிரும் அதை அடுத்து இரண்டாவது போக மாகப் பயிரிடக்கூடிய பயிரும் சாவியாகப் போகக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக் கிறது. சென்ற ஆண்டு இதே காலத்தில் கிச்சிலிச் சம்பா, 64 படி கொண்ட மூட்டை விலை ரூ. 23 ஆக இருந்தது. இவ்வாண்டு அதே அளவு கிச்சிலிச் சம்பா ரூ. 27–12–0 அல்லது ரூ. 28-க்கு விற்கிறது. இந்த நிலையில் கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைத்துப் பயிர்களுக்குப் பாய்ச்சுவதும் சாத்தியமில்லாமல் இருக்கிறது. ஏனென்றால் கிணறுகளிலும் தண்ணீர் இல்லை. இப்போது கிணறுகளை வெட்டுவது உசிதம் என்று கருதுவதற்கு ஹேது வான சூழ்நிலையும் இல்லை. காரணம், கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்கக்கூடிய பம்ப் செட்டுகளுக்கு அவசியமான மின்சாரத்தில் வெட்டு வந்திருக்கிறது. இந்த நிலையில் அந்த விவசாயிகளிடமிருந்து வசூலிக்க வேண்டிய நிலவரியை இந்த ஆண்டு தள்ளுபடி செய்யவேண்டுமென்றும், தக்காவிக் கடன்களை அவர்களிடமிருந்து திரும்ப வசூலிப்பதையும் ஒத்திப் போட வேண்டுமென்றும், அங்கே 64 படி கொண்ட நெல் மூட்டை ஏறத்தாழ ரூ. 27—28-க்கு விற்பதால் வட ஆற்காடு மாவட்டத்தில் உடனடி யாக நியாய விலைக் கடைகளைத் திறக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள் கிறேன்.

9-30 THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, in North Arcot district, the total average rainfall during the year 1957 was 31·71 inches as against the normal rainfall of 38·58 inches. The rainfall was not only below normal but also not widespread. Most of the rainfed tanks did not receive their normal supply in 1957 and the supplies received in tanks connected with anicut systems were inadequate in several taluks as there were no freshes in the Cheyyar and Palar rivers. Out of about 3 lakhs of acres of cultivable wet lands, an extent of about 61,100 acres was left uncultivated in the whole district. Major portions of wet lands in each taluk have been cultivated. All the cultivable dry lands have been cultivated.

The condition of standing crops in wet lands irrigated by private wells is fair for the present. It is reported that all private wells contain adequate supply and that therefore there is every possibility of the standing wet crops being harvested successfully. So far as the crops already harvested were concerned, the yield was good. Seasonal remission of land revenue will be called for only in cases of wet lands in which there has been a failure of crops for want of supplies in the irrigation sources concerned.

As regards dry lands, there is no need for remission as the rainfall received was useful for dry crops. Groundnut is the main dry crop, and it has yielded a fair outturn.

The prices of foodgrains do not show any fall even during the harvest season and this has benefited the agriculturists financially. The standing crops are also reported to be in a good condition. In the circumstances there is no need to postpone the collection of loan instalments.

## III.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER *RE.* WAIVER OF NOTICE UNDER RULE 94.

MR. SPEAKER: I have to call the attention of the Government to Rule 94 and Rule 107 of the Assembly Rules. Rule 94 makes it clear that six days' notice should be given to the House of all Bills, unless, of course, the Speaker waives notice. I have in this case waived notice, but member after member has complained to me that sufficient notice has not been given to him, and that in some cases only 24 hours' notice has been given. I waive notice now because I do not want to hold up the business of the House. I have written to the Leader of the House in this matter. I have written to the Government also a number of times that this application for waiver of notice must not be resorted to as a matter of course and that waiver of notice could be had only in extraordinary circumstances. Even the report of a Select Committee has got to be placed before this House five days before it is taken into consideration. I regret this is not being done. The report of the Joint Select Committee on the Bhoodan Yagna Bill was placed on the table only yesterday. I must say that I do not want to hold up the business of the House, but if this thing is going to be repeated, I shall in future refuse to waive notice, and the Government cannot blame the Speaker for holding up the business of the Government.

## IV.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS BHOODAN YAGNA BILL, 1957 (L.A. BILL NO. 15 OF 1957.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Mr. Speaker, Sir, I beg to present the report [a] of the Joint Select Committee on the Madras Bhoodan Yagna Bill, 1957 (L.A. Bill No. 15 of 1957).

---

a Printed as Appendix on pages 490–504 infra.

Mr. SPEAKER : Even in the case of Bills, which are to be referred to a Select Committee, sufficient opportunity must be given to the House to express its views. For, there are many members who may not be members of a Select Committee, and they would like to give their opinion before the Select Committee consider the Bills.

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, the hon. Member Sri N. K. Palanisami wants that the Madras Catering Establishments Bill, 1957, may be taken up to-morrow as the first item. I submit that the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958, may be taken up now. A motion will be moved for referring this Bill to a Joint Select Committee. This is a Bill very familiar to the House and, therefore, there may not be any difficulty. Next we may take up the Madras Prohibition (Amendment) Bill, 1958. This Bill also is intended to be referred to a Joint Select Committee. When both these Bills are disposed of, perhaps we may take up for discussion the Madras Catering Establishments Bill, 1957.

V.—MOTION UNDER RULE 21 (3) OF THE ASSEMBLY RULES.

The Hon. Sri C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, I move—

"That item No. IV (2), on the agenda, namely, The Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), and then Item No. II (3) The Madras Prohibition (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 2 of 1958) be taken up before item II (2), namely, The Madras Catering Establishments Bill, 1957 (L.A. Bill No. 18 of 1957)."

Mr. SPEAKER : Motion moved—

"That item No. IV (2), on the agenda, namely, The Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), and then item No. II (3) The Madras Prohibition (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 2 of 1958) be taken up before item II (2), namely, The Madras Catering Establishments Bill, 1957 (L.A. Bill No. 18 of 1957)."

After these two Bills are disposed of, if there is time, and if the House so desires, the Madras Catering Establishments Bill, 1957 (L.A. Bill No. 18 of 1957), will be taken up.

The motion was put and carried.

IV—GOVERNMENT BILLS—*cont.*

(2) THE MADRAS CULTIVATING TENANTS PROTECTION AND PAYMENT OF FAIR RENT (AMENDMENT) BILL, 1958[a]
(L.A. BILL NO. 1 OF 1958).

The Hon. Sri M. A. MANICKAVELU : Sir, I beg to move—

"That under Rule 138 of the Madras Assembly Rules, the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 24

---

a Published in the *Fort St.George Gazette* Extraordinary, dated 12th February 1958.

14th February 1958] [Sri M. A. Manickavelu]

Members (16 Members of the Assembly and 8 Members of the Council) to consider the Madras Cultivating Tenants Protection and payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), and that the following Members of this House be selected to serve on such a Joint Select Committee.

Sir, I shall give the list of Members later.

இந்த மசோதாவானது அவசரச் சட்டத்தை ஒரு சட்டமாக்க வேண்டிய ஒரு மசோதாவாகும். இது, முக்கியமாக கையேர் வாரம்தார், மாட்டு ஏர் வாரம் தார் என்று சொல்லப்பட்டு வருகிறவர்களை இந்த கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ஆக்ட், பேமென்ட் ஆப் பார் ரெண்ட் ஆகிய இரு சட்டங்களையும் மேற்படி வாரம்தாரர்களுக்கும் உரியதாக்கும் முறையில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்தக் கையேர் வாரம்தார்களும், மாட்டேர் வாரந்தார்களும் ஒரு விதமான பயிரிடுகிறவர்கள் ஆவார்கள். இவர்கள் ஒரு விசித்திரமான பயிர் செய்கிறவர்கள் என்று சொல்லலாம். வேறு பயிர் செய்கிறவர்களுக்குள்ள அம்சங்கள் இவர்களுக்கு கிடையாது. ஒரு நாள் இரண்டு நாள் வேலை செய்து விட்டுப் போகும் தொழிலாளர்கள் போலும் இல்லை. இவர்களின் தொழில் இரண்டுங்கெட்டான் போல் இருக்கிறது இவர்களுக்குள்ள ஊதியம் மகசூலிலிருந்து கொடுக்கப்படுகிறது. இவர்களின் தொழில்பயிர்த் தொழில்தான். ஆகவே அரசாங்கத்தின் நோக்கம் என்னவென்றால், இவர்களுக்கும் ஒரு நிரந்தரமான பாதுகாப்பு இருக்கவேண்டும், அவர்களை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக்கூடாது என்று மேற்படி இரண்டு சட்டங்களில் உள்ளதைப் போன்று "பிக்ஸிட்டி ஆப் டென்யுவர்"-ம், இவர்களுக்குப் போதுமான, நியாயமான ஊதியம் கிடைக்கவேண்டுமென்று பேர் ரெண்ட் சட்டப்படியுள்ள உரிமைகளும் இவர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று அரசாங்கம் கருதுகிறது. ஏற்கெனவே உள்ள அந்த இரு சட்டங்கள் படியள்ள உரிமைகளும், பாதுகாப்பும் இந்த கையேர் வாரம்தார்களுக்கும், மாட்டேர் வாரம்தார்களுக்கும் கிடைப்பதில்லை. ஆகவே இப்பொழுது கொண்டு வரப்பட்டுள்ள மசோதாவின் நோக்கம் அவர்களுக்கும் இம்மாதிரியான உரிமைகள் கிடைக்கவேண்டும் என்பதுதான். அதுதான் இந்த மசோதாவின் முக்கிய கருத்தாகும். இதில் ஒன்று கவனிக்க வேண்டும். இவர்கள் மற்றவர்களைப் போல் விவசாயிகள் அதாவது பயிரிடுகிறவர்களாக இல்லாவிட்டாலும் இவர்களுடைய தொழிலும் விவசாயம்தான். இவர்கள் ஏதோ அந்த இடங்களில் உள்ள சம்பிரதாயப்படி பயிர் தொழிலை செய்து வந்தார்கள். நான் முன் சொன்ன இரண்டு சட்டங்களில் அவர்களுக்கு ஒரு வித ஆதரவும் இல்லை என்பதைக் கண்டுகொண்டு அவர்களை வெளியேற்ற அரம்பித்தார்கள். ஏனெனில், இப்பொழுது ஏதேதோ சட்டங்கள், நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் போன்றவைகள் வருகிறது என்று அவர்வரகள் கூடுமான வரையில் நிலங்களை தங்கள் சொந்த நிலங்களாக ஆக்கிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அவர்களை வெளியேற்ற ஆரம்பித்தார்கள். அதனால் அங்கு கொந்தளிப்பும் தகராறுகளும் ஏற்பட்டன. அதை சில அரசியல் கட்சிகள் பயன்படுத்திக்கொண்டு அதற்கு இன்னும் தூபம் போட்டுக்கொண்டிருக்கும் நிலையில், அங்கு நல்ல சூழ்நிலை இல்லாமல் அக்கிவிட்டார்கள். ஆகவே இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அரசாங்கம் சும்மா இருக்க முடியாது. பார்டி பாலிடிக்ஸ், கொந்தளிப்பு ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். அது அவசியமாகும். அது, சின்ன அளவில் இருந்தால் சாதாரண சட்டங்கள் மூலம் பார்த்துக்கொள்ளலாம். ஆனால் அது பெரிதாக இருந்தால், அதனால் விபரீத விளைவுகள் ஏற்படுமானால் கட்டாயம் அதில் அரசாங்கம் தலையிட்டே யாக வேண்டும். அந்த முறையில்தான் இந்த அவசரச் சட்டமும் கொண்டு வரப்பட்டது. அதையொட்டித்தான் இந்த மசோதாவும் இப்பொழுது இங்கு வந்திருக்கிறது. இந்தச் சட்ட விஷயமாக சாதாரணமாக

12-50 p.m.

9-40 a.m. இந்தச் சட்டத்தில் ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் நீதி மன்றம் அதை ஆராய்ந்து தக்க விளக்கம் கொடுக்கும். அந்த முறையில் விளக்கம் கொடுப்பதில் நீதி மன்றங்களில் ரொம்ப தாராளமான முறையில் இந்த சட்டத்திற்கு அவர்கள் வியாக்யானம் கொடுக்கின்றார்கள். சில சமயத்தில் சட்டத்திற்குள்ளாகவே நின்று சட்டத்திற்கு வெளியே போகாமல் கண்டிப்பாக இரண்டு வகையிலும் வியாக்கியானம் செய்யப்படுகிறது. எப்படியிருந்தாலும் சட்டத்திற்கு மேல் அவர்கள் விளக்கம் கொடுக்க முடியாது. இவ்விதம் அவர்களுடைய கை கட்டப்படுகிறது. இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் அரசாங்கம் பிரவேசித்து சட்டப்பூர்வமாக அப்போது இருக்கின்ற நிலைமையை அனுசரித்து வேண்டிய சட்டத்தை ஏற்படுத்துகின்றது. அதே மாதிரியாகத்தான் இந்தச் சட்டத்திலே ஒரு சந்தேகம் ஏற்பட்டு பல வியாக்கியானங்கள் சொல்லப்படுகிறது. இவைகள் அரசாங்கத்தினுடைய முக்கிய நோக்கத்தை பிரதிபலிப்பதாக இல்லை. இதனுடைய முக்கியமான நோக்கம் என்னவென்றால் நிலத்தை பயிரிடுபவர்களுக்கு எல்லா உரிமையும் இருக்கவேண்டும், மற்றவர்களுக்கு இருக்கின்ற உரிமை இவர்களுக்கும் இருக்கவேண்டும் என்பதுதான். நியாயமான ஊதியம் கிடைக்கவேண்டும். அதற்காகத்தான் இரண்டு சட்டங்கள் இந்த மன்றத்தில் நிறைவேற்றினோம். அதனால் இம்மாதிரியான விவசாயிகளுக்கு இந்தச் சட்டங்கள் பிரயோஜனமில்லையென்றால் அது அரசாங்கத்தினுடைய நோக்கத்திற்கு எதிராக இருக்கின்றது. அரசாங்கம் இம்மாதிரியான விவசாயிகளுக்கு, அதாவது பிரத்தியேகமாக இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு, இந்த விசித்திரமான விவசாயிகளுக்கு இதனால் பிரயோஜனமில்லாமல் இருக்கின்றது. இம்மாதிரி விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்ற இரண்டு வார விவசாயிகள் எல்லா பிராந்தியங்களிலும் குறிப்பாக திருச்சிராப்பள்ளியில் அவர்களிடையில் கிளர்ச்சி ஏற்படக்கூடிய நிலைமை வந்ததால் அரசாங்கம் அதில் பிரவேசிதது அரசாங்கத்தினுடைய பொதுப்படையான முக்கியமான கோட்பாடை நிறைவேற்ற வேண்டி வருகிறது. அதனால்தான் இம்மாதிரிப்பட்ட சட்டங்கள் கொண்டு வரவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே இந்தச் சட்டத்தின் நோக்கம் என்னவென்றால் இம்மாதிரியான விவசாயிகள் அதாவது இந்த இரண்டு வார விவசாயிகளும் கல்டிவேடிங் டெனன்ட் என்கிற பிரிவில் வர வேண்டும் என்று ஒரு பிரிவு கூறுகிறது. இன்னொரு பிரிவு என்னவென்றால் கல்டிவேடிங் டெனன்ட்களுக்கு நியாய வாரச் சட்டத்தில் என்னென்ன உரிமைகள் கொடுக்கப்பட வேண்டும், அந்த உரிமைகள் எல்லாம் இந்த விவசாயிகளுக்கும் வழங்கப்படுகிறது என்பதுதான் இன்னொரு பிரிவு. இவ்விதம் இரண்டு ஷராக்கள் இருக்கின்றன. இன்னொன்று நியாய வரா ஊதியம் கொடுக்கிற வகையில் ஏற்கெனவே பழைய அடிப்படையில் மிராசுதாரே பயிர் செய்திருக்கலாம். சில இடங்களில் மிராசுதார் நிலங்களில் இந்த விவசாயிகளே பயிர் செய்திருக்கலாம். ஆகவே இந்த நியாய வாரச்சட்டத்தை அப்படியே அமுலுக்குக் கொண்டு வர முடியாது. இதற்கு முன்னால் மிராசுதார் பயிர் செய்திருந்தால் அதில் மிராசுதார் என்னென்ன செலவுகள் எல்லாம் செய்திருந்தாரோ அந்தச் செலவை எல்லாம் எடுத்துக்கொள்ளலாம். மிச்சத்தில்தான் பிரித்துக் கொடுக்க முடியும் என்றிருக்கிறது. ஆகவே தற்காலிகமாக இதில் அவர்களுக்கு ஒரு பாதகமும் இல்லாத முறையிலே செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் செலவு செய்ததை எடுத்துக்கொள்ளலாம் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. நான் இந்த அளவுக்கு மேல் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. ஏனென்றால் இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு போகப் போகிறது. இன்னும் கொஞ்ச நேரத்தில் இந்த பொறுக்கு கமிட்டியில் யார் யாரெல்லாம் இருக்க வேண்டும் என்றுள்ள லிஸ்டை சமர்ப்பிக்கின்றேன். ஆகவே இந்த மசோதாவை இந்த வகையிலே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : Motion moved—

" That under Rule 138 of the Madras Assembly Rules the concurrence of the Council be obtained for setting up of a Joint Select Committee of both the Houses consisting of 24 Members (16 Members of the Assembly and 8 Members of the Council) to

14th February 1958] [Mr. Speaker]

consider the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), and that the following Members of this House be selected to serve on such a Joint Select Committee."

SRI N. K. PALANISAMI : Sir, I have given notice of an amendment for circulation of the Bill for eliciting public opinion.

MR. SPEAKER : I do not find it here. I have here only the amendments of Sri S. M. Annamalai to circulate the Bill for eliciting public opinion and of Sri M. Karunnanithi to refer the Bill to a Select Committee. I do not have the amendment of Sri Palanisamy. I do not know whether he has sent it or not.

Now that the Hon. the Minister for Revenue himself has moved for the reference of the Bill to a Select Committee, I think hon. Member Sri Karunanithi need not press his amendment.

SRI M. KARUNANITHI : Yes, Sir, I am not pressing my amendment.

MR. SPEAKER : Now, hon. Member Sri Annamalai may move his amendment.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"That the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), be circulated for eliciting public opinion."

SRI A. GOVINDASAMY : I second the amendment, Sir.

MR. SPEAKER : Amendment moved—

"That the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), be circulated for eliciting public opinion."

* SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, திருச்சி ஜில்லாவில் கிளர்ச்சி இருந்தது. ஆகவே அங்கு இருக்கக்கூடிய வாரம்தாரர்களுக்கு மட்டும்தான் இந்த மசோதா இருக்கிறதே ஒழிய பாக்கி இருக்கக்கூடிய பிரதேசத்திலுள்ள விவசாயிகளுக்கு இந்த மசோதாவினால் பயன் கிடைக்கிறது என்று சொல்ல முடியாது. திருநெல்வேலி ஜில்லாவில் போத்து வாரம் என்றும் தஞ்சாவூர் ஜில்லாவில் கரவனி விவசாயம் என்றும் பல முறை இருக்கின்றன. இதில் 3, 4 பேர்கள் சேர்ந்து நிலத்தை குத்தகைக்கு எடுத்துக்கொள்கிறார்கள். ஒருவன் பேரில் குத்தகை யிருக்க பாக்கியிருப்வர் கட்கு ஒன்றுமில்லை என்று சொல்லிவிடுகிறார்கள். இதனால் மற்ற விவசாயி கள் பாதிக்கப் படுகிறார்கள். இதனால் அங்கேயும் பல தகராறுகள் ஏற்பட்டிரு க்கின்றன. இன்னும் இது போன்ற பல வார முறைகள் அங்கு இருக்கின்றன. தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்தவரையில் அங்குள்ள புஞ்சைப்பிரதேசத்தில் பயிர் செய்யும் விவசாயிகளுக்கு வாரவிடுமுறையும் இல்லாமல் இருக்கின்றது. சில இடங்களில் பருத்தி, கடலை போன்றவைகளை விவசாயம் செய்து அதில் மூன்றில் ஒரு பங்கு அல்லது பாதிப்பங்கு என்று வாங்கப்படுகிறது. இதற் கெல்லாம் சட்டம் கொண்டுவரவேண்டும். ஆகவே எல்லா இடங்களுக்கும்

[Sri N. K. Palanisami] [14th February 1958

9-50 a.m. பொருந்தும்படியான நிரந்தரமான சட்டம் கொண்டு வரவேண்டுமேயொழிய ஒரு இடத்தில் மாத்திரம் தகராறு நடந்தது, அதற்காக சட்டம் கொண்டு வருகிறோம் என்று சொல்வது சரியல்ல. ஜனங்களுடைய நன்மையை பொதுவாக மனதில் வைத்துக்கொண்டு இம்மாதிரி திருத்தச் சட்டங்கள் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக "after the determination of the tenancy agreement" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் மிராசுதாரர்களுக்கும் விவசாயிக்கும் மெண்ட் முறை சரியாக நடப்பதில்லை. உண்மையாகவே விவசாயம் செய்தாலும் அதில் சேர்க்கப்படுவதில்லை. அதே மாதிரி கூலி வேலை செய்தாலும் சரியான படி கணக்குகள் எழுதப்படுவதில்லை. சாதாரணமாக இரண்டு பேர்களும் கையெழுத்துப் போட்டு தாசில்தார் அவர்களுக்கும் காப்பி கொடுக்கவேண்டு மென்றிருக்கிறது. அது சரியானபடி கொடுக்கப்படுவதில்லை. இதனால் சில இடங்களில் விவசாயிகளிடம் நிர்ப்பந்தமாக கையெழுத்து வாங்கப்படுகிறது. சட்டபூர்வமாக கையெழுத்துப் போட்டுக்கொடுக்க வசதி செய்து கொடுக்க வேண்டும். இம்மாதிரி செய்யவில்லை என்று சர்க்கார் மிராசுதாரர்களின் பேரில் கையெழுத்துப் போடவில்லை என்று நடவடிக்கை எடுப்பதில்லை. இதை மந்திரி அவர்களே சொன்னார்கள். பல இடங்களில் 10 பேர்களிடம் கையெழுத்து வாங்கி ஆர். டி. ஒக்களிடம் கொடுத்து குத்தகைக்காரன் அல்ல என்று நிரூபித்து விடுகிறார்கள். அதற்கு ஹைகோர்ட்டில் "ரிட்" மனு கொடுத்து விடுகிறார்கள். ரிட் மனு கொடுத்து விட்டு ரெண்ட் கோர்ட்டில் குத்தகை பாக்கி என்று கேஸ் போட்டு விடுகிறார்கள். குத்தகைக்காரர்களுக்கு சீட்டு கிடையாது. ரசீது கிடையாது. ஹைகோர்ட்டில் தீர்ப்பு ஆனால் கூட ரெண்ட் கோர்ட் மூலமாகப் பழைய பாக்கி என்று நிலத்திலிருந்து வெளியேற்றி விடுகிறார்கள். பூமியைத் தரிசாகப் போட்டு விடுகிறார்கள். இவ்வளவு தகராறு இருப்பதால், இப்போது வரக்கூடிய சட்டத்தில் ரெண்ட் கோர்ட்டில் அபிடவிட் ரெவினியூ கோர்ட்டில் அபிடவிட் போட்டவுடன் ரெண்ட்கோர்ட்டிலிருந்து முன்சீப் கோர்ட்டுக்கு மாற்றக்கூடிய முறையில் கொண்டு வரவேண்டும். இல்லா விட்டால் இந்த மாதிரித் தகராறினால் பூமி தரிசாகப் போடப்பட்டுவிடும். நாம் உணவு உற்பத்தியை அதிகரிக்கவேண்டுமென்று சொல்லும்போது, இதனால் உணவு உற்பத்தி குறையும். அதோடு தகராறு அதிகரிக்கும். அம்மாதிரி இல்லாமல், ஆர். டி. ஒ-விடம் அபிடவிட் கொடுத்தால் முன்சீப் கோர்ட்டுக்கு மாற்றும் வகையில் ஏற்பாடு செய்யவேண்டும்.

குறிப்பாக இன்றைக்கு நிர்வாகத்தில் இருக்கக்கூடியவர்கள், பல பேர் களுக்கு ஏராளமான பூமி இருக்கிறது என்பதை மனதில் வைத்துக்கொண்டு இம்மாதிரிச் சட்டங்களைச் செய்கிறோம். நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டு வரப்போகிறோம். நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டப் போகிறோம். இவை களையெல்லாம் அமுல் நடத்த இப்போது இருக்கக்கூடியவர்களுடைய மனப் பான்மை அவசியம் மாற வேண்டும். அந்த உத்தியோகஸ்தர்களுக்கு ஆலோசனைகள் மூலமாகவும் கண்டிப்பான உத்திரவுகள் மூலமாகவும் சர்க்கார் போடக் கூடிய சட்டங்களை அமுல் நடத்த வேண்டு மென்று சொல்லவேண்டும்.

உதாரணமாக 10 அல்லது 15 வருஷங்கள் ஒருவன் பூமியில் வேலை செய்கிறான் என்று வைத்துக்கொண்டால் அதற்கு ஒரு அக்ரிமெண்ட் கிடையாது. அபிடவிட் கொடுத்தவுடன் 4 சாட்சிகளுக்குப் பதில் 10 சாட்சிகளை கொண்டு வருகிறார்கள். கிராம உத்தியோகஸ்தர்கள் போன்றவர்கள், குத்தகைக்காரனுக்கு விரோதமாகச் சாட்சியம் சொல்லுகிறார்கள். அவர்கள் என்ன சாட்சியம் கொடுத்தாலும் எடுத்துக்கொள்ளாமல் மிராசுதாரர் பக்கம் சாட்சியத்தைத்தான் எடுத்துக்கொள்கிறார்கள். இப்படிப் பத்து வருஷங்களாக இருந்த குத்தகைக்காரர்கள் அப்புறப்படுத்தப்படுகிறார்கள். இவ்வளவுக்கும் காரணம் என்ன? இன்னும் பல நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டு வரப் போகிறோம். அதிகாரிகளிடம் மனமாற்றமில்லாமல் எந்தச் சட்டமும் நிறைவேற போவதில்லை. பேப்பரில் மட்டும் போட்டால் பிரயோஜனமில்லை. நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். அதற்கான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். அதற்கான வழி வகைகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

14th February 1958]

MR. S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய மசோதாவின் மீது என்னுடைய கருத்தைக் கூறுவதற்கு முன்பாக இந்த கையேர் வாரக்காரர் களுடைய அலுவல் என்ன ? மாட்டு வாரக்காரர்களுடைய அலுவல் என்ன என்பதைப்பற்றி அந்தப் பிராந்தியத்திலிருந்து வரக்கூடிய ஒருவன் என்ற முறையில் எனக்குத் தெரிந்த சில உண்மைகளை எடுத்துச்சொல்ல ஆசைப் படுகிறேன். சாதாரணமாக எல்லோருக்கும் தெரியும் திருச்சி ஜில்லாவிலே மொத்தம் நஞ்சை சாகுபடி செய்யக்கூடிய நிலத்தின் பரப்பை எடுத்துக் கொண்டால் 125,000 எக்கர் ஆகும். அதிலே இன்றையதினம் கை ஏர் வாரம் அல்லது மாட்டு வாரம் என்று சொல்லக்கூடிய முறையில் சாகுபடி செய்யக்கூடிய நிலத்தின் பரப்பு சுமார் 3,500 எக்கர் என்று சொன்னால் இங்கு இருக்கக்கூடிய அநேகருக்கு இது ஆச்சரியத்தை உண்டு பண்ணக் கூடும். அதிலும் குறிப்பாக இந்தமுறை நான் இப்போது சொல்லக் கூடிய ஒருசில கிராமங்களில் மட்டும்தான் இருக்கிறது என்பது உங்களுக்கு இன்னும் அதிக ஆச்சரியத்தைக் கொடுக்கக்கூடும். திருச்சி ஜில்லாவிலே, திருச்சி தாலூகாவிலே சிறுகமணி, அந்தநல்லூர் என்ற கிராமங்களிலும், லால்குடி தாலூகாவிலே கிளியநல்லூர், கரியமாணியம், சீதேவியம் என்ற கிராமங்களிலும், கரூர் தாலூகாவிலே நெரூர் என்ற கிராமத்திலும், அடுத்தாற்போல் முசிறி தாலூகாவிலே ஆமூர், குணசேகரம், சீனிவாசநல்லூர், தொட்டியம் என்ற கிராமங்களிலும். கடைசியாகக் குளித்தலை தாலூகாவிலே கிருஷ்ணராயபுரம், மகாதானபுரம், திம்மாச்சிபுரம், கருப்பத்தூர், கள்ளப்பள்ளி, வைகைநல்லூர், ராஜேந்திரம், பொய்யாமணி, நங்கவரம் என்ற இந்த கிராமங்களில்மட்டுமே இந்த முறையில் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது என்பதை இங்கே சொல்ல ஆசைப்படுகிறேன். (இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீ டி.டி. டேனியல் ஆசனத்தில் அமர்ந்தார்) அதிலும் குறிப்பாக குளித்தலை பகுதியிலே மட்டும் ஏறக்குறைய 2,500 எக்கர் இந்த முறையில் சாகுபடி செய்யப்படுகிறது. மீதியுள்ள 1,000 எக்கர்தான் முன்பு குறிப்பிட்ட மற்ற கிராமங்களில் இருக்கிறது. ஏதோ கை ஏர் வாரக்காரர், மாட்டு ஏர் வாரக்காரர் என்று சொல்லக்கூடிய நேரத்தில், இந்த இரண்டு வாரக்காரர்களும் ஏதோ தொன்றுதொட்டு பல நாட்களாக இருந்து வருகிறார்கள் என்று நினைத்தால் அது தவறு என்று சொல்ல ஆசைப்படுகிறேன். இந்தமுறை பல்லாண்டு காலமாக வந்திருக்கிறது. ஆனால் வாரம் என்ற வார்த்தை சமீபத்திலேதான் சேர்க்கப் பட்டிருக்கிறது என்று குறிப்பிட ஆசைப்படுகிறேன். இந்தவிதமாக வாரம் என்று அழைக்க ஆரம்பித்த பிற்பாடு, அதிலும் குறிப்பாக இந்த இரண்டு வகை சாகுபடியாளர்களுக்கும் உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது என்று தெரிந்ததும் ஏனைய சாகுபடியாளரும் வாரம் என்று சேர்த்துக்கொண்டு தண்ணீர் கட்டி வாரம், காவல் வாரம், அறுவடை வாரம், போர்டி வாரம் என்று இன்றையதினம் அழைத்துக்கொண்டு, அவர்களும் இதுபோன்று பங்கு கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று இந்தச் சபைக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்த கை ஏர் வாரம் என்று சொல்லக்கூடிய நேரத்தில் சாதாரண மாக ஒரு நிலத்தில் பாடுபடக் கூடியவர்களுக்கு தங்களிடத்தில் உள்ள கை ஏர்களைக் கொடுப்பாரானால் அதற்கு கை ஏர் வாரம் என்று அர்த்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேசமயத்தில் அந்த மாதிரி சாகுபடி செய் வதில் ஒருவர் தன்னிடத்திலுள்ள மாடுகளைக் கொடுத்து உழுவதானால் அதற்கு மாட்டு வாரம் என்று சொல்லப்படுகிறது என்பதை இந்தச் சபைக்கு நான் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆரம்ப முதற்கொண்டு நிலத்தைப் பண் படுத்தி சாகுபடிக்காகப் பாடுபடுபவன் நிலக்காரன் என்று சொல்ல ஆசைப்படு கிறேன். அதற்கு ஆகக்கூடிய செலவுகளை அந்த நிலக்காரன் செய்கிறான். வருஷந்தோறும் நல்லபடி சாகுபடி செய்ய நிலத்தை செப்பனிடச் செய்ய வேண்டியது ரொம்ப இருக்கிறது. அதற்கான செலவை நிலக்காரன் செய் கிறான் என்று சொன்னால் ஆச்சரியமாக இருக்கக்கூடும். 9-55 மு.ப.

இன்னும் அடுத்தபடியாக நாற்று விட ஆரம்பிக்கிறான் என்று சொன்னால் அந்த இடத்தில் கை ஏர் வாரக்காரர் என்று சொல்லக் கூடியவரோ அல்லது மாட்டு வாரக்காரர் என்று சொல்லக்கூடியவரோ அந்த இடத்திற்கு வருவதில்லை

என்று சொல்ல ஆசைப்படுகிறேன். அதிலும் சராசரி சுமார் மூன்று ஏக்கருக்கு ஒரு கை ஏர் வாரக்காரர் அல்லது மாட்டு வாரக்காரர் இருக்கிறார் என்பதை நாம் அறியவேண்டும். ஒருவன் 10 ஏக்கர் நிலம் வைத்திருப்பானால் குறைந்தபட்சம் 3 அல்லது 4 இதுபோன்ற வாரக்காரர்கள் இருக்கின்றார்கள். ஆனால் அந்த நிலத்தைப் பண்படுத்தி, நாற்று நடுவதற்கு நிலத்தை உழக்கூடிய நேரத்தில்தான் இந்த கை ஏர் வாரக்காரர் அல்லது மாட்டு வாரக்காரர் நிலத்திற்கு வந்து வேலை செய்ய ஆரம்பிக்கிறார்.

10-00 a.m. யார் ஒரு நிலத்தில் விதைக்கிறார்களோ அந்த நிலத்திலிருந்து அவர்களுக்கு விதைத்ததற்கு மாமூலாகக் கொடுக்கக்கூடிய ஒரு வழக்கம் இருந்து வருகிறது. அதாவது கலம் ஒன்றுக்கு ஒரு மரக்கால் நெல் அவர்களுக்கு அளிக்கப்படுகிறது. அதன் பிறகுதான் கையேறு மாட்டு ஏறு வாரம்தார்களுடைய வேலை ஆரம்பமாகிறது. நிலத்தில் தண்ணீர் பாய்ச்சி நிலத்தை உழ ஆரம்பிக்கிறார்கள். அப்படி உழக்கூடிய காலத்தில் 20 அல்லது 25 நாட்கள் வேலை செய்கிறார்கள். அப்படி வேலை செய்யக்கூடிய காலத்தில் அந்த வேலைகளை ஒரே நாளில் செய்து முடித்து விட முடியாது. ஒருவாரம் அல்லது ஒரு மாதம் வேலை செய்யக் கூடியதாக இருக்கும். எந்த வேலையைச் செய்தாலும் அதற்கு வாரம்தார்கள் என்ற பெயரைச் சேர்த்து வருகிறார்கள். இவர்கள் செய்யக்கூடிய வேலைகள் எல்லாம் பரம்பரையாக செய்து வந்த வேலைகள்தான். அதே மாதிரிதான் இந்த கையேர் மாட்டு ஏர் வாரம்தார்களும் வருகிறார்கள். அப்படி ஒரே நிலத்தில் ஒருவர்மட்டும் வேலை செய்வதில்லை, மூன்று அல்லது நான்கு வாரம்தார்கள் வேலை செய்கிறார்கள். அப்படி இந்த மூன்று அல்லது நான்கு வாரம்தார்களும் 25 அல்லது 30 நாட்கள் வேலை செய்துவருகிறார்கள். இப்படி அவர்கள் வேலை செய்வதற்கு அவர்களுக்கு வாடிக்கையாகக் கூலி கொடுத்துக் கொண்டு வருகிறார்கள். அல்லது வருஷக் கடைசியில் அவர்களுக்கு அவர்கள் செய்த வேலைக்குத் தக்கபடி கூலி கொடுக்கிறார்கள். இந்த 25 அல்லது 30 நாட்களுக்கு உடனடியாகக் கூலியைக் கொடுப்பதும் உண்டு. வருஷக் கடைசியில் அவர்கள் பரம்பரையாக இருப்பதால், கூலியைக் கொடுப்பதும் உண்டு. அவர்களுக்கு கூலியை உடன் காலத்தில் கொடுப்பதுடன் அதாவது ஒரு ஏக்கருக்கு ஒரு மரக்கால் அல்லது இரண்டு மரக்கால் என்று கொடுப்பதுடன் அதைத்தவிர சாப்பாட்டிற்கு இல்லாவிட்டால் சாப்பாட்டிற்கு வேண்டும் பொழுதும் கொடுக்கப்பட்டு வரும். இதை இந்தச் சமயத்தில் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அப்படி கையேர் வாரம்தார் வேலைகளைச் செய்யும்போது தங்களுடைய மாடுகளை உபயோகப்படுத்திக்கொண்டால் அவர்களை மாட்டுவாரம்தார் என்று அழைப்பது.

அதற்கு அடுத்தாற்போல் தண்ணீர் பாய்ச்சக்கூடிய வேலை. இப்படி தண்ணீர் பாய்ச்சும் வேலைக்கு என்று ஒரு சில கிராமங்களில் தனிப்பட்ட ஆட்கள் இருப்பார்கள். அவர்களுக்கு தண்ணீர் கட்டி என்று சொல்லப்படும். அவர்களுக்கும் வாடிக்கையாக மாமூல் உண்டு. மற்றும் அவர்களுக்கு சுவதந்திரம் என்றும் கொடுக்கப்படுகிறது. சில கிராமங்களில் கையேர் வாரம்தார்கள் தங்களுடைய மாடுகளைக் கொண்டுவந்து வேலை செய்தால் அந்த ஆளுக்கு வருஷக் கடைசியில் அறுவடைக் காலத்தில் கலம் ஒன்றுக்கு ஒரு மரக்கால் வீதம் நெல் கொடுக்கப்படுகிறது. மற்றும் அவர்கள் விதைத்தாலும் அவர்களுக்கு நெல் கொடுக்கப்படுகிறது. மற்றும் பயிர்களை காவல் புரியவேண்டியதாக இருக்கிறது. சாகுபடி செய்தால்மட்டும் போதாது. அந்தப் பயிரை சரியானபடி பாதுகாத்து வரவேண்டும். தானியங்கள் வெளிவந்தவுடன் அவைகளைப் பறவைகள் தின்னாமல் பாதுகாக்க வேண்டும். மற்றும் மாடுகளை விட்டு மேய்க்காமலும், திருடர்கள் வந்து பயிர்களை அறுத்துக்கொண்டு போகாமலும் பார்த்துக்கொள்ளவேண்டும். அந்த வேலைகளைச் செய்கின்றவர்கள் காவற்காரர்கள். இவர்களுக்கு பல கஷ்டங்கள் இருக்கின்றன. அதனால் அவர்களுக்குக் கூலி கொடுக்கவேண்டும். பல கஷ்டங்களுக்கு மத்தியில் அவர்கள் காவல் காத்து வருகிறார்கள். இந்த வேலைகளில் கையேர்வாரம்தார்களுக்கும் மாட்டு ஏர் வாரம்தார்களுக்கும்

14th February 1958] [Sri S. Lazar]

பங்கு கிடையாது. இந்த வேலைகளை அவர்களும் செய்ய மாட்டார்கள். பாரம்பரை பாத்தியம் உள்ளவர்கள் தான் இந்த வேலைகளைச் செய்வார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் இதற்கு என்று தனிப்பட்ட ஆட்கள் உண்டு. அவர்களுக்கு தனிப்பட்ட முறையில் கூலி கொடுக்கப்படுகிறது. அதற்கான படியையும் கொடுத்துவருகிறார்கள்.

அதற்கு அடுத்தாற்போல் நாற்றுப் பறிக்கக்கூடிய வேலை. அதை மற்றவர்கள் செய்ய முடியாது. இது சம்பந்தமான வேலைகளுக்கும் கையேர் வாரம்தாருக்கும் மாட்டு ஏர் வாரம்தாருக்கும் சம்பந்தம் கிடையாது. அந்த வேலைகளைச் செய்யக்கூடிய ஆட்களுக்கு தனிப்பட்ட முறையில தான் படி. கொடுக்கப்படுகிறது. அப்படி கூலி கொடுக்கும்போது சிலர் உடனடியாக கொடுத்து விடுகிறார்கள். சில இடங்களில் கூலிகளை வருஷக் கடைசியில் அறுவடை காலத்தில் கொடுக்கிறார்கள். இதுவும் பரம்பரை ஊதியமாகக் கொடுக்கப்படுகிறது.

அதற்கு அடுத்தாற்போல் அறுவடைக் காலம் வருகிறது. அறுவடை செய்யக்கூடிய நேரத்தில் அதற்கு என்று சிலரை நியமிக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய கூலி அவர்கள் செய்யக்கூடிய வேலையின் அடிப்படையில்தான் கொடுக்கப்படுகிறது. அறுவடையாகக்கூடிய நெல்லிலிருந்து இவ்வளவு என்று கொடுக்கப்படுகிறது. அங்கே வரக்கூடிய அளவைப் பொறுத்து கூலி கொடுக்கப்படுகிறது. அறுவடை காலங்களில் கையேர், மாட்டு ஏர் வாரம்தார்கள் உடல் உழைப்பைக் கொடுத்தால் அதற்குத் தக்க படி அவர்களுக்குத் தானியமாகவோ அல்லது வைக்கோலாகவோ கூலி கொடுக்கப்படும். சாதாரணமாக அவர்கள் அப்படி வேலை செய்வதில்லை. வேலை செய்தால் கூலி கொடுத்து விடுவது வழக்கம். இவ்விதம் அவர்களுக்குக் கூலி கொடுப்பது என்பது நில சொந்தக்காரர்களுடைய அபிப்பிராயத்தைப் பொறுத்து இருக்கிறது. குறிப்பாகச் சொல்லப் போனால் கையேர் வாரம்தார்களுக்கும் மாட்டு ஏர் வாரம்தார்களுக்கும் மூன்று வித வேலைகள் தான் உண்டு. தண்ணீர் பாய்ச்சக்கூடிய காலங்களில் தண்ணீர் பாய்ச்சுவது அப்படிச் சில கிராமங்களில் உண்டு. உழக்கூடிய காலங்களில் ஒன்று அவர்கள் மாடுகளைக் கொண்டுவராமல் உழுதால் அவர்களுக்கு கையேர் வாரம்தார்கள் என்றும், மாடுகளைக் கொண்டு வந்து கொடுத்தால் அவர்களுக்கு மாட்டு ஏர் வாரம்தார்கள் என்றும் சொல்வது உண்டு. அந்தக் காலத்தில் நல்ல வசதியுள்ளவர்கள் கூலிகளைக் கொடுத்து விடுவார்கள். மற்றவர்கள் வருஷக் கடைசியில் கூலியைக் கொடுப்பார்கள். வசதி இல்லாதவர்கள் இன்னும் அவ்வப்போது தானியங்களைக் கொடுத்துவிட்டு வருஷக் கடைசியில் அறுவடைக் காலத்தில் எல்லாக் கூலியையும் கொடுத்துவிடுவார்கள். மகசூல் காலங்களில் நிலத்திலிருந்து எவ்வளவு மகசூல் கிடைக்கிறதோ அதற்குத் தக்கபடி தானியங்கள் கொடுப்பது வழக்கம். அந்தக் காலத்தில் கலத்திற்கு ஒரு மரக்காலோ அல்லது அதற்கு மேலோ கொடுப்பது வழக்கம். தண்ணீர் பாய்ச்சுவதாக இருந்தால் அதற்கும் ஏக்கருக்கு ஒரு மரக்காலோ அல்லது அதற்கு அதிகமாகவோ கொடுப்பது வழக்கம். உடனடியாக கூலிகளைக் கொடுக்காவிட்டாலும் அந்தந்த பிராந்தியத்திலுள்ள பழக்க வழக்கங்களின்படி கொடுக்கப்படும். இந்த இடத்தில் ஒன்றை நான் ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். இப்படிக் கொடுப்பதை "க்ராப் ஷேரிங்" என்று வைத்துக்கொள்ளக்கூடாது. ஏதோ அவர்களுக்குச் சாகுபடியில் வரக்கூடிய அளவுக்குத்தான் பங்கு கொடுக்கப்படுகிறது. அதுவும் கூலியாகக் கொடுக்கப்படுகிறது. உள்ளபடியே அவர்களுக்குப் பங்கு கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. கூலி கொடுப்பது அந்தந்த நிலக்காரர்கள் கொடுப்பதுதான்.

நிலச் சொந்தக்காரர் எல்லோருமே நிலம் இருக்கக்கூடிய இடங்களில் இருக்கமாட்டார்கள். அவர்கள் வெளியூர்களில் போய் குடியிருந்தாலும் இருப்பார்கள். தங்களுடைய நிலத்தை குத்தகைக்கு விட்டுவிட்டு வேறு பிராந்தியங்களில் குடியிருப்பார்கள். அல்லது அங்கேயே குடியிருக்கக்கூடிய பணக்கார நிலச் சொந்தக்காரர்கள் தானே சாகுபடி செய்துகொள்ளக்கூடிய

நிலைமையில் இருக்கமாட்டார்கள். அப்படி அங்கேயே குடியிருந்து பணக்காரர்களாக இருக்கக்கூடியவர்கள்தான் மிராசுதாரர்களாக இருப்பார்கள். அவர்கள் அங்குள்ள வழக்கத்தையொட்டித்தான் கூலி கொடுத்து வருவார் என்பதை இந்தச் சமயத்தில் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

அடுத்தாற்போல இந்தச் சட்டத்தில் இருக்கக்கூடிய ஒரு சில முரண்பாடுகளை நாம் கவனிக்கவேண்டியதாக இருக்கிறது. இந்தச் சட்டத்தின்படி நிலத்தை உழுகிற கையேர், மாட்டு ஏர் வாரம்தாரர்களும் நாம் ஏற்கெனவே இயற்றிய சட்டத்தின் பிரகாரம் 60—40 பங்கு கொடுக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. இப்படிப்பட்ட கையேர், மாட்டு ஏர் வாரம் தார்கள் ஒரு நிலத்தில் ஒருவர்மட்டும் வேலை செய்யமாட்டார்கள். அவ் வேலைகளையெல்லாம் செய்வதற்கு குறைந்தது நாலைந்து பேர்களாவது இருக்க வேண்டும். அப்படியே நாலைந்து பேர்கள் ஒரு ஏக்கரில் வேலை செய்கிறார்கள். அதைப்போலவே இப்படிப்பட்டவர்கள் ஒருவரிடம்மட்டும் வேலை செய்து கொண்டிருக்கமாட்டார்கள். அவர்கள் பலரிடம் வேலை செய்து கொண்டிருப்பார்கள். அந்த நிலைமையில் நியாய வாரச்சட்டப்படி அவர்களுக்கு எப்படி வாரத்தை பிரித்துக் கொடுப்பது என்ற பிரச்னை எழுகிறது. இவர்களை யாரை யாருக்கு வேலை செய்யக்கூடிய விவசாயி என்று சொல்வது என்பதும் கஷ்டமாக இருக்கிறது.

அதைப்போலவே நியாயவாரச் சட்டப்படி விவசாயச் செலவு எல்லாவற்றையும் விவசாயியேதான் செய்துகொள்ளவேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனால் கையேர், மாட்டு ஏர் வார மசோதா பிரகாரம் அந்தச் செலவை அறுவடை காலத்தில் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற நிலை ஏற்படுகிறது. குறிப்பாக கவனித்தால் நிலத்தில் சாகுபடி செய்து அதன் பலனை விவசாயிகள் ஏற்றுக்கொள்வதற்குப் பதிலாக நியாயவாரச் சட்டத்தின் பிரகாரம் அவர்களுக்குக் கிடைக்கும் பயன் அவர்களுக்கு இப்பொழுது கிடைக்காமல் போய்விடுகிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆனால், இதை நான் குறிப்பிட்டுச் சொல்லும்போது ஏதோ நிலக்காரர்களுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுகிறேன் என்ற முறை
10-10 a.m. யிலே பேசவில்லை. பெரிய பணக்காரர்கள், ஓரளவு அதிகப்பட்ச நிலம் வைத்திருக்கக்கூடிய நிலப் பிரபுக்கள் சம்பந்தப்பட்ட வரையிலே இந்தச் சட்டம் அமுலாக்கப்படுவதிலே எந்தவிதமான ஆட்சேபனையும் எங்களுக்குக் கிடையாது. ஆனால், இதுபோன்று நிலத்தை வைத்திருக்கின்றவர்கள் எல்லாம், சிறு சிறு மிராசுதார்கள். ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல, 3,500 ஏக்கார்தான் இம்மாதிரி சாகுபடியில் இருக்கிறது என்று சொன்னால். நங்கவரம் போன்ற இடங்களில் பெரிய நிலப் பிரபு இருக்கலாம். மற்ற இடத்தில், மற்றொர் பெரிய நிலப் பிரபு இருக்கலாம். ஏனைய அத்தனைபேரும் சிறிய மிராசுதார்கள் என்ற முறையிலே. 5, 6, 10 ஏக்கரா வைத்திருந்தால் அதுவே அதிகம் என்று நினைக்கவேண்டும். நிலம் வைத்திருப்பவர்கள் அத்தனைபேரும், நூற்றுக்கு 90 பேர்கள் 10 அல்லது 10 ஏக்காக்களுக்குக் குறைவாக நிலம் வைத்திருக்கக் கூடியவர்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால், எந்தக் கொள்கையின் அடிப்படையில் சட்டம் கொண்டுவருகிறோமோ, யாருக்கு நல்லது செய்யவேண்டும் என்றும், நியாயம் கிடைக்கவேண்டுமென்றும் சட்டம் கொண்டுவருகிறோமோ அந்த வகையில் ஒரு சிலருக்கு நன்மை ஏற்பட்டாலும் வேறொரு சாராருக்குத் தீங்கு செய்கிறோம் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அரசாங்கத்தின் ஞாபகத்திற்கு கொண்டுவர ஆசைப்படுகிறேன்.

அரசாங்கம் சட்டம் கொண்டுவருவதிலே தவறு ஒன்றும் இல்லை. அதை பிரயோகப்படுத்தக்கூடிய முறையிலும் தவறு இல்லை. ஆனால், அதைத் தவறான முறையிலே கொண்டுசெல்லவேண்டுமென்ற நோக்கத்தினால் ஒருசில அரசியல் கட்சியினாலே அந்தப் பகுதியிலே பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டு, இரண்டு ஆண்டுக்காலம் ஆயிற்று, நல்ல நிலைமை ஏற்படுவதற்கு. இந்தச் சட்டம் வருவதற்கு முன்னால் ஒரு சுமூகமான

14th February 1958] [Sri S. Lazar]

நிலை ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால் அதை ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படி ஒரு சுமூகமான நிலை ஏற்பட்டிருக்கும்போது இந்தச் சட்டம் வந்தவுடனே அதையும் தவறான முறையில் உபயோகப்படுத்தவேண்டுமென்ற கெட்ட நோக்கத்தோடு ஒரு சில அரசியல் கட்சிகள், 3,500 ஏக்கராக்கள் இந்த முறை சாகுபடியில் இருந்தபோதிலும், 40 ஆயிரம், 50 ஆயிரம் ஏக்கராக்கள் இருக்கின்றன என்று ஒரு பெரிய பரபரப்பை உண்டுபண்ணி, வேலையில் ஸ்தம்பிதம் ஏற்படுவதற்கு முற்படுகிறார்கள். அரசாங்கத்தின் பேரில் குறை சொல்வதற்காக நான் இதைச் சொல்லவில்லை.

அரசாங்கம் கொண்டுவந்திருக்கும் சட்டம் நல்ல கொள்கை அடிப்படையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆனால், அதைத் தவறான முறையில் கொண்டு செல்ல ஒரு சில அரசியல் கட்சிகள் முனைகிறார்கள் என்றால், அதைப்பற்றி நாம் கவலைப்படவேண்டும். சில விவசாயிகளுக்கு நல்லதாக இருக்கும்பொது, அதேசமயத்தில் மற்ற சிலருக்குத் தீங்காகத்தான் இருக்கிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட்டு, அதிலேயும் குறிப்பாக இந்தச் சட்டத்திற்கு "ரிட்ராஸ்பெக்டிவ் எபெக்ட்" கொடுத்திருக்கிற காரணத்தால் தீங்கு இன்னும் அதிகமாக ஏற்பட்டிருக்கிறதென்பதை நான் குறிப்பிட்டுச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இன்னும் இதைப்பற்றி சில கருத்துக்கள் சொல்லவேண்டுமென்று நினைத்தபோதிலும் நேரம் இல்லை என்ற காரணத்தால் எனது வார்த்தையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI T. SAMPATH : Mr. Speaker, Sir, I welcome the motion of the Hon. the Minister for Revenue to refer this Bill to a Joint Select Committee. I am really glad about it because the various aspects of the Bill have to be very carefully considered. My hon. and esteemed Friend, Mr. Lazar, who spoke just now confined himself to the kaiyeruvaramdars and mattuvaramdars. The system is something similar to what is obtaining in our district—the pannaiyal system. What the Bill seeks to do is to confer lease-hold rights and also a right of share in the crops on certain people. There is a judgment of the High Court on the subject and we have to carefully consider all that. Therefore, I am glad that the Bill is going to be referred to a Select Committee. 10.13 a.m.

As I said, Sir, the Bill seeks to confer rights on a new class of persons who were originally not enjoying these. By conferring rights on a new class of persons, difficulties ought not to be created for the existing people. The sub-tenants have not undergone any suffering at all under the main Act. By this amending legislation, an independent legal status is sought to be given to the sub-tenants. By all means, we can give them this status. But at the same time, they must be made to undertake the liability also. In this connection, I would to refer to section 14 of Act XXIV of 1956 which says :

"The provisions of this Act shall not apply to any cultivating tenant who owns or cultivates either as tenant or as owner or as both an extent of land in excess of one veli, i.e., 6-2/3rd acres of wet land."

As per this provision, if he cultivates more than one veli, he is not entitled to the provisions of the Act. But a main tenant can circumvent this provision by resorting to a clever subterfuge. He can sub-lease the land to a number of sub-tenants which means a landlord will be successfully deprived of the legitimate share due to him. Further, the main tenant alone is made liable for eviction now for non-payment of rent. The sub-tenant can hold on to the land as he pleases, without paying rent at all. There must be a specific provision for enforcement of payment of rent even by the sub-tenant. If this is not done, the provisions in favour of the landlord will be rendered completely nugatory. I may illustrate it. Suppose a landlord obtains a valid order of eviction in a revenue court. He takes it for process. This can be successfully defeated in this way. The main tenant, viz., the lessor can say : "I have leased out the lands to 'B'". 'B' may say that he has sub-leased the lands to 'C'. 'C' may say the lands have been sub-leased to 'D'. Where are we to draw the line in such a case? Secondly, another important point is, how is this sub-tenancy to be recognized. Are the sub-leases to be recognized or not? Mere filing of affidavits will not do. Under the provisions of the Act, both the lessor and the landlord have to execute lease deeds and these lease deeds have to be deposited in Taluk Office. Merely recognizing an oral tenancy will not do. We have to make provision for recognizing the sub-leases in proper form. There must be documentary evidence. There must be provision for enquiry by a revenue court to determine who is the sub-tenant. All these points I have made only to draw the attention of the Members of the proposed Joint Select Committee to the need for carefully examining the Bill. The enactment when finally made should be perfectly understood and implemented. There should be no room for talks that there were locunæ in the Act and that the law court were giving judgments in their own way.

Lastly, Sir, in clause 5 (2) it is stated that a land-owner shall be entitled to take from the produce of the crops that were standing on the 5th January 1958, the cost of cultivation of the crops and had the balance shall be shared in accordance with the provisions of the Act. This provision is not clear. I am afraid, it will lead to complications. I understand troubles have arisen already. Therefore, the provision must be made more clear.

With these words, I would appeal to the Members of the Select Committee to consider my suggestion.

10-20 a.m. SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இப்போது கொண்டுவந்திருக்கும் இந்த நிலச்சீர்திருத்தச் சட்டத்தைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். எனக்கு முன் பேசிய சட்டமன்ற உறுப்பினர் ஸ்ரீ லாசர் கையேர் வாரம், மாட்டு வாரம் ஏதோ ஒரு சில கிராமங்களில் மட்டும் இருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் அவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். இந்தச் சென்னை ஆசியலாரும் கூட திருச்சி மாவட்டத்தில்தான் இப்படிப்பட்ட நிலைமை நீடிக்கிறது என்பதாக நினைத்துக்கொண்டு இந்தச் சட்டத்தைக் கொண்டுவருகிறார்கள்,

14th February 1958] [Sri S. M. Annamalai]

மாநில முதல் அமைச்சர் அவர்கள் என்னுடைய தொகுதிக்கு வந்திருந்த போது அவரிடத்தில் ஒரு சில மகஜர்கள் கொடுத்தோம். அந்த மகஜர்கள் மூலமாக இந்தச் சட்டம் அந்தப் பகுதியில் உள்ள நிலைமைக்கும் பொருத்த மாக இருக்கவேண்டுமென்று ஒரு சில திருத்தங்கள் கொடுத்திருந்தார்கள். நமது மாநில முதல் அமைச்சர் கூடஅப்போது கேட்டார். "உங்கள் மாவட்டத்தில் கூட கையேர், மாட்டு வாரம் எர் என்பது இருக்கிறதா ?" என்பதாக. வடாற்காடு மாவட்டத்தில் மட்டும் அல்ல, ஒவ்வொரு மாவட்டத் திலும் ஒவ்வொரு பெயரில் இந்த முறை நம் ராஜ்யத்தில் இன்னமும் வழங்கிக் கொண்டுதான் இருக்கிறது. இன்றைக்குக் கொண்டுவரக்கூடிய சட்டத்தின் மூலம் மாட்டு வாரம் கையேர் வாரம் என்ற பெயரளவில் அதை ஒடுக்கிவிடாமல், பரவலாக இந்த ராஜ்யத்தில் அமுலில் உள்ள இந்த மாதிரியான எல்லா முறைகளுக்கும் வசதியாக இருக்கும்படி செய்யவேண்டும் என்பதைத்தான் நான் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். விவசாயிகளுக்கு நன்மை செய்யவேண்டும் என்பது சர்க்காருடைய கொள்கையாதலால் இந் தச் சட்டத்தை எல்லா விவசாயிகளுக்கும் நன்மை அளிக்கும்வகையில் மாற்றியாகவேண்டும். இந்தக் கையேர், மாட்டேர் சட்ட அடிப்படையில் ஹைக்கோர்ட்டில் ரிட் போடவேண்டிய நிலைமையில் இருக்கிறது. டெனன்ஸ் அக்ரிமெண்டு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இப்போது என்ன செய்கிறார்கள் ? நிலச்சுவாந்தார்கள் ஒரு அக்ரிமெண்ட் தயார் செய்கிறார் கள். அதாவது நிலத்தில் பயிரிடக்கூடியவர்கள் நிலச் சொந்தக்காரர்கள் என்றால் நிலத்தில் யார் பயிரிடுகிறார்கள் என்பதைப்பற்றிய சர்ச்சை எழுந்துகொண்டிருக்கிறது. விவசாயி என்றால் யார் என்பது சரியாக விளக்கம் செய்யப்படவில்லை. 300 ஏக்கர், 500 ஏக்கர், 2,000 ஏக்கர் வைத் துக்கொண்டிருப்பவர்களும் தங்களை விவசாயி என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். பிளானிங் கமிட்டிக் கூட்டத்தில் கரிய கவுண்டர் அவர்களிடம் இதைப்பற்றிச் சொன்னேன். "நான் ஒரு விவசாயி" என்று சொல்லிக்கொள்ளலாமே தவிர "நீர் ஒரு விவசாயி அல்ல" என்பதாக. உண்மையிலேயே யார் நிலத்தில் நேரிடையாகத் தங்களுடைய சரீர உழைப் பைக்கொடுக்கிறார்களோ, நிலத்தில் இறங்கி உழுது பயிரிடுகிறார்களோ, அவர் களை விவசாயிகள் என்று கருதவேண்டும். வரப்பில் குடையைப் பிடித்துக் கொண்டு நின்றவண்ணம் "இப்படி ஓட்டு, அப்படி ஓட்டு" என்று அதிகார மிடுகிறவர்களை விவசாயி என்று ஒப்புக்கொள்ள நான் தயாராய் இல்லை. ஆகையால் விவசாயி என்ற வார்த்தை சட்டத்தில் வழுவழுவென்று இருக் கிறது.

அதற்கடுத்தபடியாக எந்த எந்த நிலத்தில் யார் யார் பயிர் செய்கிறார் கள் என்ற குறிப்பை அரசியலார் எடுக்கவேண்டும். நேரிடையாக நிலத்தில் உழுபவர்களை விவசாயி என்று வரையறுப்பதோடு, யார் யார் நிலத்தில் பயிர் வைக்கிறார்கள் என்கிற குறிப்பையும் தயார் செய்து கொடுத்தால் தான் உழைக்கின்ற விவசாயிகள் எல்லோருக்கும் நன்மை செய்தவர்கள் ஆவார்கள். அஸ்திவாரமாக இருக்கிற இந்த அடிப்படையான காரியங் களையெல்லாம் செய்யாமல் மேலே கட்டிடம் எழுப்புவது போல உயர்த்திக் கொண்டே போனால் நன்மை கிடையாது. இப்போது கவர்னர் உரையின்மீது கூட அவர் பேசி இருக்கிறார்கள். இன்னும் அதிகமான நிலம் வாங்கக் கூடாது என்பதற்காக ஒரு சட்டம் கொண்டுவரப்போவதாக. அதேசமயத்தில் ஒரு விஷயத்தை நாம் உணர்ந்து கொண்டாகவேண்டும். இப்போது எல்லா நிலங்களையும் விற்றுக்கொண்டு வருகிறார்கள். ஒருவர் இவ்வளவு தான் நிலம் வைத்துக்கொள்ளலாம் எனக் கட்டுப்படுத்துவதற்குச் சென்னை அரசியலார் சட்டம் கொண்டுவரப்போகிறார்கள் என அதற்கு முன் தங்க ளிடமுள்ள நிலங்களை விற்றுவிடவேண்டும் என்பதற்காக விற்று வருகிறார் கள். இப்படிப் பல பெரிய பெரிய நிலச்சுவாந்தார்களுக்கு முன் அறிவிப்பாக எல்லாவிதமான நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்வதற்கு உதவியாக இந்தச் சட்டம் வருகிறதே தவிர உண்மையில் நிலத்தில் உழைக்கின்ற விவசாயி களுக்கு நன்மை அளிக்கக்கூடியவகையில் சர்க்கார் எவ்விதமான நட வடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. விவசாயிகளுக்கு உண்மையிலேயே

நன்மை உண்டாகவேண்டுமென்று கருதி நான் 13 திருத்தங்கள் கொடுத்திருக்கிறேன். நான் ஒரு விஷயத்தைப்பற்றி ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். நான் ஒரு நிலத்தில் பயிர் வைத்தால் வாரத்தைக்கொடுக்க வேண்டுமென்று கேட்டால் உடனேயே க்ருமினல் செக்ஷன்படி டிரஸ்பாஸ் செய்தேன் என்று குற்றம் சுமத்தி பதினைந்து நாட்களுக்குச் சிறைவைக்கின்ற அளவுக்குத் தண்டனை தருகிறார்கள். ஆகையால் சட்டமன்ற உறுப்பினர் ஸ்ரீ கல்யாணசுந்தரனார் அதிகார பூர்வமாக மசோதா கொண்டு வரும்போதுகூட சிவில் கோர்ட்டுகளில் இருக்கின்ற வழக்குகளை மாற்றுவதற்கு ஒரு அபிடவெட் கொடுக்கும்படியாகக்கூட இருக்கவேண்டுமென்று சொன்னார். அதுகூடத் தவறு, தப்பிதம். இன்னார் இன்னார் இன்ன இன்ன நிலங்களைப் பயிர் செய்து வருகிறார்கள் என்பதற்கான குறிப்பு வாக்காளர் பட்டியலைப்போல தயார் செய்துவிட்டால் நன்மையாகப்போகும் என்பதைத்தான் நான் வற்புறுத்த விரும்புகிறேன். விவசாயிகளுக்கு எல்லா வகையிலும் நன்மை கிடைக்கும்படியாகச் செய்யவேண்டும் என்பதற்காகப் பல திருத்தங்கள் கொடுத்திருக்கிறோமே தவிர லாசர் உடையார் சொன்னது போல இப்பிரச்சனையை அடிப்படையாகக்கொண்டு அரசியல் கட்சிகள் கிளர்ச்சிகளை நாட்டில் உண்டாக்குவதற்கு முயற்சி செய்யவில்லை என்பதை இந்த மன்றத்தில் சொல்லிக்கொள்ளவிரும்புகிறேன். பலவிதமான கிளர்ச்சிகள் நாட்டில் உண்டாவதற்குக் காரணமாக இருப்பது ஆட்சியாளர்கள் தாம். இவர்களுடைய நிர்வாகம்தான். நான் அதைப்பற்றி பகிரங்கமாகச் சொல்லமுடியும். ஆட்சியாளர்கள் சட்டத்தைக் கொண்டுவரும்போது பல விதமான பேர்களுடைய யோசனைகளைக்கொண்டு, பலவிதமான எண்ணங்களைக்கொண்டு சட்டத்தைப் போடநினைக்கிறார்கள். அதனால் அவர்கள் போடுகின்ற சட்டத்தில் பல பொத்தல்கள் உண்டாகிவிடுகின்றன. அந்தப் பொத்தல்களை அடிப்படையாக வைத்துக் கோர்ட்டில் அந்தச் சட்டம் செல்லாது என்று தீர்ப்பளிக்கப்பட்டு விடுகின்றன. இப்படி உயர்நீதி மன்றத்தாரால் செல்லாது எனத் தள்ளப்பட்டிருக்கும் சட்டங்கள் எவ்வளவு என்று நம் எல்லோருக்கும் தெரியும். ஆட்சியாளர்கள் போடுகின்ற சட்டத்தை அவர்கள் சட்டை செய்கிறார்களா ? இல்லை. ஹைக்கோர்ட்டில் ரிட்டைப்போட்டு ஸ்டே ஆர்டர் உடனே பல வழக்குகளில் வாங்கி விடுகிறார்கள். ஆகையால் மிகவும் தயவு செய்து கேட்டுக்கொள்கிறேன். உண்மையாக ஆட்சியாளருக்கு விவசாயிகளிடத்தில் அன்பு இருக்குமானால், நல்லெண்ணம் இருக்குமானால், இப்பிரச்சனையை நன்றாகப் பரிசீலனை செய்து விவசாயிகள் யார் என்று தீர்மானித்துவிடவேண்டும். எந்த எந்த நிலங்களில் அவர்கள் பயிரிடுகிறார்கள் என்கிற பட்டியல் தயார் செய்யப்பட்டுவிடவேண்டும். அதற்குவேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

10-30 a.m. SRI G. ANNAMALAI MUTHU RAJA : கனம் சட்டமன்ற தலைவர் அவர்களே, இப்பொழுது திருச்சி ஜில்லாவைப் பொறுத்தவரையில் மாட்டு வாரம் கையேர் வாரம் என்ற சட்டம் கொண்டுவருவதற்கு மந்திரி சபை ஏற்பாடு செய்திருக்கிறது. இந்த கையேரு மாட்டு ஏர் வாரங்களைப்போல் பல வாரங்கள் இருக்கின்றன. சில வாரந்தார்களுக்கு பல தகராறுகளும் இருக்கின்றன. எருப்போடு என்ற இதிலும் சில தகராறுகள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் இப்பொழுது கொண்டுவரப்படும் சட்டத்தில் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் இதில் மேல் வாரம் குடிவாரம் என்றும் இருக்கின்றன. அவைகளையும் இந்தச் சட்டத்தின் கீழ் கொண்டு வரவேண்டும். இந்தக் குடிவாரந்தார்களுக்கும், மேல் வாரம் தார்களுக்கும் தகராறுகள் இருந்துக்கொண்டிருக்கின்றன. இவர்களுக்கு எவ்வித தகராறுகளும் இல்லாதவாறு இந்தச் சட்டத்தில் சேர்க்கவேண்டும் என்று கேட்டுகொள்கிறேன். அதோடு மிராசுதார்களும், நிலச் சொந்தக்காரர்களும் சொந்தச் சாகுபடி செய்வது கிடையாது, வாரத்திற்கு விடுவது தான் வழக்கம். இதில் வாரந்தார்களுக்கு மிராஸ்தார்கள் தான் அவர்கள் வேலை செய்வதற்கு ஏர் முதலியவைகளைக் கொடுப்பார்கள். இதில் சில

கிராமங்களில் மாட்டுவாரம்காரர்களுக்கு ஒரு கலத்திற்கு இரண்டு மரக்கால் கொடுப்பது வழக்கம். அதையே கைவாரமாக விட்டால் ஒரு கலத்திற்கு ஒரு மரக்கால் கொடுப்பார்கள் என்று இருக்கிறது. இதைத்தான் லால்குடி தொகுதியைச் சேர்ந்த ஸ்ரீ லாசர் சொன்னார். என்னுடைய தொகுதி ஆண்டநல்லூர். ஆகவே அரசாங்கம் இதையெல்லாம் கமிட்டியில் நன்றாக ஆலோசனைசெய்து மிராசுதார்களுக்கும் குடியானவர்களுக்கும் தகராறு இல்லாதவாறு இந்தச் சட்டத்தை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் சில நிலங்களில் வாழை மகசூல்களும் கொடிக்கால் மகசூல் களும் இருந்து வருகின்றன. குத்தகைதாரர்களுக்கு ஏற்கெனவே ஒரு சட்டம் இருக்கிறது. நிலச்சொந்தக்காரர்களுக்கும், குத்தகைதாரர்களுக்கும் தகராறுகள் இருந்துகொண்டேதான் இருக்கின்றன. சாதாரணமாக குத்தகை தாரர்கள் குத்தகை எடுத்துக்கொண்ட பிறகு அந்த நிலங்களில் வாழையைப் பயிரிடுவதற்கு அனுமதிப்பதில்லை. வாழைத் தோட்டம் போடுவதற்கு அவர் களுக்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். தமிழ் நாட்டிலே எல்லாத் திரு விழாக் காலங்களிலும், திருமணக்காலங்களிலும் மற்ற காரியங்களுக்கும் உபயோகப்படுத்தும் பொருளாகும். இது முக்கியமான உணவுப்பொருள் களில் ஒன்றாகும். ஆகவே இதைப் பயிரிடுவதற்கு யாதொரு தடையும் இல்லாமல் செய்து, இந்த நிலச்சொந்தக்காரர்களுக்கும், குத்தகைதாரர் களுக்கும் ஒத்துழைப்பு ஏற்படும்படியாகச் செய்வதற்கு ஏற்பாடு செய்து இந்தச் சட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதிலே குற்றம் குறைகள் இருந்தால், மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI R. SRINIVASA IYER: Sir, while supporting the Motion of the Hon. the Revenue Minister to refer this Bill to a Joint Select Committee, I desire to strike a note of warning about such legislation and piecemeal legislation like this. Sir, this Bill proposes to benefit certain classes of persons, viz., kaiaeruvaramdars, mattuvaramdars who are employed in a few thousands of acres in Tiruchirappalli district. The High Court has held that such classes of people are not 'cultivating tenants'. If this Bill or if the Ordinance I of 1958 was intended to restore peace, to restore good relationship between the landlord—I won't call landlord, they are only landowners—the landowner and the tenant, they would be welcome. Sir, we have been accused of hasty legislation and ill-drafted legislation by the highest tribunal of the land and retired Judges. So, the language we use has got to be very carefully adopted according to circumstances. The tenure of the kaiaeruvaramdar and mattuvaramdar should have been properly investigated in a detailed manner. To-day, to use the words of the Hon. Minister for Revenue, they are not cultivating tenants proper, but are 'ரெண்டாங் கட்டான்' tenants. Theirs is a peculiar tenancy. There is a peculiar relationship between the landowners and these people. It is something like the relationship between landowner and labourer, the only difference being that these people get a share in the crop. Personally, I believe that if a cultivator or if a person who is engaged in land or services to land gets a share in the produce, he will certainly have interest in growing more foodgrains. 10.35 a.m.

Because, he feels that if he produces more foodgrains, his income will also go up. So, he will plough the land better, irrigate it better, carry out the other agricultural operations better and harvest it better in proper season. I am sure he will attend to the entire cultivation operations properly. Certainly, the varamdar, cultivating tenant or labourer or whatever name or by whatever nomenclature you may call him, must get a proper living wage. I agree. As I have already pointed out during the last session, it is unfortunate that certain mirasdars in the Tanjore district were responsible for the tenancy legislation in that district. Similarly, I reliably understand that a certain class of mirasdars in the Tiruchirappalli district where this peculiar tenure or relationship prevails were rather recalcitrant and cantenkerous and evicted the tenants and that was the reason for the present state of affairs there for which they themselves were to be blamed. The Government have got to do justice between both parties. These peculiar labourers getting a share of the harvest only for ploughing and for ploughing with their own bulls cannot be elevated to the position of cultivating tenants in the remaining part of the State. If this peculiar tenure is prevailing in the Tiruchirappalli district in a particular area of 3,500 acres or so out of about a lakh acres or so, it may not be an impossibility to legislate for that area. The extension of the provisions contained in the Bill to the entire district of Tiruchirappalli has now enabled one particular party to say that this new nomenclature, kalaeruvaramdar or mattuvaramdar is prevalent in other areas as well. I believe that this Ordinance has given the effect of a standstill in harvest in this fasli. Will this increase food production in our State? If only full details of this tenure had been prepared and studied carefully and detailed reports had been obtained from the revenue Officers concerned of the district and taluk concerned, I am sure this Ordinance would not have been promulgated, and that too within such a short period before the Assembly has been called to session. They could have brought forward a regular Bill. Now, by this legislation, we propose to give retrospective effect from 6th January 1958, the date when the Ordinance was promulgated. Therefore, if it is intended to restore peaceful relationship between the landholder and tenant, I request that steps may be taken which will really restore such peaceful relationship. After all, they are employed for a specific purpose. They come and plough and sometimes plough with their own bulls. More than this, they do not attend to irrigation, transplantation or to any other act of cultivation. This point should be borne in mind. Such being the case, they cannot get 60 per cent of the produce in the same way as other people who attend to irrigation, transplantation and other acts of cultivation. Sri Lazar Udayar has pointed out that these people got a share of the crop even for harvesting. Sir, paddy cultivation is different from plantation or other cultivation. There is propaganda made that rotation of crops will be beneficial to food crops.

14th February 1958] [Sri R. Srinivasa Iyer]

What happens to this tenant—the so-called kaieruvaramdar or the matteruvaramdar—if the owner wants to change from paddy to plantain or sugarcane or betel? Such conundrums, as I would call them, would arise, if we do not properly investigate into the details of the relationship between the two parties. I may be excused by the Hon. Minister for Revenue, if I refer to an answer he gave this morning in reply to a question. He said that he had not got correct statistics as to income per acre of land in any village or taluk or district in this State. So, even measures which may culminate in fixing a ceiling on land holdings have to be carefully examined and undertaken. Land is the only thing that gives us food. We can live without money but not without food. Our only object should be to increase food production. There is a divergence of opinion between the Planning Commission and the F.A.O. experts whether such ceiling on land holdings will increase food production. In this particular case, let us assume that we give the kaieruvaramdar and the matteruvaramdar sixty per cent of the produce this year. Next year, the capitalist landlord will refuse to give him any help in the shape of seeds or cash. He will not help him in the matter of transplantation. Will the labourer, who has been depending only on his hand, not even on the bulls, then be able to cultivate five acres of land without help? So, the only proper course for the Joint Select Committee to adopt in dealing with this Bill, which has become necessary because of the attitude of the landlords who would not come to a compromise, would be to recommend payment of wages to these persons as in the case of the Pannaivals Protection Act or a lesser share than sixty per cent of the produce. 10-10 a.m.

The next point that I would refer to is the elevation of the sub-tenant to the position of a cultivating tenant. In clause 4 which deals with 'savings' it is stated '. . . persons who became cultivating tenants . . . .'. That means you are legislating for persons whom you want to call cultivating tenants but who are not in actual fact. This is something like an inam estate which is not actually so but which is called inam estate under the Estates Land Act (XVIII) of 1936. You cannot suddenly impose a new contract between the landlord and the cultivator. You must smoothen their relationship. If the landlord spends for all the things excepting ploughing and the ploughing man gets sixty per cent of the produce, what is the landlord to do to meet the cost of seeds, transplantation, etc.?

The next point I would refer to is the same as the one mentioned by the hon. Member, Mr. Sampath. Under the Tanjore Pannaivals Act, if a lesser sub-leases a land, automatically he walks out. The landlord might not have originally liked a particular man. But when sub-leased, that man may become the sub-tenant. This is something like forcing an unwilling labourer

or an undesirable sub-tenant on the landlord. You are trying to put a square peg into a round hole, when you want to put a sub-tenant under the landlord without proper procedure being prescribed for recovering rent from him.

Then, Sir, retrospective effect is sought to be given to the proposed Act from 6th January 1958. By this, Government are interfering with the administration of justice which is not proper. A particular contract has been interpreted by the High Court in a particular manner. We are really now interfering with the decision of the High Court. I submit that it would be better, if we do not interfere with the decisions of the High Court and alter the interpretations it has given to the Act. Even in his speech introducing the Fair Rent Bill in 1956, the Hon. the Minister for Revenue said that he would exempt small landholders owning a veli and less. Under this Bill, as it stands, the small landholders will be nowhere. They have got to live. Therefore, I would respectfully request the Hon. the Minister to amend the Bill in such a manner that small landholders will be saved.

10.46 a.m. SRIMATHI T. N. ANANDANAYAKI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, கையேர்வாரம்தாரரையும் மாட்டேர்வாரம்தாரரையும் பயிரிடும் குத்தகைதாரரின் "கல்டிவேடிங் டெனன்டின்" அந்தஸ்திற்குக் கொண்டு வருவதற்காக அவசரச் சட்டம் போடப்பட்டது. அதை எடுத்துவிட்டு அதற்குப் பர்த்தியாக ஒரு சட்டத்தைப் போடுவதற்காக இந்த மசோதாவை சர்க்கார் சபைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்த மசோதாவை ஒரு பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு விட வேண்டு மென்று கனம் அமைச்சர் அவர்கள் பிரேரேபித்திருக்கிறார்கள். இந்த முயற்சியெல்லாம் உண்மையிலேயே வரவேற்கத்தக்கதுதான். சென்னை நகரத்திலுள்ள பிரதிநிதியாகிய நான் விவசாயத்தைப்பற்றிப் பேசுகிறேன் என்றால் அது கனம் விவசாய அமைச்சருக்கே சற்று வேடிக்கையாக இருக்க லாம். இருந்தாலும், விவசாயம் சம்பந்தமாக நான் பார்த்ததையும் கேட்டதையும் எடுத்துக்கூறி, சரியான விஷயங்களை கனம் அமைச்சர் அவர் களிடமிருந்தே அறிந்துகொள்ளலாம் என்று எண்ணித்தான் ஒரு சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சென்னை நகரத்திலுள்ள பிரதிநிதியாக இருந்தாலும், அவருக்கு இப் போது திருச்சியில் நிலச்சொத்து கிடைத்திருப்பது எனக்குத் தெரியும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். (சிரிப்பு.)

SRIMATHI T. N. ANANDANAYAKI : திருச்சியில் எனக்கு நிலச் சொத்து கிடைத்திருக்கிறது என்று கனம் அமைச்சர் கூறுவதைக் கேட்டு, கனம் அங்கத்தினர் ஸ்ரீ அண்ணாமலை, நான் ஏதோ 500 ஏக்கர் நிலம் வைத்திருப்பதாக நினைத்துவிடப்போகிறார். என்னிடம் அவ்வளவு நிலம் இல்லை. சில நிலச்சுவான்தார்களிடம் ஐந்நூறு ஏக்கர், ஆயிரம் ஏக்கர் நிலம் இருப்பதால் நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் அவசரச் சட் டத்தைக் கொண்டு வர வேண்டுமென்று சில கனம் அங்கத்தினர்கள் சொல்வது வரவேற்கத்தக்கதுதான். நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றுவதில் எவ்வளவு சிக்கல்கள் இருக்கின்றன என்பது, ஒரு சிறிய சீர்திருத்தத்தைச் செய்வதற்கான இந்த மசோதாவைச் சட்டமாக்க முயற் சிக்கும்போது ஏற்படும் சிக்கல்களைப் பார்க்கும்போது தெரிகிறது. கையேர் வாரம்தாரரையும், மாட்டேர்வாரம்தாரரையும் பயிரிடும் குத்தகைதாரரின் அந்தஸ்திற்கு சட்ட பூர்வமாகக் கொண்டுவரும் ஒரு சில சிறிய சீர்திருத் தத்தைச் செய்ய முயற்சிக்கும்போதே எவ்வளவு சிக்கல்கள் எழுகின்றன

என்பதைப் பார்க்கிறோம். அப்படியிருக்கும்போது, நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டத்தைக் கொண்டு வருவதில் எவ்வளவு சிக்கல்கள் இருக்கக்கூடும் என்பதை நாம் உணர வேண்டும். உண்மையிலேயே, 500 ஏக்கர் அல்லது 1,000 ஏக்கர் நிலம்படைத்த பெரு நிலச்சுவான்தார்கள் இந்த ராஜ்யத்தில் நிறைய இருக்கிறார்கள் என்று நாம் நினைக்கிறோம். உண்மையில், கணக்கெடுத்துப் பார்த்தால், 500 ஏக்கர் நிலம் படைத்த பெரு நிலச்சுவாந்தார்கள் மொத்த விவசாயிகளில் 100-க்கு 20 பேர்கள் கூடத் தேறமாட்டார்கள். அதிகமான நிலங்களுக்குச் சொந்தமானவர் ஆண்டவன்தான். 500-ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் உடையவர்களின் எண்ணிக்கை ஒவ்வொரு ஜில்லாவிலும் மிக மிகக் குறைவாகத் தான் இருக்கும். 500—1,000 ஏக்கர் நிலம்படைத்த பெரு நிலச்சுவாந்தார்கள் ராஜ்யத்தில் நிறைய இருக்கிறார்கள் என்றும், அவர்களை இந்தக் காங்கிரஸ் அரசாங்கத்தார் விட்டு வைத்திருக்கிறார்கள் என்றும் நாம் நினைக்கிறோம். உண்மையில், அப்படிப்பட்ட பெரு நிலச்சுவாந்தார்கள் மிக மிகக் குறைவு. திருச்சி ஜில்லாவில், 5 ஏக்கர் 10 ஏக்கர் நிலம் உடையவர்கள்தான் அதிகம். நங்கவரம் பண்ணை போன்ற பண்ணை வைத்திருப்பவர்கள் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஓரிருவர்தான் இருப்பார்கள்; தஞ்சாவூர் ஜில்லாவில் சற்று அதிகமாக இருக்கலாம்; கோவை ஜில்லாவில் ஓரிருவர் இருக்கலாம்; மற்றப்படி, ராஜ்யத்தில் அப்படிப்பட்டவர்கள் மிக மிகக் குறைவு. ஆகவே, ராஜ்யத்தில் யாரிடமும் 500 அல்லது 1,000 ஏக்கர் நிலம் இல்லாதபடி செய்வதற்கான சட்டத்தைக் கொண்டுவருவதால் ராஜ்யத்திலுள்ள விவசாயிகளின் கஷ்டங்களில் எவ்வளவு கஷ்டங்களை நாம் நீக்க முடியுமோ அதைவிட அதிகமான கஷ்டங்களை, சிறு நிலச்சுவான்தார்களைப் பாதுகாப்பதற்கான சட்டத்தைக் கொண்டுவருவதால் நீக்க முடியும். இப்படிப்பட்ட சட்டங்களைத்தான் உடனடியாகக் கொண்டு வர வேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட சட்டங்களிலும் அதிக நன்மை ஏற்படுவதற்குப் பதிலாக அதிகக் கஷ்டங்கள் ஏற்படுவதாக எதிர்க்கட்சிக்காரர்கள் கூறுகிறார்கள்; அதாவது இப்படிப்பட்ட கஷ்டங்களினால் நாம் விவசாயிகளுக்கும் மிராசுதார்களுக்கும் சிண்டு முடிந்துவிடுவதாகக் கூறுகிறார்கள். அப்படிப்பட்ட கஷ்டங்கள் விவசாயிகளுக்கு ஏற்படுவதற்குக் காரணம் எதிர்க் கட்சிக்காரர்களின் சிண்டு முடிந்து விடும் செயல்களே தவிர, சட்டங்களினால் சர்க்கார் சிண்டு முடிந்து விடுவதில்லை. எதிர்க்கட்சிகாரர்கள் முடிந்துவிட்டுள்ள சிண்டுகளை அவிழ்த்து விடுவதற்காகத்தான் இப்படிப்பட்ட சட்டங்களை நாங்கள் கொண்டுவருகிறோம். ஆங்காங்கே சென்று எதிர்க்கட்சிக்காரர்கள் மிராசுதார்களுக்கும் விவசாயிகளுக்கும் சிண்டு முடிந்துவிட்டு வந்து விடுகிறார்கள். அப்படிப்பட்ட சிண்டுகளைக் களைவதற்காகப் போடப்பட்ட சட்டம் தான் கைவாரம்தார், மாட்டுவாரம்தார் அவசரச் சட்டம்.

SRI K. ANBAZHAGAN : இந்த அவையின் தரத்திற்கு "சிண்டு முடிதல்" என்ற சொல் ஏற்குமா என்று அறிய விரும்புகிறேன்? 10-50 a.m.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இந்த "சிண்டு முடிதல்" என்ற வார்த்தையையே எதிர்க்கட்சிக்காரர்கள்தான் தந்தார்கள்.

MR. SPEAKER : I want to know what it means. Is it vulgar?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இரண்டு பேர்களுக்கு குடுமி இருந்தால் அவைகளைக் கட்டி விடுவதுதான் "சிண்டு முடிதல்." (சிரிப்பு.)

SRIMATHI T. N. ANANDANAYAKI : அந்த வார்த்தை சரியா இல்லையா என்பதைப்பற்றி சொல்வதற்குள்ள அதிகாரம் அவைத் தலைவருக்குத்தான் உண்டே தவிர மற்ற அங்கத்தினர்களுக்கல்ல.

MR. SPEAKER : Let us not quarrel as to who has got the right. (Laughter) when it is felt that it is not desirable to say that, it may be put in some other form.

SRIMATHI T. N. ANANDANAYAKI : அந்த வகையில் இந்தத் தொந்தரவுகளைக் கொண்டுவருவது எதிர்க்கட்சியின் வேலையாக இருப்பதால்தான் அத்தொந்தரவுகளைத் தீர்க்க வேண்டி இப்படி அவசரச் சட்டங்களைக் கொண்டுவருகிறோம். இந்தக் கையேர்வாரந்தார், மாட்டு வாரந்தார் என்று சொல்லப்படுகிறவர்கள் திருச்சி ஜில்லாவில் ஒரு சில பகுதிகளில் சுமார் 3,500 ஏக்கர் நிலங்களைப் பாதிக்கக் கூடிய அளவிற்கு இருப்பவர்கள் என்று திருச்சி ஜில்லா பிரதிநிதி சொன்னார்கள். ஆனால் மற்ற ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டது மாதிரி இந்த கையேர்வாரந்தார் மாட்டேர்வாரந்தார் என்பவர்களைத் திருச்சி ஜில்லாவில் இருந்து வேறு ஜில்லாக்களுக்கு எடுத்துச் செல்வது என்பதில் யாதொரு கஷ்டமும் இல்லை. இவர்கள் செய்கிற வேலை எல்லா ஜில்லாக்களிலும் இருக்கின்றன. ஆனால் அங்குள்ளவர்களின் பேர்தான் வேறு விதமாயிருக்கிறது. திருச்சியில் கையேர்வாரந்தார் மாட்டுவாரந்தார் என்று சொல்கிறோம். ஆனால் அவர்களே மாதிரி, அவர்கள் செய்கின்ற வேலை மாதிரி பிற ஜில்லாக்களிலும் அப்படி வேலை செய்கிறவர்கள் இருக்கிறார்கள். சிறு சிறு நிலச் சுவாந்தார்கள், சிறு சிறு மிராசுதார்கள் உழவு பிடிக்க வேண்டுமென்றால் கூலிக்கு ஆட்களைத் தேடியும் மாடுகளை இரவலுக்குத் தேடவும் வேண்டியிருக்கிறது. ஒருவர் நாலைந்து ஏக்கர் நிலம் வைத்திருந்தால் அவர், ஐந்து ஜதை மாடுகள் வைத்து விவசாயம் செய்ய முடியாது. ஏனெனில் அறுவடை முடிந்த பின்னர் அம் மாடுகளை வைத்து அவைகளுக்குத் தீனி போடுவதற்கு அவர்களுக்கு வன்மை கிடையாது. ஆகவே மாடுகளை கூலிக்கு வாங்கித்தான் ஆகவேண்டும். அதேபோல் ஆட்களையும் கூலிக்கு வைத்துத் தான் ஆகவேண்டும். கையேர்வாரந்தார் என்றும் மாட்டுவாரந்தார் என்றும் உள்ள பெயர்கள் சிறிது காலத்திற்கு முன்தான் கொடுக்கப்பட்டது என்று நான் கேள்விப்பட்டேன். அது, அப்படி எல்லா ஜில்லாக்களிலும் பரவ அதிக நாளாகாது. இப்பிரச்னை திருச்சி ஜில்லாவிலுள்ள பிரச்னை மாத்திரந்தான். ஆகவே இதைச் சுலபத்தில் தீர்த்துவிடலாம் என்று நாம் நினைப்போமேயானால் இது சுலபத்தில் தீர்ந்து விடக்கூடிய பிரச்னை அல்லவென்றும் இப்பிரச்னை ஒரு பெரியதொரு பிரச்னையாகிவிடும் என்றுதான் நான் நினைக்கிறேன். இது, பெரிய ஒரு பிரச்னையைக் கிளப்பிவிடும். விவசாயி என்றால் யார் என்பதைப் பற்றி ஒரு அங்கத்தினர் பேசும்போது நேரடியாகப் பயிர் செய்கிறவனே விவசாயி என்று சொன்னார்கள். அதில் அடங்கியிருக்கும் spirit-ஐ நான் வரவேற்கிறேன். ஆனால் பயிர் செய்வது என்று வரும்போது, வயலிலே இறங்கி உழுபவன் விவசாயியா ? களை பறிப்பவன் விவசாயியா ? நாற்று நடுகிறவன் விவசாயியா ? தண்ணீர் கட்டுபவன் விவசாயியா ? களத்தில் இருந்து நெல்லை மாற்றுபவன் விவசாயியா அல்லது இவைகளை எல்லாம் செய்யச் சொல்லும் களத்திலிருந்து நெல்லை எடுத்துப் போ என்று சொல்பவர் விவசாயியா ? யார் விவசாயி உழவடிப்பவன் ஒருவன் சில சமயம் விதையும் போடுகிறான், சில சமயம் எருவும் போடுகிறான், ஆனால் நாற்று நடுகிறவன் வேறு, களையறுக்கிறவன் வேறு, அறுவடைக்கு வருகிறவர்கள் வேறு, போர் அடிக்கிறவர்கள் வேறு, களத்தில் இருந்து அதை எடுத்துச் செல்பவர்கள் வேறு.

SRI M. KALYANASUNDARAM : இவர்கள் எல்லோரும் நேரடியாக விவசாயத்தில் ஈடுபட்டுத்தான் இருக்கிறார்கள். நேரடியாகப் பயிரிடுகிறவர்களைத்தான் விவசாயிகள் என்று அமைக்கவேண்டுமென்று சொன்னால், அப்படி விவசாயி என்று யாரை அழைப்பது என்ற பிரச்னை எழுகிறது. உழுது வருபவனை விவசாயி என்பதா, களை பறிக்கிறவனை விவசாயி என்பதா, தண்ணீர் கட்டுகிறவனை விவசாயி என்பதா, போர் அடிப்பவனை விவசாயி என்பதா, நாற்று நடுகிறவனை விவசாயி என்பதா, இதில் யார் விவசாயி ?

ஆகவே இதில் ஒருவனை மாத்திரம் விவசாயி என்று சொல்வோமேயானால் அது நடைமுறைக்கு புறம்பாகும். இவர்கள் எல்லோரும் வேலை செய்யா விட்டால் முடியுமா ?

SRI S. M. ANNAMALAI : On a point of information, Sir . . .

MR. SPEAKER : I was wondering what information the Hon. Member is going to give, as she is Madras Member and she is speaking about land reforms. I am glad to learn about it.

THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Lady Member's knowledge is by acquisition.

MR. SPEAKER : I made a jocular remark. That is all. The hon. Lady Member may continue her speech.

SRIMATHI T. N ANANDANAYAKI : Thank you, Sir. ஆகவே, யார் விவசாயத்தில் நேரடியாக விவசாயத் தொழிலில் ஈடுபடுகிறார் என்பதை நிர்ணயிப்பது மிகவும் கஷ்டம். அதை நிர்ணயிப்பது என்பது சுலப மான காரியமல்ல. ஆனால் ஒன்று செய்யலாம். அதிகமாக ஒருவர் கையில் நிலம் சேராமல் இருக்க வழி செய்யவேண்டும். உழைப்பவர்கள் ஒரு புறமிருக்க உழைக்காமல் இதை உண்டு திரியும் கூட்டத்தினர் இருக்கக்கூடாது. ஆகவே, நேரடியாக பயிர் செய்கிறவனைத்தான் விவசாயி என்று அழைக்க வேண்டுமென்று சொன்னால் அதில் பல சங்கடங்கள் உள்ளன. அடுத்த படியாக, இந்த கையேரவா ந்தார், மாட்டுவார ்தார் இவர்களை எடுத்துக் கொள்ளவேண்டும். ஒரு நபர் தன் நிலத்தில் உழ, அதாவது ஒரு ஏக்கர் நிலத்தை உழுதடிக்க பத்து நாட்களாகும். ஆக ஒரு ஐந்து ஏக்கர் நிலத்தை அப்படிஉழ வேண்டுமென்றால் 50 நாட்களாகும். அப்படி 50 நாட்கள் ஆகு மானால், வித்தடிப்பதற்கு வேண்டிய வித்துக்கள் கிடைக்கும் காலம், அதாவது அந்த ஸீசன் போய்விடும். ஆகவே, தானே தனியாக உழவடிப்பது என்பது முடியாத காரியம். ஆகவே தன்னிடம் மாடு இருந்தால் மாட்டை கொடுக்கிறான். அதோடு சாட்டைக் குச்சியையும் கொடுக்கிறான். ஏரைப் பிடித்து உழுதால் மட்டும் போதும் என்கிறான். ஆகவே அப்படி ஏரைப் பிடித்து உழுபவனை, அவன் தன் கையைத் தருகிறான் ஏருக்காக என்பதனால் அவன் கையேர்வாரந்தார் என்று அழைக்கப்படுகிறான். அதே போன்று ஐந்து ஏக்கர் ஒருவருக்கு இருக்கிறது என்றால் ஐந்து ஜதை மாடுகள் வேண்டும். ஆனால் அப்படி ஐந்து ஜதை மாடுகளை வைத்துக் கொண்டிருக்க அவனால் முடியுமா? ஆகவே அறுவடைக் காலத்தில் அவர் மாடுகளை கூலிக்கு வாங்க வேண்டித்தான் இருக்கிறது. தன்னிடம் இரண்டு ஜதை மாடுகள் இருக்கலாம். அப்பொழுது இரண்டு பேர்களை, மாடுகளை கொண்டு வர உழு வதற்கு, மாட்டிற்குள்ள கூலியையும் தருகிறேன் என்று வரும்போது மாட்டைக் கொண்டு வருவதால் அவனுக்கு மாட்டுவாரந்தார் என்ற பெயர் வந்தது. இந்த வாரந்தார் என்ற சொல் முன்பு இருந்ததில்லை. வாரந் தார் என்று சொன்னால் அந்த நிலத்தில் அவனுக்குச் சொந்தம் உண்டாகி விடுகிறது. அது பற்றி நீதி மன்றத்தில் வாதாடி இருப்பதைப் பார்ப்போமானால் அவர்கள் கூலிக்கு வருகிறார்கள், வேலை முடிந்த பிறகு வேறு நிலச் சுவாந்தாரிடம் கூலி செய்யப் போய்விடுகிறார்கள். ஒரு இடத்திற்குத்தான் போகலாம் என்ற கட்டுப்பாடு கிடையாது. ஆகவே, இவர்கள், இந்தக் கையேர் வாரந்தார்களும், மாட்டேர்வாரந்தார்களும் பெர்மெனன்ட் கூலிகள் ஆகி விட முடியாது. தங்கள் பிழைப்பிற்காகக் குறிப்பிட்ட காலங்களில் வேலைக்கு வருகிறவர்களாவ ார்கள், அவர்கள். இதற்கு மேல் உள்ள அந்தஸ்திற்கு அவர்களைக் கொண்டு போகக்கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். அதைப் பற்றி முடிவு என்னவாயிற்றோ, தெரியாது. ஒரு நிலத்தில் இரண்டு கையேர்வாரந்தார்கள், இரண்டு மாட்டுவாரந்தார்கள், நிலச்சுவான்தார்கள்

[Srimathi T. N. Anandanayaki] [14th February 1958

11-00 a.m. ஆகிய ஐந்து பேர்களும் உழவு அடிக்கக் கூடிய சூழ்நிலை ஏற்படும்போது யாரை விவசாயி என்று சொல்லுவது கையேர்வாரந்தார் விவசாயி எது பதா, மாட்டுவாரந்தாரை விவசாயி என்பதா, எல்லாவற்றையும் களத்தில் இருந்து மேற்பார்வையிடும் நிலச்சுவானை விவசாயி என்பதா? அதோடு கையேர்வாரந்தாரை விவசாயி என்று சொல்ல வேண்டுமென்றால் அப்படி வேலை செய்யும் அந்த இரண்டு பேர்களில் யாரைச் சொல்லுவது விவசாயி என்று? மாட்டேர்வாரந்தாரை சொல்வது என்றால் எந்த மாட்டுவாரந்தாரை விவசாயி என்று சொல்லுவது? ஆக ஐந்து பேர்களுக்கும், இரண்டு கையேர்வாரந்தார், இரண்டு மாட்டுவாரந்தார், நிலச்சுவான் ஆகிய ஐந்து பேர்களுக்கும் அந்த நிலத்தில் சொந்தம் ஏற்பட்டு விடுகிறது. கல்டிவேடிங் டெனன்ட் என்றால் டெனென்ட்ஸ் ஆக்ட்படிவுள்ள உரிமைகள் அவர்களுக்குத் தரவேண்டும். அதை யாருக்கு தருவது? நான் முன்பு சொன்னது போல் யாரை விவசாயி என்று சொல்லுவது? ஆக, இதில் பல சங்கடங்கள் உள்ளன. அதோடு இந்த கையேர்வாரந்தாரையும், மாட்டுவாரந்தாரையும் கல்டிவேட்டிங் டெனென்ட்ஸ் என்று சொன்னால் வருடம் பூராவும் தண்ணீர் கட்டுகிறவன், எப்பொழுது தண்ணீர் வேண்டுமோ அப்பொழுது எல்லாம் நான் கட்டுகிறேன், என் நிலை என்ன? என்னையும் கல்டிவேட்டிங் டெனென்டாக்கு என்று கூறினால் இந்தச் சட்டத்தை நாம் எப்படி அமுல் நடத்துவது என்று சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். அதே மாதிரி வித்து போடுகின்றவர்களும் கேட்கலாம், அதே மாதிரி உரம் போடுகின்றவர்களும் கேட்கலாம். இவ்விதம் அவர்கள் எல்லாம் கேட்க ஆரம்பித்துவிட்டால் இதற்கென்று இன்னொரு அவசரச்சட்டத்தை போட வேண்டியதுதான். இந்த நிலைமை வருகின்றதை எதிர்க்கட்சிக்காரர்கள் பார்த்து காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால் அவர்களுக்கு பொறுப்பு கிடையாது, அவர்களுக்கு கிளர்ச்சியை உண்டாக்கிவிட வேண்டியதுதான் வேலை, அதற்கு பரிகாரம் தேடவேண்டியது ஆட்சியாளர்களின் கடமையாக வந்து சேருகிறது. இதனால் ஆளும் கட்சிக்குப் பொறுப்பு வந்து சேருகிறது. இதனால் வேதனை அதிகரித்துக்கொண்டே போகின்றது. இம்மாதிரிப்பட்ட நிகழ்ச்சிகள் எங்கே நடந்து கொண்டிருக்கிறது என்று பார்த்தால், முசிரி தாலூக்காவில், குளித்தலை தாலூக்காவில் இம்மாதிரி தாலூக்காக்களிலிருந்து வந்திருக்கிற எம்.எல்.ஏ.க்கள் இம்மாதிரிப்பட்ட விவசாயிகளைத் தூண்டிவிடுகிறார்கள். இதை நாம் அனுமதித்துக் கொண்டிருந்தால் இந்த கிளர்ச்சி தமிழகம் பூராவும் புரையோடிக்கொண்டு போகும். கனம் அமைச்சர் அவர்கள் இதை நன்றாக யோசித்துப் பார்க்கவேண்டும். எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் அவசியமில்லாமல் அவர்களைத் தூண்டிவிட்டு அவர்களுடைய பிழைப்பில் மண்ணை போட்டுவிட்டு அரசாங்கத்தின் பேரில் கெட்ட பெயரை ஏற்படுத்துவதற்கு முயற்சிக்கிறார்கள். இன்றைக்கு சாதாரணமாக நிலத்தில் கூலி வேலைகள் செய்கிறவர்களுக்கு இந்த உரிமை கொடுக்கப்படுவதாயிருந்தால் எல்லோருக்கும் இந்த அந்தஸ்து கொடுக்கப்படுதவாயிருந்தால் அதனால் பொதுவான சமாதான நிலைமை ஏற்படாது என்பதைதான் நான் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். கூலி ஆட்களை பண்ணை ஆட்கள் அந்தஸ்தில் வைப்பதாயிருந்தால் அதில் பல கஷ்டங்களும் வந்து சேரும். அவர்களுக்கு வேண்டுமானால் கனம் ஸ்ரீநிவாச ஐய்யர் அவர்கள் குறிப்பிட்ட மாதிரி அவர்களுக்கு சரியாக கொடுப்பதற்கு ஒரு முறையை ஏற்படுத்த வேண்டும். இன்றைக்கு 60-40 சட்டம் வந்திருந்தும் கூட இன்றும் உழவர்களுக்கும் உரம் போடுகின்றவர்களுக்கும் இதனால் பெரிய கஷ்டங்கள் வந்து சேருகிறது. ஆகவே உண்மையான விவசாயிகளை அதாவது "அக்ரிகல்ச்சரல் ஆப்பரேஷன்" செய்கிறவர்களை மாத்திரம் இதில் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நான் மிராசுதார்கள் என்று குறிப்பிடுவது 500 எக்கர்கள், 200 எக்கர்கள் வைத்திருப்பவர்களைப்பற்றி பேசவில்லை. நான் பெரிய மிராசுதார்களுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு பேச நான் வரவில்லை. நான் மிராசுதார் என்று குறிப்பிடுவது இரண்டு எக்கர், மூன்று எக்கர் வைத்திருக்கிற சாதாரண நடுத்தர ஆட்களைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அந்த அளவில் சிறு சிறு மிராசுதார்கள் இவ்விதமான பல சங்கடங்களுக்கு ஆளாகிறார்கள். இன்றைக்கு திருச்சியை எடுத்துப் பார்த்தால்

14th February 1958] [Srimathi T. N. Anandanayaki]

நிலைமை என்ன ? அங்கு நாளைக்கு அறுவடை ஆகவேண்டிய நிலங்கள் எல்லாம் அறுவடையாகாமல் இருந்து கொண்டிருக்கின்ற நிலைமையை நாம் பார்க்கிறோம். அறுக்கின்றவன் நான் டெனன்ட்டாகி விட்டேன் என்று சொல்லுகின்றான், இதனால் அறுவடை செய்வதற்கு அங்கு ஆள் இல்லாத நிலைமை அங்கு இருந்து கொண்டிருக்கின்றது. வயலுக்குள் ஆட்களை போவதற்குச் சம்மதிக்காமல் தானும் அறுவடை செய்யாமல் இருந்து கொண்டிருக்கிறார்கள் என்று விபரமாக கனம் சந்நாசி அவர்கள் சொன்னார்கள். இவ்விதமாக எதிர்க்கட்சிக்காரர்கள் கள்ள உள்ளமில்லாத அந்த விவசாயிகளைத் தூண்டிவிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதை நாம் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது. எதிர்க்கட்சிகளும் ஆளும் கட்சியினுடைய பொறுப்பை உணர வேண்டும். சட்டசபை மெம்பர்கள் அத்தனை பேரும் தங்களுடைய பொறுப்பை உணர்ந்திருக்க வேண்டும். அந்த வகையில் கையேர் வாரம்தார், மாட்டு வாரந்தார் என்று விவசாயிகள் இன்று திருச்சி ஜில்லாவில் இருந்து வருவதாக சொல்லப்படுகிறது. இந்த முறை தமிழகம் பூராவுமே இனி பரவி விடும். எதிர்கட்சியிலுள்ளவர்களே மற்ற ஜில்லாக்களுக்கும் சென்று " நீயும் மாட்டு வாரம்தார் என்று சொல் உனக்கும் நன்மை கிடைக்கும் " என்று இவர்களே சாதாரண மக்களை கிளப்பிவிடுவார்கள். இதனால் விவசாயம் இந்த நாட்டில் ஒழுங்காக நடத்த முடியாது. ஆகவே இதை வைத்து கொண்டிருக்க முடியாது. நாளைக்கிருக்கின்ற நிலைமை என்ன என்பதைப் பற்றி கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும். இன்னும் விளைந்த பயிர்கள் எல்லாம் அறுவடையாகாமல் இருந்துகொண்டிருக்கிறது. அங்குள்ளவர்கள் அறுக்க மாட்டேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு என்ன செய்வது என்பதைப்பற்றி ஆலோசிக்கவேண்டும். யாரோ ஒருவர் இங்கு சொன்னார், அறுவடை செய்ய முடியாவிட்டால் கோர்ட்டில் ரிசீவர் வைத்து அறுவடை செய்து வைத்துக் கொண்டு பின்னால் கோர்ட்டிலிருந்து ஒரு முடிவு வந்தபிறகு நெல்லை கொடுக்கலாமே என்று சொன்னார்கள். கோர்ட்டுக்கு போவதற்கு யாரிடம் பணம் இருக்கிறது. வக்கில்களுக்கு பணம் கொடுத்தால் தான் அவர்கள் வாதாடுவார்கள். நானும் வக்கீல் தான். பணம் கொடுக்காமல் எந்த வக்கீலும் கோர்ட்டில் பேச மாட்டார்கள். வக்கீல்கள் எல்லாம் எவ்வளவோ பணம் செலவு செய்து படித்துவிட்டு தான் அங்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் சும்மா அங்கு வந்திருந்து ஈரத்துணியை வயிற்றில் போட்டுக்கொள்வதற்காக அங்கு வரவில்லை: ஆகவே சாதாரண விவசாயிகளைப் பார்த்து கோர்ட்டுக்கு போங்கள் என்று சொல்ல முடியாது. கோர்ட்டிலிருந்து ரிசீவர் நியமித்து பின்னால் கோர்ட்டிலிருந்து முடிவு தெரிவது வரையிலும் அந்த விவசாயிகளின் வீட்டில் உப்பு, புளி, மிளகாய் வாங்குவதற்கு யார் பணம் கொடுப்பார்கள். அல்லது கோர்ட்டிலிருந்து முடிவு தெரிவது வரையிலும் இவைகள் எல்லாம் வாங்குவதற்கு நான்கு ரூபாய் அல்லது மூன்று ரூபாய் வைத்துக்கொள்ளுங்கள் என்று யாராவது கொடுக்கிறார்களா, ஆகவே நம்மால் கோர்ட்டுக்குப்போங்கள் என்று சொல்ல முடியாது. ஏதோ எதிர்கட்சிகள் கிளர்ச்சி செய்தார்கள், அதற்காக அவசரச்சட்டம் கொண்டுவந்து நிலைமை சமாளிப்போம் என்று சொன்னால் அதில் பல கஷ்டங்களும் இருக்கின்றது என்பதை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். இந்த மசோதாவை கனம் அமைச்சர் அவர்கள் நல்ல எண்ணத்தோடு கொண்டுவந்திருந்தாலும் கூட இதை வைத்துக்கொண்டு கூடுதல் கஷ்டங்கள் ஏற்பட்டு விடாமல் பார்த்துக்கொள்ளவேண்டியதும் அரசாங்கத்தின் கடமையாகும். தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டியது மிக அவசியம் என்பதை எல்லோரும் ஒத்துக் கொள்வார்கள். ஆனால் இதன் மூலமாக வேதனையை வளரவிடாமல இதில் இருக்கின்ற குறைகளை செலக்ட் கமிட்டிக்கு போகும்பொழுது அதில் இதை ஆர அமர யோசித்து இந்தப் பிரச்னைகளுககு எல்லாம் முடிவு காணவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு இரண்டு ஏக்கர், மூன்று ஏக்கர் நான்கு ஏக்கர் என்று வைத்திருக்கக்கூடியவர்கள் இன்றைக்கு வாழ்க்கை நடத்துவதற்கே கஷ்டப்படுகிறார்கள். ஒரு பிள்ளையை

கல்லூரியில் படிக்கவைக்க வேண்டுமென்றால் ரொம்பவும் கஷ்டமாய் இருக்கிறது. இரண்டு ஏக்கர் வைத்திருக்கின்ற ஒருவர் தன்னுடைய குடும்பத்தை நடத்துவதே இக்காலத்தில் கஷ்டமாய் இருக்கிறது. ஆகவே இதையெல்லாம் அரசியல் நோக்கத்தோடு பாராமல் நாட்டில் ஒரு அமைதியான நிலை இருக்கவேண்டும் என்ற எண்ணத்தின் மீது இதை யோசித்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதை நன்றாக ஆலோசித்து முடிவு கட்டுவதற்காக பொறுக்கு கமிட்டிக்கு அனுப்பியிருப்பதை நான் மனமார வரவேற்றுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : I was wrong in presuming that city members cannot speak on land reforms. Sri Karia Gounder may now speak.

11-09 a.m. SRI T. KARIA GOUNDER : மதிப்பிற்குரிய சபைத்தலைவர் அவர்களே, எனக்கு முன்பு பேசிய அம்மையார் அவர்கள் இதைப்பற்றி வெகு அழகாக பேசி விட்டார்கள். விவசாயத்தைப்பற்றி அவர்களிடம் பாடம் படிக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டேன். என்னைப்போன்றவர்கள் எல்லோருமே அவர்களிடம் போய் பாடம் கேட்கவேண்டும். எனக்குக்கூட அந்த எண்ணம் வந்தது. அவ்வளவு நல்ல முறையில் எடுத்து விளக்கினார்கள். அம்மையார் அவர்கள் சமீபத்தில்தான் வக்கீல் படிப்பு படித்து ஹை கோர்ட்டில் வக்கீலாக இருந்து வருகிறார் என்று கேள்விப்பட்டேன். இப்போது கையேர், மாட்டு வாரம்தார் என்பது திருச்சியில் 1955-ம் ஆண்டுக்குப்பின்னால் விவசாயிகளிடம் இந்த நிலைமை வந்தது. நண்பர் அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள் என்னைப்பற்றி, அதாவது சட்டசபைக்கு மெம்பராக வந்துவிட்டார் அவர் பெரிய மிராசுதார் என்று எல்லாம் சொன்னார்கள். உண்மையில் என் பேரில் ஒரு பட்டா நிலம் கூட கிடையாது. நான் ஒரே பிள்ளை, ஆனால் எனக்கு ஆறு பிள்ளைகள் இருக்கிறார்கள். அதில் ஒரு பிள்ளை பாட்டாளியாகவும் இருந்து வருகிறான். வக்கீல் தொழிலும் நடத்தி வருகிறார். ஏழைகளுக்கு வேண்டி கோர்ட்டில் போய் அவர்களுக்கு வேண்டி பேசி வருகிறான். ஏதோ ஸீலிங் வந்தால் எனக்கு அதிகம் நிலம் வரும் என்றும் சொல்லுகிறான். உண்மையில் நான் ஒரு சாதாரண விவசாயி. அங்கும் விவசாயத்திற்கும் மிக கஷ்டமாய் இருக்கிறது. மூன்று போகத்திற்கு தண்ணீர் கிடையாது. இரண்டு போகத்திற்குக்கூட தண்ணீர் சரியாக கிடைப்பதில்லை. இதைப்பற்றியெல்லாம் என் சகாக்கள் கணக்கு போட்டு சொன்னார்கள். மேலும் பலர் சொன்னார்கள். தஞ்சை ஜில்லாவிலும், திருநெல்வேலி ஜில்லாவிலும் இம்மாதிரியான முறைகள் இருக்கின்றன என்று. அங்கு எல்லாம் இந்த நிலைமை இல்லை. நான் சமீபத்தில் பழனிக்கு சென்றிருந்தேன். அப்போது மேட்டூர் பகுதிகளை பார்க்குபோது பொன்னாக காட்சி அளித்தது. என் நண்பர் கருத்திருமன் அவர்கள் அவ்வளவு தூரத்திற்கு வேலை செய்திருக்கிறார் என்று தெரியவந்தது. நமக்குத் தான் சட்டசபையில் இருந்து கொண்டு ஒன்றும் செய்யமுடியவில்லை என்று எண்ணிக்கொண்டேன். பொதுவாக விவசாயத்தைப்பற்றி பேசும்பொழுது ஸ்டேட் லெவலைப்பற்றியும் பார்க்கவேண்டியிருக்கிறது. சாதாரணமாக வட ஆற்காடு ஜில்லா இந்த சர்க்காரின் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதிலும் வேலூர் தாலூகா அங்குள்ள அதிகாரிகளின் கண்ணுக்குத் தெரிவதில்லை. இவ்விதமாக இருந்துக்கொண்டிருக்கிறது. இந்த நிலையில் வாரம் என்று சொல்வது ஆபத்தான வேலை. எங்கள் ஜில்லாவில் கனம் அண்ணாமலை அவர்களின் தொகுதியான போளூர் தொகுதியில் இந்த விவகாரம் வந்தது. ஒரு நாள் போலீஸ்காரர்கள் 200 பேரை உள்ளே தள்ளினார்கள். அந்த 200 பேரையும் என்னுடைய மகன்தான் மீட்டு வந்தான். அவனுக்கு இதில் அனுபவம் உண்டு. இந்த மேடைகளில் பேசுவது போல் ஆளை ஏமாற்றும் வேலை செய்வதில்லை. காலையில் எழுந்து வரப்பைச் சுற்றிப் பார்த்து நல்ல முறையில் விவசாயம் செய்து வருகிறவன் நான். விவசாயம் முன்னேற சட்டம் வரவேண்டியதுதான்.

அம்மையார் அவர்கள் அழகாகச் சொன்னார்கள். இப்போது திருச்சி, திருச்சியிலிருந்து தென் ஆர்காடு, தென் ஆர்காடிலிருந்து செங்கல்பட்டு, செங்கல்பட்டிலிருந்து சென்னை—சென்னைக்கு வந்தால் பரவாயில்லை, சென்னையில் நிலமும் கிடையாது, உழுகின்றவர்களும் கிடையாது—இப்படித் தொடர்ந்து வந்து விடக் கூடாது என்று அஞ்சுகிறோம். நண்பர் கிருஷ்ணசுவாமி நாயுடு அவர்கள் நிலச் சீர்திருத்தச் சட்டம்—புதிய சட்டம்—வருகிறது என்று சொன்னார்கள். ஆயிரக்கணக்கான எக்கர் நிலம் வைத்திருப்பவர்கள் விரலை விட்டு எண்ணக்கூடியவர்கள்தான் இருக்கிறார்கள். நூற்றுக் கணக்கில் வைத்திருப்பவர்கள் தாலூகாவிற்கு ஒன்றிரண்டு பேர்கள் தான் இருப்பார்கள், அதிகம் இல்லை. எனக்கு முன்பு பேசிய லாஸர் அவர்கள் சொன்னார்கள் 1955-க்குப் பின்னால் தான் இந்த கை ஏர் வாரம், மாட்டு வாரம் முதலியவைகள் வந்தன என்று. எங்கள் ஜில்லாவிலே இந்த வாரம் என்பது பழக்கமில்லை. 7 மணி, 12 மணி என்று கூலி ஏர் வைத்து உழுதவுடன் 2 ரூபாய் கொடுத்து விடுவோம். நிலம் உங்களுக்குச் சொந்தம் என்று சொல்லி விவசாயிகளைச் சேர்த்துவிட முடியும். சர்க்காருக்குத் தொந்தரவு கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்தில் சில நண்பர்கள் செய்கிறார்கள். அன்றைக்கு தஞ்சை பண்ணையாள் சட்டம் வந்தது. இந்த வாரச் சட்டத்தை மற்ற ஜில்லாக்களுக்கும் பரப்பாமல் இந்த செலக்ட் கமிட்டி சிபாரிசு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர்கள் சீனிவாச அய்யர் அவர்களும் சம்பத் அவர்களும் இதில் அனுபவமுள்ளவர்கள் இதற்கு முன்னால் அழகாகச் சொன்னார்கள். இந்த நிலையில் வட ஆர்காடு ஜில்லாவில் மானத்தைப் பார்த்து இருக்கிற நிலத்தை நம்பி வாழுகின்றவர்கள் அங்குள்ள விவசாயிகள். உழவன் கணக்குப் பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சாது என்பது பழமொழி. அவ்வளவு கஷ்டம் உழுவது. ஏர் ஒட்டும்போது கூலி. ஏர் உழுது நடும் போது கூலி. களை எடுக்கக் கூலி. அறுவடையின் போது செலவு. அறுவடையாகி களம் அடிக்கிறபோது செலவு. இவ்வளவும் செய்யும் போது பயிருக்கு நோய் வந்தால் விளைவில்லை. முறைப்படி செய்த அவ்வளவு வேலைகளும் வீணாகி நஷ்டம் ஏற்படுகிறது. பிறகு சர்க்கார் தக்காவி கடன் கொடுக்க மாட்டார்களா என்று எதிர் நோக்கியிருக்கும் நேரத்தில், அவனுக்கு நிலம் சொந்தமல்ல. நிலச் சீர்திருத்தம் வரவேண்டுமென்று சொல்கிறார்கள். கஷ்டப்படும் விவசாயி கஷ்டப் பட்டுக் கொண்டுதான் இருக்கிறான். நூற்றுக்கு 80 பேர்கள் இன்றைய தினம் விவசாயிகள். மோட்டார் வாகனங்களை வைத்துக் கொண்டு பலர் கோடிக்கணக்கான ரூபாய் கொள்ளையடித்துக் கொண்டிருக்கிறார்கள், அதை விட்டு, நிலச் சீர்திருத்தம் வேண்டுமென்கிறார்கள். இந்த 80 சத விகிதம் உள்ள எங்களைப் பற்றிப் பேச யாரும் இல்லை என்று எண்ணுகிறேன். இவர்கள் யாரும் 1 000 எக்கர் நிலம் வைத்திருக்கவில்லை. 1.000 எக்கர், 10,000 எக்கர் என்று வைத்திருப்பவன் விஷயத்தில் சீர்திருத்தம் கொண்டு வாருங்கள். எங்களுக்குக் கவலை இல்லை. ஆனால், இந்த 80 சத விகிதம் உள்ள விவசாயிகள் முன்னுக்கு வரவேண்டும். வருஷம் ஒரு குழந்தை பிறக்கும் நிலைமையில் உள்ள ஒரு நாட்டில் தலைக்கு $\frac{1}{4}$ எக்கர் கூட வர முடியாது இருக்கிறது. இந்த அளவில் இந்த செலக்ட் கமிட்டி ஆலோசிக்கவேண்டும். அந்த செலக்ட் கமிட்டியில் எங்களைப் போடுகிறார்களோ என்னவோ தெரியாது. பீ.ஏ., எம்.ஏ. படித்தவர்கள், சட்டம் படித்த வக்கீல்கள் இவர்களைத்தான் செலக்ட் கமிட்டியில் போடுகிறார்கள். நான் ஒரு உண்மை விவசாயி. எனக்கு பிள்ளைகள் இருக்கிறார்கள். பங்கு கூடப் போட்டு விட்டேன். அவர்களுள் ஒருவன் பாட்டாளி. வக்கீல் தொழில் செய்து வருகிறான். வாஸ்தவத்தில் நான் பட்ட கஷ்டத்தை சொல்ல முடியாது. ஏர் ஒட்டத் தெரியும். என்னுடைய மகன்களுக்கும் ஏர் ஒட்டத் தெரியும். கயிறு திரிப்பார்கள். யாருக்காவது உடம்பு சரியாக இல்லாமலிருந்தால் 4 ஏர் கட்டும் இடத்தில் ஒரு ஏர் கட்டுவோம். இன்னும் அவர்களுக்குக் கயிறு திரிக்கத் தெரியும். . . . . . . (சபையில் சிரிப்பு.) இந்த நிலையில் நாங்கள் ரொம்பக் கஷ்டப்படுகிறோம். அதோடு இன்னும் பல அவசரச் சட்டங்களைக் கொண்டு வந்தால் எங்கள் நிலை என்ன ஆவது. மக்களிடத்தில் குழப்பத்தை உண்டு பண்ணாமல்

இருந்தால் நலமாக இருக்கும். சட்டசபைக்கு வந்து ஒரு வருஷம் கடந்து விட்டது. இன்னும் 4 வருஷங்கள் இருக்கின்றன. ஏதோ பேசினர்கள் என்று எதிர்த்துப் பேசவேண்டுமென்பதற்காகப் பேசவில்லை. வெள்ளை சொக்காய் போட்டுக் கொண்டிருக்கிருரே என்ற எண்ணமோ, அல்லது 2 ரூபாய் கொடுத்து டாக்ஸியில் வருகிருரே என்ற எண்ணமோ தெரிய வில்லை. நான் உண்மையிலேயே ஒரு விவசாயி. ஸ்ரீ அண்ணுமலை அப்படி விவசாயி இல்லை. விவசாயிகள் கட்சிக்குத் தலைவர் . . . .

**SRI S. M. ANNAMALAI** : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நான் விவசாயி அல்ல என்று சொன்ஞர்கள். உண்மையில் என்னுடன் வந்தால் நான் ஏர் பிடிக்கிறவனு இல்லையா என்பது தெரியும். நான் ஏர் பிடிக்கிறவன் இல்லை என்று இங்கு சொல்வது என்னுடைய உரிமையை பறிப்பதாக இருக்கிறது. நான் வைத்திருக்கிறது 2 எக்கர் நிலம். அதை நானே பயிரிடுகிறேன். கூலி ஆளே கிடையாது. சட்ட மன்றத்திற்கு வரும் போது 10 நாட்களுக்கு கூலி கொடுத்து வேலை செய்ய ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன். ஆகவே அவர் அப்படிக் கூறுவது என்னுடைய உரிமையைப் பறிப்பதாக ஆகும்.

**MR. SPEAKER** : இது பாயிண்ட் ஆப் ஆர்டர் எப்படி ஆகும் ? பாயிண்ட் ஆப் எக்ஸ்பிளனேஷன் தான் ஆகும்.

**SRI T. KARIA GOUNDER** : எனக்கு அவர் சொன்னது பற்றி ரொம்ப சந்தோஷம். அதனுல் செலக்ட் கமிட்டி தீர்க்கமாக யோசனை செய்து, சட்டம் எப்படி வருக்கவேண்டும், எந்தப் பிரதேசத்திற்கு அவசியம்—இப்போது பேசுவதைப் பார்த்தால் 3,500 எக்கருக்குப் பாதுகாப்பு கொடுப்பதற்காக இந்தச் சட்டம் செய்வதாகத் தெரிகிறது—என்று பார்த்து அதை மாகாண ரீதியில் பரப்பாமல் இருக்க சர்க்காரும் செலக்ட் கமிட்டியும் சேர்ந்து அக்கரை செலுத்தி ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இந்த சந்தர்ப்பத்தை அளித்த தலைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

11·19 a.m. **SRI K. RAMACHANDRAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சட்டத்தைப் பொருத்த வரையில் இது இரண்டு கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டுதான் வந்திருக்கிறது. திருச்சி ஜில்லாவில் உள்ள கை ஏர் வாரக்காரர், மாட்டு வாரக்காரர் இவர்களை "கல்டிவேடிங் டெனென்ட்ஸ்" என்ற முறையில் சேர்த்துக் கொள்வது ஒன்று. இரண்டாவது "ஸப் டெனென்ட்ஸ்களை" "கல்டிவேடிங் டெனென்ட்ஸ்" என்று சேர்த்துக் கொள்வது. இந்த இரண்டு அடிப்படை தான் இந்தச் சட்டத்தில் இருக்கிறது. நான் இங்கு வந்த உடனே, 2, 3 காங்கிரஸ் அங்கத்தினர்கள் பேசியதைக் கேட்டபோது உண்மையிலேயே எனக்கு வருத்தமாக இருந்தது. இந்த மாதிரி ஒரு நல்ல சட்டத்தை எதிர்க்க வேண்டும், பரிசீலனை செய்யவேண்டும், அலசிப் பார்க்கவேண்டும்—அலசிப் பார்த்து, பரிசீலனை செய்து சட்டமாக்கலாம் என்பதிலே வேற்றுமை இல்லை—ஆனுல், இதை எதிர்த்துப் பேச வேண்டுமென்று பேசிய போது உண்மையிலேயே எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஏனென்றுல், எனக்கு முன் பேசிய அங்கத்தினர் அவர்கள் செலக்ட் கமிட்டிக்குப் போனுலும் செலக்ட் கமிட்டியில் வக்கீலைப் போட்டு விடுகிருர்கள், அவர்கள் என்ன என்ன செய்வார்களோ என்று கவலை தெரிவித்தார். ஆனுல் உண்மையிலே பார்த்தால் வக்கீல்கள்தான் ஒரு சட்டம் வரும்போதும் எதிர்ப்பார்கள், வந்த பிறகும் எதிர்ப்பவர்கள்.

**SRI S. LAZAR** : Sir, on a point of order. The learned member, himself being a vakil, would very well know that a lawyer appears not only for the defendant, but also for the plaintiff. So, I am surprised to hear the remark just now made by the hon. Member which I should say is a total misrepresentation.

14th February 1958]

**MR. SPEAKER**: I think the hon. Member only said that lawyers oppose it here and they also appear in Courts. There is nothing wrong in it.

**SRI K. RAMACHANDRAN**: நான் பேசும்போது இதை உணர்ந்து தான் பேசுகிறேன். நானும் ஒரு வக்கீல் என்ற முறையில்தான் இதைச் சொல்லிக்கொள்ளுகிறேன். அந்த முறையில் இந்தச் சட்டத்தைப் பார்த்தபோது இந்தச் சட்டம் பொறுத்த வரையில், இதை செலெக்ட் கமிட்டிக்கு விடப்போவதால் அங்கு இதை மக்களுக்கு விரோதமாகச் செய்துவிடுவார்களோ என்ற அங்கலாய்ப்பு உங்களுக்கு வேண்டிய தில்லை, என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த இரண்டு அடிப்படையிலும் கவனித்துப் பார்த்தால் முதலில் இந்த "கல்டிவேட்டிங் டெனென்ட்" என்றால் என்ன என்று ஆதி சட்டத்தில் எப்படி வரையறுக்கப்பட்டிருக்கிறது என்பதை குறிப்பிட்டுப் பார்க்க வேண்டும். அப்படி "கல்டிவேடிங் டெனென்ட்" என்றால் என்ன என்று குறிப்பிடும்போது கையேருவாரதார்களையும் மாட்டு வாரம்தார் களையும் சேர்த்திருக்கிறார்கள். இங்கு சொல்லப்படும் விளக்கம் என்ன வென்றால்: 11-20 a.m.

"(a) 'Cultivating tenant' in relation to any land.—

(1) means a person who carries on personal cultivation on such land, under a tenancy agreement, express or implied, and . . ."

அதாவது தானே தன்னுடைய சொந்த உழைப்பில் ஒருவன் நிலத்தை உழ வேண்டும். அப்படி விவசாயம் செய்யக்கூடியவனாக இருக்க வேண் டும் என்பது தான் இது.

(2) includes—

(1) any such person as is referred to sub-clause. (1) who continues in possession of the land after the determination of the tenancy agreement. . . ."

அதாவது அவன் ஒரு வருஷத்திற்கு அந்த நிலத்தை உழுதிருக்க வேண்டும். அத்துடன் அடுத்த வருஷத்திற்கு அவன் அந்த நிலத்தை உழுவதற்கு இடம் ஏற்படவேண்டும். அடுத்த வருஷம் அவன் நிலததை தொடர்ந்து உழுபவனாக இருக்கவேண்டும். இந்த அடிப்படையில் அவன் வந்தால்தான் அவன் ஒரு "கல்டிவெட்டிங் டெனன்ட்" என்று கருதப் படும் என்று டெபனிஷனில் சொல்லப்பட்டிருக்கிறது. இதை வைத்துக் கொண்டு பார்த்தால் அதில் கை ஏர் வாரம்தாரையும் மாட்டு வாரம் தாரையும் சேர்க்கப்பட்டிருக்கிறது என்ற இந்த ஒரே முடிவுக்குத்தான் வரவேண்டும். பர்சனல் கல்டிவேஷன் என்றால் மாட்டைக் கொடுத்தா லும் சரி சாட்டைக் குச்சியைக் கொடுத்தாலும் சரி அவன் எந்த விதத்தில் வந்தாலும் சரி அவனை பர்சனல் கல்டிவேஷனில் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். ஆகையினால் இவர்களும் பர்சனல் கல்டிவேஷன் என்ற அடிப்படையில் வரவேண்டியதாக இருக்கிறது.

அடுத்தாற்போல் பார்த்தால், தற்காலத்திற்கு மட்டும் அல்ல, அவன் தொடர்ந்து அந்த நிலத்திலேயே வேலை செய்ய வேண்டும், என்று இருக்கிறது. கை ஏர், மாட்டு வாரம்தார்களை எடுத்துக்கொண்டால் அவர் கள் ஒரு நிலத்தை தொடர்ந்தார் போல் ஒரு விவசாயி அந்த நிலத்தை பல வருஷங்களாக உழுது வந்தவன் என்று சொல்லப்படுகிறது. அப்படிப் பட்ட ஸ்டேடஸ் அவனுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது, அப்படிக் கொடுக்க வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. எந்த அடிப்படையில் பார்த்தா லும் கல்டிவேட்டிங் டெனன்ட் டெபனிஷனை எடுத்துக்கொண்டாலும் கண்டிப் பாக அவனேதான் நிலத்தை உழுது வந்திருக்க வேண்டும். இதை விட்டு விட்டு இன்னொரு முக்கியமான கருத்தையும் நாம் பார்க்க வேண்டும்.

[Sri K. Ramachandran] [14th February 1958

"ஸ்டேட்மெண்ட் அப் ஆப்ஜெக்ட்ஸ் அன்ட் ரீசன்ஸில்" என்ன சொல்லப் பட்டிருக்கிறது என்றால்:

"It has been held by the High Court of Judicature at Madras that *Kaieruvaramdars and Matuvaramdars* of the Tiruchirappalli district engaged by landlords to work on land for remuneration by a share in the crop on such land are not 'cultivating tenants.'"

என்று சொல்லியிருப்பதை நீங்கள் கண்டிப்பாக பார்க்கவேண்டும். சாதாரணமாக நமது அம்மையார் சமீபத்தில் பேசும்போது விவசாயிகளை கூலிகள் என்ற முறையில் தொனிக்கும்படி அவர்கள் பேசியது உண்மையிலேயே நமக்கு வருத்தம் தருகிறது. மிராசுதார்கள் மனதில் விவசாயிகள் கூலிகளாகத்தான் தென்படுவார்கள், அதைப்பற்றி நமக்கு அக்கரை இல்லை. அதை அக்கரையாக நாம் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. கூலிகள் என்றால் என்ன? ஏர் பிடித்து உழுதுவிட்டு ஒரு நாளைக்கு ஒன்று, ஒன்றரை, அல்லது இரண்டு என்று ரூபாய் வாங்கிக்கொண்டு போகக்கூடியவன்தான் கூலி. அவனுக்கு நிலத்தில் எந்த விதமான பாத்தியமும் கிடையாது. கூலி வாங்கிக்கொண்ட பின் அவன் நிலத்தைப்பற்றி சிந்திக்க வேண்டியதே இல்லை. வேறு எந்த விதமான நடவடிக்கையும் அவன் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. அதைப் போலவே களை பிடுங்குவதும் அதற்கு 6 அல்லது 7 அல்லது 8 அணுவோ அல்லது ஒரு ரூபாய் வாங்கிக் கொண்டு போய்விடுகிறவர்கள் தான் கூலிகள் என்று சொல்லலாம். இவர்களுக்கும் அதன் பிறகு நிலத்தைப்பற்றி சிந்திக்கவே வேண்டாம். அறுவடை காலம் வந்தால் அப்பொழுது இரண்டு அல்லது நான்கு படி தானியம் வாங்கிக்கொண்டு அறுவடை செய்து விட்டு போய் விடலாம். அதற்குப் பிறகு அவனுக்கு நிலத்தைப்பற்றிய கவலையே வேண்டியதில்லை. இப்படிப்பட்டவர்களைத்தான் கூலிகள் என்று சொல்லலாமே தவிர கை ஏர், மாட்டு வாரம்தார்களை கூலிகள் என்று அழைப்பது சரியல்ல. இவர்களுக்கு வருஷம் பூராவும் நிலத்தைப்பற்றிய சிந்தனை இருக்கிறது. அவர்கள் தொன்றுதொட்டு விளையக்கூடிய தானியத்தில் பங்கு வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களை "காஷுவல் வகுப்பில்" சேர்க்கக்கூடாது. ஆகவே அவர்களுக்கு கல்டிவேட்டிங் டெனன்ட் என்று சொல்லியிருப்பது சரியே.

அடுத்தாற்போல் ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யர் பேசும்போது இவர்கள் எல்லாம் எரு, விதை, இவைகளையெல்லாம் பூராவும் அவர்களுக்கு மிராசுதார்கள் கொடுக்கிறார்கள், இனிமேல் அவர்கள் கொடுக்கும்படியான அவசியம் ஏற்படுமோ ஏற்படாதோ, இது போன்ற பல சிக்கல்களைக் கொண்டு வந்து விடும் என்று கூறினார். அப்படிப்பட்ட ஒரு பெரிய பிரச்னை இங்கே எழுந்து விடவில்லை. இது விஷயமாக மூன்றாவது பக்கத்தில் பார்த்தால்:

"(2) The landowner shall be entitled to take from the produce of the crop that was standing on the 6th January 1958 the cost of cultivation of that crop and the balance shall be shared in accordance with the provisions of this Act."

1958ம் வருஷம் ஜனவரி மாதம் 6-ம் தேதியில் உள்ள மகசூலில் விவசாயத்திற்கு என்று செலவு செய்யப்பட்ட தொகையை நிலச்சொந்தக்காரர் கழித்துக்கொண்டு பாக்கி இருக்கக்கூடிய தானியத்தில் மதிப்பை பங்கிட்டுக்கொள்ளவேண்டும் என்று சொல்லப்படுகிறது. இது செலெக்ட் கமிட்டிக்குப் போகப்போகிறது. அப்பொழுது இதைப்பற்றி பரிசீலனை செய்வார்கள். அப்பொழுது நிலச்சொந்தக்காரர்களுக்கு செலவு செய்து கொண்ட வகையில் அந்த சலுகையை அளிக்கலாம். ஆகவே இதை செலெக்ட் கமிட்டிக்கு விட்டு அங்கே பரிசீலனை செய்து பார்க்கலாம். இதனால் பெரிய பிரச்னை எழுந்துவிடாது. அதனால் கல்டிவேட்டிங் டெனென்ட்டுக்கு அந்த அந்தஸ்தைக் கொடுக்கக்கூடாது என்று சொல்வது விசித்திரமாக இருக்கிறது.

14th February 1958] [Sri K. Ramachandran]

அடுத்தபடியாக காஸ்ட் அப் கல்டிவேஷனைப்பற்றியும் ஒரு ப்ரோவிஷன் இல்லை என்று சொல்லப்படுகிறது. இதுவும் விளக்கமாக வரவேண்டும். மற்ற சட்டங்களில் இருப்பதுபோல் இந்தச் சட்டத்தையும் மாற்றிக்கொண்டு வருவதில் ஒருவித ஆட்சேபனையும் இல்லை. சட்டத்தையே எதிர்ப்பது அர்த்தமற்ற விஷயம் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இப்பொழுது நமக்கு இருக்கக்கூடிய கொள்கை முறையில் இது சரியான சட்டம் என்று சொல்ல வேண்டியதாக இருக்கிறது. நிலச்சீர்திருத்தம் சம்பந்தமாக காங்கிரஸ் எவ்வளவோ தீர்மானங்களைப் போட்டிருக்கிறார்கள். சமீபத்தில் நடந்த கௌகத்தி காங்கிரஸ் மகாநாட்டில் கூட நிலச்சீர்த்திருத்தத்தைப்பற்றி தீர்மானம் போட்டு அதன் அடிப்படையில் "land to the tiller" என்று பேசுகின்ற அடிப்படையில் செய்யப்பட்டிருக்கிறது. "Lan l to the t ller" என்று சொன்னால் அதில் 'கல்டிவேடிங் டெனென்டும்' சேர்க்கப்படுகிறது. அதில் வேற்றுமைக் கருத்து கிடையாது. நிலம் உழுகிறவனுக்கே நிலம் இருக்க வேண்டும். அதனால் இந்தச் சட்டம் அதற்கு பொருத்தமான சட்டம். இது நமக்கு நன்மை செய்கிற காரியமாக இருக்கிறது. விவசாயத்தைப்பற்றி ஒரு அங்கத்தினர் பேசியபோது சபாநாயகர் வியப்பாகச் சொன்னார்கள். நேரடியாக விவசாயம் செய்யும்போது சாதாரணமாக ஐந்து ஏக்கர் வரையில் தஞ்சை ஜில்லாவில் விவசாயம் செய்ய முடியும். ஆனால் இரண்டு ஏக்கர் நிலம் வைத்துக்கொண்டிருக்கக் கூடியவர்கள் கூட நேரடியாக விவசாயம் செய்யாமல் இருக்கிறார்கள். அவர்கள் கிராமங்களில் உழக்கூடாது என்ற எண்ணத்தில் இருக்கிறார்கள். கையேர், மாட்டு வாரம்தார்கள் ஒரு ஏக்கர், இரண்டு ஏக்கர் நிலத்தில் உழுது பயிரிடுகிறார்கள். அப்படி விவசாயம் செய்யும்போது அது ஒரு மாதம் வரையில் கூட ஆகிறது. உழுகிற காலம் ஒரு மாதம் இரண்டு மாதம் இருக்கிறது. இம்மாதிரி ஒவ்வொரு விவசாய வேலையையும் செய்ய வேண்டிய காலம் மாதக்கணக்கில் இருக்கிறது. தண்ணீர் வருவது போன்ற சூழ்நிலை சரியாக அமைந்தால், விவசாய வேலை சுருசுருப்பாக நடந்து, குறைந்தது ஐந்து ஏக்கராக்கள் வரையிலும் ஒரு விவசாயி நேரிடையாக விவசாயம் செய்யலாம் என்று அனுபவத்தில் நேரிடையாகத் தெரிந்திருக்கிறது. ஐந்து ஏக்கராக்கள் வைத்திருப்பவர்கள் கூட கையேர், மாட்டுயேர் வைத்துக்கொண்டிருந்தால் பாதிக்கப்படுவார்கள் என்று சொன்னால் அது அர்த்தம் இல்லாத விஷயம். ஐந்து ஏக்கர் வைத்திருப்பவர்கள் சொந்தமாக நேரிடையாக விவசாயம் செய்ய முடியும். (ஒரு கனம் அங்கத்தினருடைய குறுக்கீடு.) 11-30 a.m.

ஆகையால், நான் இந்த ஒரு கருத்தைச் சொல்வது தஞ்சையில் உள்ள விவசாய முறைகளைப்பற்றிய அனுபவம் இருக்கிறது என்ற முறையிலே நான் சொல்கிறேன். அதைப்பற்றி எந்தவிதமான கருத்து வேறுபாடும் இருப்பதற்கு இடம் இல்லை என்று நான் சொல்கிறேன்.

**Absentee landlord** ஆக இருந்தால் அவர்களுக்கு இந்தச் சட்டமும் பிடிக்காது. அம்மாதிரி இருக்கக்கூடியவர்களுக்கு இந்தச் சட்டத்தினால் கஷ்டம் ஏற்படும். அவர்களுக்காக நாம் பரிந்துக்கொண்டு பேசுவதிலே அர்த்தம் இல்லை. நேரிடையாக விவசாயம் செய்யும் விவசாயி ஐந்து ஏக்கர், பத்து ஏக்கர் வரையில் நிலம் வைத்துக்கொண்டு நல்ல முறையிலே விவசாயம் செய்ய முடியும். சரியாக விவசாயம் செய்ய இயலாத விவசாயிகள் ஒரு ஏக்கராக் கூட பயிர் செய்ய முடியாது. ஆகையால், இரண்டு மூன்று ஏக்கராக்கள் வைத்துக்கொண்டு நேரிடையாக விவசாயம் செய்யும் சிறு நிலச்சுவாந்தார்களுக்கு இந்தச் சட்டத்தினால் எந்தவிதமான கஷ்டமும் இல்லை. ஆனால், எங்காவது இருந்துகொண்டு பிறரைக்கொண்டு விவசாயம் செய்தால், அவர்கள் கஷ்டத்தை அனுபவித்துத்தான் தீரவேண்டும். இந்த அடிப்படையிலே நான் இந்தச் சட்டத்தை மனப்பூர்வமாக வரவேற்கிறேன்.

[Sri K. Ramachandran] [14th February 1958

**Sub-tenants** என்ற முறையிலே ஒரு நிலத்திலே விவசாயி உழுது, அவன் கீழ் இன்னொருவன் ஸப்-லீஸ் எடுத்து விவசாயம் செய்தால், அவனுக்கு அந்தச் சலுகை கொடுக்க வேண்டியது அவசியம். ஏனென்றால், நடுவிலே உள்ளவன் **(intermediary)** அழிந்து விடுகிறான். அவனுக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை. **He steps into his shoes** அவ்வளவுதான். அவனுடைய ஸ்தானத்தில் அவன் சென்றுவிடுகிறான். அவனுக்கு அந்தச் சலுகையெல்லாம் கொடுக்கப்படத்தான் வேண்டும். இந்த அடிப்படையிலும் இந்தச் சட்டத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்பதோடு ஒரு சில கருத்துக்களை நான் பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்காக சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

'வாரம்' என்ற பிரச்னையைப் பொறுத்தமட்டில், இராமநாதபுரம் ஜில்லாவில் மிகவும் கஷ்டமான நிலை இருக்கிறது. நிலம் வைத்திருப்பவர்கள் குறைவு ; நிலம் இல்லாத விவசாயிகள் தான் அதிகம். நான் சொல்வதில் புள்ளி விவரம் தவறுதல் இல்லை. அப்படியிருக்கும்போது அவர்கள் நிலங்களை உழும்போது, 'வாரம்' வாங்க வேண்டிய முறை எல்லா இடங்களிலும் இருக்கிறது. அதிலும் குறிப்பாக, இராமநாதபுரம் ஜில்லாவில் அதிகமாக இருக்கிறது. பயிரிடும் சாகுபடியாளர்கள் பாதுகாப்புச் சட்டம் வந்த பிறகு 'டெனண்ட்' என்ற முறையிலே தன்னை ஸ்தாபிதம் செய்துகொள்வதற்குச் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நான் முன் ஒரு தடவை சொல்லியிருக்கிறேன். அம்மாதிரி காரியங்களுக்காகத் தான் இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டுமென்று நான் அபிப்பிராயப்படுகிறேன்.

உதாரணமாக, ஒரு நிலத்தை ஒரு விவசாயி 'கல்டிவேடிங் டெனண்ட்' ஆக உழுதால் அதை ருசுவாக்குவதற்கு வேண்டிய அளவு சரியான ரிகார்டு இல்லை. மசோதாவில் "**express or implied**" என்று இருக்கிறது. அதாவது எழுத்து மூலமாகவும் இருக்கலாம், வாய்மொழி மூலமாகவும் இருக்கலாம் என்று இருக்கிறது. வருஷம் பூராவும் உழுது கொண்டுவந்தால், அவர் ஒரு 'விவசாயி' என்று கருதப்படுவார் என்று சட்டத்தில் இருக்கிறது. ஆகையால், பொதுவாக எழுத்து மூலமாக இருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லாமல் ஏற்படும்போது, அந்த 'டெனண்ட்' அந்த நிலத்தில் உழுகிறாரா என்று நிரூபிப்பது கஷ்டமாக இருக்கிறது. அதற்கான 'அட்மினிஸ்ட்ரேடிவ் ஆர்டர்' போடவேண்டுமென்று முன்பே சொன்னேன்.

சாதாரணமாக ஒரு நிலச்சுவாந்தார் கோர்ட்டிலே தாவா செய்தால் "அவன் அந்த நிலத்தில் உழுவது இல்லை" என்று அவனைப் பலாத்காரமாக வெளியே அனுப்ப ஏற்பாடு செய்கிறார்கள். ஆனால், 'டெனண்ட்' கேஸ் போடும்போது பல சங்கடங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. அதே நிலைமையில் கை ஏர், மாட்டு ஏர் வாராந்தார்களுக்கும் தெரியும். அவர்களுக்கென ரிகார்டு, அதாவது முச்சலிகா இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம், வருஷக்கணக்காக நிலத்தை உழுதாலும் இதை எப்படித் தெரிந்துக்கொள்வது ? நிலச்சுவாந்தார்கள் விவசாயிகளை வெளியேற்ற கோர்ட்டிலே கேஸ் போட்டால், விவசாயிகள் எப்படி தாங்கள் நிலத்தில் தொடர்ந்து பயிரிட்டு வந்ததாக நிரூபிப்பது என்பது பெரிய பிரச்னையாக இருக்கிறது. இது நிர்வாகக் கஷ்டம் **(administrative difficulty)** என்று இருந்தாலும், செலக்ட் கமிட்டியின் பரிசீலனைக்காக இதற்கு என்ன செய்யலாம் என்று நான் சொல்லிக்கொள்கிறேன்.

"அடங்கல் கணக்கு" என்று இருக்கிறது. அதில் பட்டாவில் இருக்கக் கூடிய நிலத்திற்கு உரியவரின் பெயர் தான் எழுதப்படுகிறது. ஆனால், நிலத்திற்கு உரியவர்களின் பெயருடன் கூட நிலத்தைச் சாகுபடி செய்கிறவர்களின் பெயரும் அதில் எழுதப்படுமானால் அது ஒரு நல்ல ருசுவாக கோர்ட்டிலே தெரியும். இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்பே இருக்கக்கூடியதை மாற்றமுடியாது. ஒவ்வொரு நிலத்தைப் பற்றியும் கை ஏர்தாரர்

14th February 1958] [Sri K. Ramachandran]

யார், மாட்டுயேர்தாரர் யார் என்பதை அந்தந்தக் கணக்குகளில் பதிவு செய்கின்ற நிலைமை இந்தச் சட்டத்தின் மூலமாக ஏற்பட்டால் தான் சட்டத்தின் பலன் விவசாயிகளுக்குக் கிடைக்கும். எழுத்து மூலமாக இப்படிச் செய்துவிட்டால், கோர்ட்டிலே கேஸ் வருகிறபோது, இதைக்காட்டி விவசாயிகள் உண்மையிலேயே பயன் அடையமுடியும். இல்லையென்றால் பலவிதமான வழக்குகளுக்குத்தான் இந்தச் சட்டம் இடம் கொடுக்கும். விவரம் தெரிந்த நிலச்சுவாந்தாரராயிருந்தால், ஒரு "கல்டிவேடிங் டெனன்டை" வெளியேற்றிவிடலாம், என்ற நிலைமை மாறி விவசாயி களும் வழக்குகளைக் கண்டிப்பாக ஜெயிக்கக்கூடிய முறையில் இத்தகைய ஏற்பாட்டைச் செய்து, அவர்களுடைய கஷ்டங்களை நிவர்த்திக்கவேண்டும்.

இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்ற இந்தத் தீர்மானத்தை நான் ஆதரிக்கின்றேன். நான் ஏற்கெனவே, சொல்லியபடி பார்த்தால், இந்தச் சட்டம் மிகவும் அவசியமான சட்டம், முக்கியமான சட்டம் என்று கூறி, இதைக் கண்டிப்பாக நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித் துக்கொள்கின்றேன்.

* SRI G. NARAYANASWAMI NAIDU : அன்புமிக்க சபைத்தலைவர் அவர்களே, கையேர், மாட்டேர் என்ற இந்தப் பதங்கள் சட்டசபையிலே சென்ற இரண்டு வருஷ காலமாகவே திரும்பத் திரும்ப பேசப்பட்டு கொண்டிருக்கின்றன. நிரம்பச் சிறப்பாக இப்பொழுது சமீபத்தில் அந்த வார்த்தைகள் திரும்பத் திரும்ப நமக்குச் சொல்லப்பட்டு, தெரியாத ஊர் பேர்களெல்லாம் யுத்த காலத்தில் விளம்பரம் ஆனது போல, திருச்சி ஜில்லாவில் மூலை முடுக்குகளில் இருக்கும் உழவரின் நிலையை பரிசீலனை செய்யும்படியான நிலைமை ஏற்பட்டு கையேர் மாட்டு வாரம் விளம்பரமடைகிறது. இதே நிலைதான் சென்ற ஐந்தாறு வருஷங்களுக்கு முந்தி தஞ்சை ஜில்லாவிலே ஏற்பட்டிருந்தது. ஒரு கட்சி சொல் கிறது இந்த நிலம் எங்களுக்குச் சொந்தம். இதை விற்கவும் விநி யோகிக்கவும் எங்களுக்குத்தான் பாத்தியதை உண்டு—இதில் வேலை செய் யும்படி சிலரைச் சொல்லவும் வேண்டாமென்று போகச் சொல்லவும் உரிமை எங்களுக்கே உண்டு, சர்க்கார் சட்டப்படி பட்டா எங்களிடம்தான் இருக்கிறது. ஆதலால், இதில் தலையிட யாருக்கும் உரிமை இல்லை என்று. 11-37 a.m.

இன்னொரு கட்சி சொல்கிறது, இந்த நிலம் தோன்றிய காலத்திலிருந்து பாரம்பர்யமாக நாங்கள்தான் இருந்து வருகிறோம், பட்டாதார்கள் எத் தனையோ பெயர்கள் வந்தார்கள் போனார்கள். ஒவ்வொரு பத்து வருட மும் பட்டாக்கள் மாறிக்கொண்டிருந்தது நாங்கள் மாறாமல் நிலத்தோடு வாழ்ந்து நிலத்தோடு மடிந்து வந்துள்ளோம். இந்த நிலத்தை செப்ப னிட்டதும் சீர் செய்ததும் செம்மையாக்கியதும் நாங்கள்தான்—சட்டம் இருக்கும், மாறும்; எங்களுக்குத்தான் இதில் தார்மீக ஆதரவு எங்களது தான் என்று. ஜனநாயக சர்க்கார் வந்தவுடனே, "நாமெல்லோரும் ஒன்று என்ற காலம் வந்தது" என்று சொல்லிவந்திருக்கிறோம். "பொய், ஏமாற்றம் தொலைந்துபோய் நாமெல்லோரும் வாழ்ந்தால் சரிநிகர் சமான மாக வாழ்வோம், இல்லையேல் வீழ்வோம்" என்றும் "30 கோடி மக்களுக்கும் சொத்து பொது" என்றெல்லாம் கோஷங்கள் கொடுக்கப் பட்டதன் காரணமாக இந்நாட்டிலே உள்ள ஒதுக்கப்பட்டவர்கள், பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும், கல்வித் துறையிலும் தாழ்த்தப்பட்டவர்களாக இருந்தவர்களுக்கெல்லாம் ஜனநாயக சர்க்கார் ஏற்பட்டவுடனே ஒரு விழிப்பு ஏற்பட்டுவிட்டது. அதன் காரணமாக இது என் நாடு. இது என் தாய் நாடு. ஆனால் இந்த என் தாய் நாடு எனக்கென என்ன அளிக்கிறது—உழுதால் கூலிமாத்திரம் தானா? இது நான் வைத்து வளர்த்த மரம்—இது என் வீடு, இது என் நிலம் என்று சொல்லிக்கொள்வதற்கு ஏதும் வேண்டாமா. சுடுகாட்டிற்கு செல்வதற்குக் கூட பாதையைக் காணோமே?

[Sri G. Narayanaswami Naidu] [14th February 1958

நீண்டகாலமாக உழுது பயிரிட்ட அவனுக்கு அதில் ஓரளவு பங்காவது தர வேண்டாமா? இது வேண்டுமானுல் பழக்கத்திற்கு விரோதமாக இருக்கலாம். ஆனுல் தார்மீகத்திற்கு விரோதமல்லவோ!

நாட்டில் நடமாடும் தெய்வமாக விளங்கும் விநோபா அவர்கள் நாட்டில் பழைய பழக்கமாக இருந்த நிலையைத்தான் விளக்கி வருகிறுர்கள் உழும் நிலமெல்லாம் சகலருக்கும் பொது. ஊர் மக்களெல்லாம் ஒன்ருக உழுது உழைத்து கிடைத்ததை எல்லோரும் பகிர்ந்து கொள்வது இதில் நாட்டாண்மைக்காரர்கள் பங்கு வேண்டுமானுல் அதிகமிருக்கலாம்.

பிறகு அரசர்களுக்குள் யுத்தங்கள் ஏற்பட்டு முன் காலத்திய முறைகள் சீர் குலேந்தன. சொத்துக்கள் விஷயமறிந்த கூட்டத்தாரிடம் சிக்கி விட்டது பட்டாக்களும் ஏகபோக உரிமைகளும் தலேகாட்டின, விஷயமறியா உழவன் உழும் பாத்தியம் மாத்திரம் பெற்ருன். மற்றவை எல்லாம் பட்டாதாரர்கள் கைக்குச் சென்றது. பட்டாக்கள் ஏற்பட்டு, நில ஆசை கடுமையானவுடன் தனக்குப் பிற்காலம் பிள்ளை இல்லாமற் போனுலும் அல்லது பிள்ளை இருந்தும் அது திறமையாக அந்த சொத்தை நிர்வகிக்கமாட்டார்கள் என்று அபிப்பிராயப்பட்டாலும் தங்களுக்குப் பின் இன்ன இன்ன தர்மங்களேச் செய்யவேண்டுமென்று குறிப்பிட்டும் ஏதேனும் தர்மம் செய்யவேண்டுமென குறிப்பிட்டும் அந்தக் காலத்தில் நல்லவர்களென பெயரெடுத்து பொன், பெண், மண்ணுசையைத் துறந்த பண்டார சந்நிதிகளுக்கு எழுதி வைத்தார்கள். அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட சொத்தின் நிலே எவ்வாறுளது?

(Deputy Speaker in the Chair)

நிலமுடையவர்கள் தங்களுக்குப் பின்னர் கூட சொத்து கெட்டுவிடக் கூடாது, பிரிபடக்கூடாது, உழவர்களிடம் சென்றுவிடக்கூடாது என்று கருதி, புல்லும் பூண்டும் உள்ள அளவும் கல்லும் காவேரியும் இருக்கும் அளவும் புத்திர பௌத்திர பாரம்பர்யமாக சொத்தை ஆண்டு அனுபவிக்க வேண்டுமென பத்திரங்களில் தங்கள் பின் வார்சுகளுக்கு எழுதி வைத்தார்கள். அதன் குறுக்கே ஒரு கோட்டைக் கிழித்தது நமது 40,—60—60—40 சட்டம் அதன்படி பழைய பத்திரங்களின் ஷரத்துக்களெல்லாம் தவிடு பொடியாகி, உழவரின் உள்ளத்தில் ஒரு புது ஒளி தென்பட்டுள்ளது. நிச்சயமற்ற சாகுபடி செய்த உழவர்கள் சட்டப்படி நடந்து வந்தால் 5 ஆண்டுகள் அல்ல பல ஆண்டுகள் அனுபவிக்கலாம். உரிமைக்காரர்களும் பங்கு பெறலாம் எத்தனையோ கடுமையான எதிர்ப்புக்கிடையே, இந்த சட்டங்கள் நம்மால் கொண்டுவரப்பட்டது. பத்திரிகை அனைத்தும் எதிர்த்தனர். உத்தியோகஸ்தர்களில் பலர் எதிர்த்தனர் காரணம் தஞ்சை வாசிகளில் நிலமுள்ளவர்களால் பல பத்திரிகைகளும் நிலமுடையவர்களின் ஆதரவு பெற்று பல பத்திரிகைகளும் ஆசிரியரைக் கொண்ட பல பத்திரிகைகளும் நம் நாட்டில் உள்ளன. காவேரிக்கரையில் இரு மருங்கிலும் நிலம் வைத்திருப்பவர்கள் பெரும்பாலும் ரிடையர் ஆன உத்தியோகஸ்தர்கள். இவர்கள் எதிர்ப்பை எல்லாம் சமாளித்து நமது சர்க்கார் இந்தப் பெரியவர்களெல்லாம் அறுவடை சமயத்தில் குடையை நிழலுக்குப் பிடித்துக்கொண்டு களத்து மேட்டிற்கு வந்து அதட்டிமிரட்டி ஏழைகளுக்கு கூலியையோ, வாரத்தையோ குறைத்துப்போட்டு சாப்பாட்டுக்கு நெல் வைத்துக்கொண்டது போக மிச்ச நெல்லை விற்றுவிட்டு வந்து விடுவார்கள். இது இன்று நேற்று ஏற்பட்டது அல்ல, இந்த
11-40 a.m. நிலே குடியானவர்களுக்கு ஒரு சாபக்கேடாக இருந்து வருகிறது. நானும் கூட ஒரு மிராசுதாரர் வீட்டுப் பிள்ளையாக இருந்தவன்தான். அந்த மனப்பான்மை எனக்கு கொஞ்சம் இருக்கலாம். மிராசுதாரர் வீட்டுப் பிள்ளைகளுக்கு அந்தக் காலத்திலிருந்தே எப்படிப்பட்ட மனோபாவம் வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது என்பதற்கு சில மரபுச் சொற்களைப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம். "பள்ளிக்கும் இரும்புக்கும் பதம் பார்த்து அடி" சாண்பரைக்கு முழத்தடி என்று சொல்லிக்கொடுப்பார்கள். "நெல் முகத்தில் நெருப்பாய் இருக்கணும், சேற்று முகத்தில் சிரிப்பாய் இருக்கணும்"

14th February 1958] [Sri G. Narayanaswami Naidu]

என்று சொல்வார்கள். சேற்று முகத்தில் என்றால் விவசாய காலத்தில் சிரித்துப் பேசி தாசா பண்ணிக்கொண்டு விவசாயிகளிடத்திலே வேலை வாங்கிக்கொள்ளவேண்டும் என்றும், நெல் முகத்தில்—அறுவடை காலத்தில் விவசாயிகள் அதற்கு இதற்கு என்று கிட்டே நெருங்கி நெல் கேட்காமல் இருப்பதற்கு நெருப்பாய், கடுகடுவென்று இருக்கவேண்டும் என்றும் மிராசுதார்களுடைய பிள்ளைக்கு சொல்லிக்கொடுக்கும் முதல் அருச்சுவடி வாய்ப்பாடு. இப்படிப்பட்ட மனோபாவத்தை மாற்றவேண்டும் என்பதற்காக நாட்டில் ஏற்பட்ட கிளர்ச்சிகள், மக்களது எழுச்சிகள் நம் எல்லோருக்கும் தெரியும். விவசாயப் பெருங்குடி மக்கள் இன்றைக்கு விழித்துக்கொண்டுவிட்டார்கள். அவர்களைப்பற்றியே யாரும் கவலைப் பட்டாமல் இருந்த காலம் மாறி இன்றைக்கு நாட்டில் தோன்றுகிற அரசியல் கட்சிகள் எல்லாம் அவர்களுடைய நிலைமையை உயர்த்தவேண்டும் என்பதாகக் குரல் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். சில அரசியல் கட்சிகள் அவர்களுடைய நன்மையைக் குறித்துக் கண்ணீர்விடுவதுபோல தங்கள் கட்சியின் செல்வாக்கை அதிகப்படுத்தவும் முயற்சிசெய்து வருகிறார்கள். இது எப்படி இருக்கிறது என்பதற்கு ஒரு சின்ன உதாரணம் சொன்னால் உங்களுக்குப் புரிந்துவிடும் என்று நம்புகிறேன்.

காசியில் சுடுகாடு ஏலம் விடுவது அரிச்சந்திரன் காலத்திலிருந்து பழக்கம். இன்றும் முனிசிபாலிடியில் ஏலம் விடுகிறார்கள். ஆயிரம் பத்தாயிரம் என்று காண்டிராக்டர்கள் சுடுகாட்டை ஏலம் எடுத்து, அந்தக் கண்டிராக்டர்கள் பிணத்திற்கு ஒரு ரூபாய், ஒண்ணேகால் ரூபாய் வாங்கிக்கொண்டுதான் அந்த இடுகாட்டில் பிணத்தை எரிப்பதற்கு அனுமதி அளிப்பார்களாம். சில சில வருஷங்களில் ஏலத்தில் போட்டி அதிகமாகி எட்டாயிரம், பத்தாயிரம் என்று ஏலத் தொகை உயர்ந்துவிடுமாம். இவ்வாண்டு யாருமே சாகாவிட்டால் நஷ்டம் வந்துவிடப் போகிறதே என்கிற பயம் காண்டிராக்டருக்கு வந்துவிடும். உடனே அவர் குடம் சாம்பிராணி, தேங்காய் பழம் எடுத்துக்கொண்டு காசி விஸ்வநாதர் கோயிலுக்குச் சென்று பூசை போடுவாராம். "ஆண்டவனே, இவ்வருஷம் ஒருத்தரும் சாகாமல் இருந்துவிட்டால் என்ன செய்வது? திடீரென்று ப்ளேக் வராதா? காலரா வராதா? திடீர் திடீர் என்று ஐநூறு அறுநூறு பேர்கள் சாகமாட்டார்களா?" என்று பிரார்த்தனை செய்து கொள்வது வழக்கமாம். (சிரிப்பு) இது கதையாக இருக்கலாம். இப்படி சில அரசியல் கட்சிகள் நடந்துகொண்டிருக்கிறது. ஜனநாயக சர்க்காருக்கு பல விதமான தொந்தரவுகளை உண்டாக்குவதன்மூலம் தங்களுடைய கட்சியின் செல்வாக்கை அதிகப்படுத்திக்கொள்ளலாம் என்பதற்காக நாட்டில் அங்கங்கே பலவிதமான கிளர்ச்சிகள் உண்டாகவேண்டுமென்று சதா பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நோக்கம் உழவருக்கு நன்மை செய்யவேண்டும் என்பது அல்ல. சர்க்காருக்குத் தொந்தரவை உண்டாக்க வேண்டும் என்பதுதான். அதனால்தான் ஒரு கோரிக்கைக்கு மேல் ஒரு கோரிக்கையாக வைத்துக்கொண்டுபோகிறார்கள். இதற்குக் காரணம் நம்முடைய பக்கத்தில் உள்ள பலவீனமும்தான். நிலச்சீர்திருத்தம் கொண்டுவரும்போது சரியான முறையில் ஓரேயடியாகச் செய்வதைச் செய்துவிட்டால் நன்றாக இருக்கும். விவசாய அமைச்சர் அவர்களும் தஞ்சைக்கு சென்று பல மிராசுதார்களோடு பேசுகின்றார்கள். திருச்சிக்குச் சென்று பேசுகிறார்கள். இவர்கள் சொல்லும்போது சரிசரி என்று மிராசுதார்களும் சொல்லிவிட்டு, இவர்கள் அப்பால் போனவுடன் இவர்கள் சொல்வதை அவர்கள் கேட்பது இல்லை. ஹைக்கோர்ட்டைத்தான் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். விவசாயிகளுக்கு நன்மை செய்யவேண்டும் என்பதாக சர்க்கார் எத்தனை சட்டங்களைக்கொண்டு வந்தாலும், சமுதாய அமைப்பில் மிராசுதார்களுக்கு இருக்கும் பலம் அதிகாரிகளிடம் இருக்கும் செல்வாக்கு உழவர்களுக்கு பூர்ண சட்டபலத்தை அடையாமல் செய்துவிடுகிறது. பழைய கட்டுக் கோப்புகள் அடியோடு மாறியாகவேண்டும். பல் விளக்கிவிட்டுச் சாப்பிட வேண்டும் என்று சட்டம் கிடையாது. இருந்தாலும் பழக்கத்தில் பல் விளக்கிச் சாப்பிடும் பழக்கம்

எப்படி வந்திருக்கிறதோ அப்படியே சில பழக்கங்களும் நாட்டில் பல காலமாகவே வளர்ந்து வந்திருக்கின்றன. விவசாயிகள் என்றால் அவர்களை எப்படி அடக்கி ஒடுக்குவது என்கிற எண்ணம் பலகாலமாக நிலமுடையோரிடம் வளர்ந்துவிட்ட தீமை. இந்த மனோபாவம் அடியோடு மாறினாலொழிய நாட்டில் இன்பம் கிடையாது. இன்றைக்கு நாம் செய்கிற குறைந்த வசதிகளைக்கூட விவசாயிகளினால் பெறமுடியாத சூழ்நிலையின் காரணமாகத்தான் பல கட்சிகள் தங்களுக்குச் சாதகமாக அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு விவசாயிகளைக் கிளர்ச்சி செய்யத் தூண்டுகிறார்கள். சில பேரைக் கைதி செய்தால் ஜெயிலில் மிகவும் கஷ்டப்பட்டவர்களைப்போல பேசிக்கொள்கிறார்கள். எழுதிக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் காலத்தில் நாங்கள் முன் நாளில் சிறையில் இருக்கும்போது இரண்டு வேளை, மூன்று வேளை செக்கிழுத்திருக்கிறோம். அப்படியெல்லாம் ஒருவிதமான தொந்தரவும் இல்லாத இந்தக் காலத்தில் சில கட்சிக்காரர்கள் பல கொடுமைகளைச் சிறையில் அனுபவிப்பதாகச் சொல்லிக்கொள்வதற்கு காரணமே இல்லை. எதற்காக கிளர்ச்சிகள் நடக்கவேண்டும்? யார் சாகுபடிக்காரர், யார் பண்ணையாள், யார் நிலச்சுவான்தார் என்பதான விவரங்கள் வரையறை செய்துவிடவேண்டும். வருஷம் பூராவும் நிலத்தில் வேலை செய்கின்ற பண்ணையாளுக்கும், கண்டுமுதல் காலத்தில் குடை பிடித்துக்கொண்டு வருகிற நிலபிரபுவுக்கும் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது. எல்லோரையும் விவசாயி என்று பொதுப்படையாகச் சொல்லி விடக்கூடாது. உழைப்பைக் கொடுக்கிறவர்களுடைய வாழ்க்கை செழிப்பு அடைந்தால்தான் விவசாய உற்பத்தியும் நாட்டில் பெருக முடியும். நிலத்திற்கும், கிராமத்திற்கும் சம்பந்தமே இல்லாதவர்கள் நகரங்களில் இருந்துகொண்டு தங்களை விவசாயி என்று சொல்லிக்கொள்பவர்கள் சாகுபடி காலங்களில் கிராமத்திற்கு வருவதும், காரியஸ்தனைக்கொண்டு நெல்லை விலைக்குப்போடுவதும் விவசாயிகளுக்குச் சேரவேண்டிய உரிமையைக்கூட கொடுக்க மறுப்பதும் இனி நடக்காது. பலிக்காது. இனி "கொண்டுவரக்கூடிய சட்டம் சிறிய சிறிய நிலக்காரர்களை பாதிக்காத வகையில் இருக்கவேண்டும், ஐந்து, பத்து ஏக்கர் வைத்துக்கொண்டிருப்பவனுக்கும் இடைஞ்சல் செய்தால் என்ன செய்வது?" எனச் சிலர் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறார்கள். சொல்லும்போது இவர்களுடைய வாதம் மிகவும் நியாயமானதாகத் தோன்றலாம். ஆனால் எல்லாவிதமான சிக்கல்களுக்கும் மூல காரணமாக இருப்பது இந்தப் நிலப் பிரச்சனைதான். சிறு மிராசுதார்களுக்கு விலக்குக் கொடுக்கவேண்டும் என்று ஒரு பக்கம் சொல்லிக்கொண்டு பெரிய பெரிய மிராசுதார்கள் எல்லாம் இன்றைக்குச் சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு தங்கள் நிலங்களைத் துண்டுதுண்டாகப் பிரித்து வருகிறார்கள். விவசாயிகளுக்குக் சேர வேண்டிய உரிமைகள் பறிக்கப்படுகின்றன. சில அரசியல் கட்சிகள் இதை நியாயமற்ற முறையில் பயன்படுத்திக்கொள்வதனால் போலீஸ் தலையிடுகிறது. இதனால் தீங்கும் விளைகிறது. உண்மையிலேயே உழுகிறவனுக்குத்தான் நிலத்தில் பாத்தியம் இருக்கவேண்டும். அப்போது தான் உணவு உர்பத்தியம் பெருகும். அகில இந்திய நிலச் சீர்திருத்த கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஜெஸி குமரப்பா அவர்கள் என்னை விசாரணை செய்தபொழுது ஒரு கேள்வியைக் கேட்டார்கள். உங்களிடம் மாடோ, விதையோ, ஏரோ, கிடையாதே உங்களிடம் நிலத்தை கொடுத்தால் எப்படிப் பயிரிடுவீர்கள் என வினவினார்கள். சுயராஜ்யம் பெறுவதற்குமுன் அன்னியர்கள் காங்கிரஸ்காரர்களை உங்களிடம் போலீஸும், ராணுவமும் இல்லையே ராஜ்யத்தை எப்படி நிர்வகிப்பீர்கள் என்று கேட்டவண்ணமாய் இருக்கிறது—உழவர்களிடம் நிலத்தை அளித்தால் உற்பத்தி தானே பெருகும் என்று தெரிவித்தேன்.

இன்று தஞ்சை ஜில்லா கணக்கை எடுத்துப் பாருங்கள், ஒவ்வொரு கிராமக் கர்ணம் கணக்கையும் பாருங்கள். ஒன்றரை மடங்கு இரண்டு

14th February 1958] [Sri G. Narayanaswami Naidu]

மடங்கு உற்பத்தி பெருகி உள்ளது என்பதை சர்க்கார் கணக்கே காட்டும். அதிக உற்பத்திக்கு ஒரே காரணம் நிலத்தின் ஓரளவு உரிமை உழவர் கையில் கொடுக்கப்பட்டதுதான்.

நிலம் ஒருவர் கையில் இருந்து மற்றவர்கள் கையில் மாறிக்கொண்டே இருந்தது. பட்டா மாறியதே தவிர அந்த நிலத்தில் வேலை செய்யும் ஆட்கள் மாறவே இல்லை என்று ஏற்கனவே தெரிவித்துள்ளேன். இப்படி மாறாமல் இருந்தவர்களில் பலர் நிலத்தைவிட்டு வெளியேறி வியாபாரத்திற்கோ, உத்தியோகத்திற்கோ, சென்றுவிட்டவர்கள் அநேகர். இதில் கொஞ்ச நிலக்காரர்கள் அதிகம். கிராமத்தில் வருவாய்க்குத் தக்க நிலமில்லாததால் வேறு வியாபாரத்தையோ உத்தியோகத்தையோ கட்டாயமாகச் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. இப்படிச் சென்றவர்கள் தங்கள் ஊரிலுள்ள குடிகளிடம் நிலத்தை குத்தகைக்கோ வாரத்திற்கோ விட்டுவிட்டார்கள். அவர்கள்தான் சிறு நிலச்சுவான்கள். மாடோ, பண்ணையாளோ வைத்துக்கொள்ள முடியாதவர்களும் குத்தகைக்கோ வாரத்திற்கோ நிலத்தைவிட்டு உள்ளூரிலேயே தங்கி விட்டார்கள். உண்மையான சிறு நிலச்சுவான் இவர்தான். இவர்களுக்கு நன்மை செய்யவேண்டியது நியாயமாயின் இவர்கள் நிலத்தை நம்பி சாகுபடி செய்பவர்களுக்கு என்ன பரிகாரம் செய்வது என்பதையும் சிந்திக்காமல் இருக்க முடியாது. இது முன்னணி வேலையும் கூட.

அடுத்தாற்போல் நிலத்தின் உச்ச கட்டத்தை வரம்புகட்டுவது. இதற்கு புத்திசாலித்தனத்தின் கேந்திரமாக உள்ள பெரிய நிலச்சுவான்களையும், அரசியல்வாதிகளையும். சர்க்கார் பக்கத்திலேயே உள்ள நண்பர்களான பெரு நிலச்சுவானையும், எதிர் கட்சிகளையும் சமாளித்தாகவேண்டும். இதை இப்பொழுதுள்ள இந்த சர்க்கார்தான் நிர்வகிக்க முடியும். பலமுள்ள பெரும்பான்மை பெரிதுமுள்ள இப்பொழுதுள்ள இந்த நம் கட்சி இந்த உச்ச வரம்பு சட்டத்தைகொண்டு வரமுடியாவிட்டால், வேறு யாராலும் இதைச் செய்யும் ஆற்றலே இல்லாமல் வருங்காலம் அமைந்தாலும் அமையலாம்.

நிரந்தரமாக கிராமங்களிலுள்ள நிலச்சுவான்கள் சொற்பம். பெரும் பகுதி பெரு நிலச்சுவான்கள் நகரில் வேறு தொழிலில் ஈடுபட்டு உள்ளார்கள். இரண்டு வருவாயை எதிர்ப்பார்ப்பவர்கள். வியாபாரம், காண்டிராக்டு, வக்கீல் தொழில், சினிமா, பத்திரிகை இந்த வருவாயை விடாமல் கிராம வருமானத்தையும் விடாமல் இரட்டைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள். இவர்களுக்கும் நிலத்திற்கும் பட்டா பாத்தியதைத் தவிர வேறில்லை. இவர்கள் கையில் நிலம் இருக்கவேண்டியது என்ன அவசியம். திருவெண்காட்டு சுப்பிரமணியம் அவர்களிடம் இருக்கும் நாதசுவரத்தை நான் பறித்து வைத்துக்கொண்டால் அந்தக் குழலால் நான் யாருக்கு இன்பத்தை விளைவிக்க முடியும். ஊதத் தெரிந்த சுப்ரமணியத்திடமிருந்தால் சமுதாயத்திற்கு நல்ல மகிழ்ச்சியை ஊட்ட முடியும் நிலமும் உழத்தெரிந்தவனிடம் இருந்தால்தான் சமுதாயம் பட்டினியின்றி வாழ முடியும். இதைச் செய்யாவிட்டால் சர்க்கார் நாளுக்கு நாள் எந்த சர்க்காராயினும் பலவீனப்படும், பொறுப்பற்ற கட்சிகள் எப்படியேனும் உழவர்களை சிறைக்குள் தள்ளி, கோரிக்கைகள் நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும் வெளியே வந்தவுடன் உன்னை இந்த சர்க்கார் கைதி செய்தது, இதற்கு ஓட்டுப்போடாதே என்று பிரசாரம் செய்வார்கள். சமீபத்தில் கூலி ஆட்களுக்கு 1½ மரக்கால் கூலி கொடுக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்தேன், மாற்றுக்கட்சி என்ன பிரசாரம் செய்தது தெரியுமா ? நான் 4½ படிக்கு மிராசுதார்களிடம் ஒப்பந்தம் செய்ததாக, நோட்டீஸ் போட்டது. 1½ மரக்கால் கூலியை நாயுடு ஒப்புக் கொண்டார்கள் என்று நோட்டீஸ் போட்டார்கள். இதில் உண்மை ஜனங்களுக்குப் புரியவில்லை. இப்படி நடக்காததை நடந்ததாக தப்பு பிரசாரம் செய்துதான் எதிர்கட்சிகள் மக்களை மயக்கம்காட்டி வருகிறது. ஆதலால்

எதிர் கட்சிகளிடம் உழவர்கள் சிக்காமல் இருக்கவேண்டுமானால் உடனடியாக நிலவரம்பைச் செய்து உணவு உற்பத்தியை பெருக்க உழவர்க்கு உற்சாகமூட்டவேண்டும். நாளடைவில் மிராசுதார்களும் நாட்டின் நலனைக் கருதி இதற்கு ஒத்து வந்துவிடுவார்கள்.

ஸ்ரீ லாஸர் அவர்கள் ஒரு சில கிராமங்களில்தான் இம்மாதிரி பிரச்னைகள் இருப்பதாகச் சொல்கிறார்கள். இம்மாதிரிப் பிரச்னைகள் திருச்சியில்தான் இருப்பதாக ஒருவர் சொன்னார். திருச்சி தொகுதியிலிருந்து வந்த சனம் அங்கத்தினர் அங்குள்ள நிலைமைகளை எடுத்துச் சொன்னார்கள். அவர் சொன்னவைகளிலிருந்து நான் சில விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். எங்கள் ஜில்லாவில் பண்ணை ஆள் என்று சொல்லப் படுபவர்களை திருச்சியில் கையேர்காரர் என்றும், நாங்கள் வாரச் சாகுபடி என்று சொல்வதை அவர்கள் எங்கள் ஊர் வாரதாரர்கள் மாட்டு ஏர்காரர் என்றும் சொல்கிறார்கள். எல்லா இடங்களிலும் விவசாயிகள், பண்ணை யாட்கள், சாகுபடியாளர்கள் சம்பந்தமான பழக்க வழக்கங்கள் ஒரேமாதிரியாகத்தான் இருக்கின்றன. பெயர்கள்தான் வித்தியாசமாக இருக்கின்றன. சாகுபடி முறை, நீர்ப்பாசனம், கூலி, வாரம் முதலியவை களில் கொஞ்சம் வித்தியாசம் இருக்கக்கூடும். தாம்பிரபரணி, பவானி, காவேரி முதலிய நதிகள் பாயும் இடங்களில் இதேமாதிரியான பழக்க வழக்கங்கள் ஓரளவு ஒத்து இருந்து வருகின்றன. இந்த இடங்களி லெல்லாம் மிராசுதாரர்கள் சாகுபடியான மகசூலில் விவசாயிகளுக்கு கொஞ்சம் பங்கைக் கொடுத்துவிட்டு தாங்கள் அதிக லாபம் அடைந்து வந்திருக்கிறார்கள். இம்மாதிரி அவர்கள் நெடுங்காலமாகச் செய்து வந்திருக்கிறார்கள். இப்போது சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு கொஞ்சம் அதிகமாக வாரம் கொடுப்பதற்கான சட்டம் வந்தபிறகு, உழவர்கள் உற்சாகத்துடன் உழைத்து உணவு உற்பத்தியைப் பெருக்கியிருக்கிறார்கள் ; மற்ற மாவட்டங்களில் உள்ள நிலைமை எனக்குத் தெரியாது ; சென்ற ஐந்து வருஷங்களில் தஞ்சாவூர் ஜில்லாவில் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மற்ற ஜில்லாக்களிலும் இந்த நிலைமையை கொண்டுவருவதற்காக இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டிக்கு இந்த மசோதா அனுப்பப்பட வேண்டுமென்று பிரேரேபிக்கப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டியினர் மசோதாவை நன்றாகப் பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் சம்பந்தப்பட்ட இடங்களுக்குச் சென்று அங்கேயுள்ள நிலைமையை நேரில் பார்த்தால்தான் குழப்பங்களை நீக்கக்கூடிய முறையில் மசோதாவைத் திருத்தியமைக்க முடியும். அப்படியில்லாவிட்டால் சரியான முடிவுகளுக்கு பொறுக்குக் கமிட்டியினர் வரமுடியாது. ஏனென்றால் பொறுக்குக் கமிட்டியில் வெவ்வேறு கட்சியைச் சேர்ந்தவர்கள் இருக்கக்கூடும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோணத்திலிருந்து பிரச்சினையை அணுகக்கூடும். கடைசியில் கமிட்டியினர் சரியான முடிவிற்கு வரமுடியாத நிலைமை ஏற்படக்கூடும். பொறுக்கு கமிட்டியின் பரிசீலனையில் சிறிது தாமதம் ஏற்பட்டாலும் பாவாயில்லை. பொறுக்குக் கமிட்டியினர் அந்த அந்த இடங்களுக்குச்சென்று ஆங்காங்குள்ள நிலைமையை நேரில் கண்டறியவேண்டும். எல்லா பிரச்சினைகளையும் நல்ல முறையில் தீர்ப்பதற்காக மசோதாவைப் பொறுக்குக்கமிட்டிக்கு விட வேண்டுமென்ற பிரேரேபணையை ஆதரிக்கிறேன். இந்த சந்தர்ப்பத்தில் இன்னொரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். பண்டார சன்னதிகளுக்குள் ஏராளமாக இருக்கும் நில பாத்தியதைகளை யெல்லாம் இனிமேல் ஒழித்து விட வேண்டும். சர்க்கார் மதத்தில் தலையிடக்கூடாது என்பது அவர்களுக்கு பக்கபலமாக இருக்கிறது.

இந்தப் பண்டாரங்கள் வேண்டுமானால் கொட்டைகட்டி தேவாரம் பாடி திருவாசகம் ஓதட்டும். அதனால் யாருக்கும் நஷ்டமோ கஷ்டமோ இல்லை. எந்தத் தகுதியும் இல்லாத இவர்களிடம் 20,000 குடும்பங்களை சீர் செய்யவோ, சிதைக்கவோ, எப்படி அனுமதிப்பது என்பதை சிந்திக்கவேண்டாமா! மதத்தின் பேரால் பண்டாரங்கள் இஷ்டம் போல் பிரயாணம் செய்ய உரிமை அளிக்கலாமா?

14th February 1958] [Sri G. Narayanaswami Naidu]

பாக்கி ஊர்களிலெல்லாம் ஆஸ்திகம் நிரம்பி வழிவதாகவும் சென்னையில் ஆஸ்திகம் வரண்டு விட்டதாகவும் கருதி பண்டாரம் ஒருவர் சென்னையில் பலப்பல ஆயிரம் கொடுத்து—அதுவும் மடச்சொத்திலல்ல—ஏழைமக்கள்-கண்ணில் வலிவந்தால் காலில் வீக்கங்கண்டால்—வயிற்றில் வலி ஏற்பட்டால், வைத்தியநாத சுவாமிக்கு பிரார்த்தனைக்கு இட்ட கண்ணடக்கம், கால், வெள்ளி உருண்டைகள் இவற்றை விற்ற பணத்திலிருந்து—ஒன்றுக்கு இரண்டு விலை கொடுத்து—அதுவும் கட்டிடகாரருக்கு சேராமல், இடைத்தரகர் மொற்ற—இறைவன் பணம்—சென்னையில் வீணுக்கப்படுவதுதான் ஆஸ்தீகப் பிரசாரமா? இப்படி கட்டிடத்திற்கும் காருக்கும், ஆடம்பரத்திற்கும் பொதுச் சொத்துக்களை விரயமாக்கலாமா?

பக்தர்களும்—பணத்தையும் ஆடம்பரத்தையும்தான் விரும்புகிறார்கள் என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு கூறுகிறேன். எங்கள் ஊரில் காளியாகுடி ஹோட்டல் என்று ஒரு ஹோட்டல் உண்டு. ஐப்பசித்திங்கள், கடைநாளில், கங்கையிற் புனிதமான வேளையில் தீர்த்தமளிக்க, பல்வேறு வழிகளில் வரும் இறைவனை இந்த ஹோட்டலின் எதிரில் சந்திப்பார்கள். இதில் ஐயப்பன், பூசமடையவர், வள்ளலார், குமரகட்டளையார், மாயூரநாதர் முதலிய 5 சுவாமிகளும் காளியாகுடி ஹோட்டல் முன்னர் சந்திக்கும். வருகின்ற பக்தர்கள் ஐயாரப்பரை தள்ளி, பூசமடையாரை ஒதுக்கி வள்ளலாரை கடைக் கண்ணால் பார்த்து குமரகட்டளையாரிடம் சற்று குனிந்து, முடிவில் மாயூர நாதரைக் கண்ட உடன் முழுக்கும்பிடு போடுவார்கள். காரணம் என்ன? மேலே கண்ட தெய்வங்கள் பலவற்றிற்கு நல்ல பட்டோ, பகட்டான வாகனமோ சீரான நகையோ, நல்ல மேளமோ கிடையாது. மாயூரநாத சுவாமிக்குத் தான், நிரைய எடுபிடிகளும், விலை பெற்ற நகைகளும், நல்ல வாகனமும் உண்டு. ஆதலால், பணத்தையோ, ஆடம்பரத்தையோ விரும்பும் பக்தன் ஆடம்பரம் நிரம்ப உள்ள சாமி எதுவோ, அதையே கும்பிடத் தொடங்கிவிட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

இந்த ஆடம்பரங்களுக்கெல்லாம் முன்னோடியாய் இருப்பது பண்டார சன்னதித் திருவுலா. இறைவனுக்கு இருக்கும் ஆடம்பரத்தைவிட இவர்களுக்கு இருக்கும் ஆடம்பரம் இன்னும் பலபல மடங்கு அதிகம். ஏனெனில் இறைவன் தொண்டருள் அடக்கமல்லவா! நம்முடைய எதிர்க்கட்சியினர் நமது மந்திரிகளுக்கு கொடுக்கும் சம்பளத்தை பற்றி அடிக்கடி பேசி வருகிறார்கள். வரி வாடகை, வாகனச்செலவு நீங்க ரூபாய் 850 ஒரு மந்திரிக்குத் தேரலாம். ஆனால் பண்டாரத்திற்கு 20,000 ரூபாயும் ஒரு சன்னிதானத்திற்கு 12,000 ரூபாயும் கொடுக்கப்பட்டுவருகிறதே. அதை ஏன் யாரும் அதிகமென்று சொல்லவில்லை என எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. இதில் ஒரு பண்டார சந்நதி பாரில் பம்பிங் செய்கிறார். இன்னொருவர், ஜீப் கார் லைசென்ஸ் இல்லாமல் ஓட்டிக்கொண்டிருக்கிறார் (சிரிப்பு.) உற்றார் உறவினர்க்கு நிலம் சேர்ப்பது, வீடுகட்டுவது இவைகள் நடந்துகொண்டிருக்கிறது. கூட்டுறவு முறையில் நிலத்தை உழவருக்குக் கொடு என்று வக்காரமாரி கிராமத்தார் கோரிக்கை, டிபுடி கமிஷனர் வேண்டுகோள், கூட்டுறவு ரிஜிஸ்ட்ரார் கோரிக்கை, அரசாங்கத்தின் தாக்கீது, இவ்வளவையும் தாண்டி கூட்டுறவு பண்ணைக்கு நிலங்கொடுக்கத் தவணைகள் சால்சாப்புகள். இந்த பண்டாரங்கள் சர்க்காரை மீறி நான் மேலே சொல்லிய சரியை, கிரியை, யோகம் செய்து கொண்டிருக்கிறது. இந்த ஆடம்பர ஒழுக்கக்கேடர்கள் இனி மதத்திற்கோ, சமுதாயத்திற்கோ தேவை இல்லை. இவர்கள் இப்பொழுது ஒழிக்காவிட்டால் கோவில் சொத்துக்களெல்லாம் இவர்கள் உற்றார் உறவினர் சொத்தாக மாறும் விபரீதம் ஏற்படுமென்று எச்சரிக்கிறேன். இவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள உள்ளூர் ஆட்கள் பிடிக்காமல் ராஜபாளயம் பக்கத்திலிருந்து பெரிய பெரிய மீசைக்காரர்களை கொண்டுவந்து சின்னக் குழந்தைகளை வேறு பயமுறுத்திக்கொண்டிருக்கிறார்கள். இந்த ஆதிக்க வேடக்காரர்கள் குத்தகைப் பத்திரம் எழுதும் வேடிக்கை எப்படித் தெரியுமா? ராஜீகம் தெய்வீக மன்னியில் அளக்க வேண்டும். கடவுள் விரும்பினாலும் அரசாங்கம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த

ஆஸ்தீகப் பெருந்தகைகளுக்கு நெல் கட்டாயம் அளந்தே ஆக வேண்டும். அதுவும் இறைவனைக் காப்பாற்ற ! (சிரிப்பு.) பணம் கொடுப்பவர்களுக்குத் தான் நீதி கிடைக்கிறது. வக்கீல்களுக்கு ஏராளமாகப் பணம் கொடுப்பவர்களுக்குத்தான் நீதி கிடைக்கிறது. ஆகவே ஏழை விவசாயிகள் கஷ்டங்களை நீக்கக்கூடிய வகையில் சட்டமியற்ற வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்ளுகிறேன்.

Sri A. MARIAPPAN : On a point of order, Sir, யார் பணம் கொடுக்கிறார்களோ அவர்களுக்குத் தான் நீதி கிடைக்கிறது என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ நாராயணசாமி நாயுடு கூறினார். This amounts to a reflection on the High Court.

DEPUTY SPEAKER : It refers to the lawyers and not reflection no the Court.

Sri G. NARAYANASWAMI NAIDU : நீதியை பெறுவதற்கு நல்ல வக்கீல்களை அமர்த்தி அவர்களுக்கு ஏராளமாகப் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது என்றும், வக்கீல்கள் தான் நீதியைப் பரிபாலிக்கிறார்கள் என்றும் தான் நான் கூறினேன்.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர் ஸ்ரீ நாராயணசாமி நாயுடு கூறியதில் தவறு இல்லை என்பது என்னுடைய அபிப்பிராயம்.

Sri A. MARIAPPAN : On a point of order Sir,

DEPUTY SPEAKER : There is no point of order.

12–10 p.m. * Sri N. MAHALINGAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, திருச்சி ஜில்லாவில் சில பாகங்களிலுள்ள விவசாயக் குத்தகை முறை சம்பந்தமாகப் போடப்பட்ட அவசரச் சட்டத்தை எடுத்துவிட்டு அதற்கு பதிலாக ஒரு சட்டத்தைக் கொண்டுவருவதற்கான மசோதாவை அரசாங்கத்தார் சபைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். நியாய வாரச் சட்டம் நமது ராஜ்யம் முழுவதிலும் அமலுக்கு வந்திருக்கிறது. அது திருச்சி ஜில்லாவில் அமலுக்கு வந்ததிலிருந்து அங்கே அமைதி நிலவவில்லை என்பது எல்லோருக்கும் தெரியும். அங்கே அமைதி நிலவாததற்குக் காரணம் என்ன என்று கனம் அமைச்சர்கள் பார்க்கவேண்டும்.

நியாய வாரச் சட்டம் திருச்சி ஜில்லாவில் சரியானபடி அமுல் செய்யப்படவில்லை. அங்கு, குத்தகைக்காரர்கள் யார் என்று வரும்போது நியாயமான குத்தகைக்காரர்களுக்கு மட்டும் பாதுகாப்பு கொடுக்காமல் அன்று அங்கு கலெக்டராயிருந்த ஒருவர் நீர்கட்டியவர்கள் எல்லாம் குத்தகைக்காரர்கள் என்று அவர்களுக்கும் பாதுகாப்பு கொடுத்து, அங்கு போலீஸை அனுப்பி பூமியின் சொந்தக்காரர்கள் பூமியில் செல்ல முடியாத, அப்பூமிக்கு போகமுடியாத, ஒரு நிலைமையை ஏற்படுத்தினார். அதனால் பல கிராமங்களிலும் கலவரங்களும், அடிதடிகளும் ஏற்பட்டன. அது சம்பந்தமாக ஹைக்கோர்ட் வரையிலும் கேஸ் நடந்து அந்த அதிகாரி செய்தது தவறு என்று சொல்லி உயர்நீதி மன்றம் முடிவு செய்திருக்கிறது. அவ்வாறு ஒரு அதிகாரியைப்பற்றி, சட்டம் நேரான முறையில் நிலை நிறுத்தப்படவில்லை, சட்டத்தை தவறாக உபயோகப்படுத்தினார்கள் என்று நீதி மன்றம் முடிவு செய்தபோதிலும் கூட அரசாங்கம் அந்த அதிகாரியின் மேல் எவ்விதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளவில்லை. ஜனநாயகம் என்று சொல்வது சட்ட மன்றத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. சட்ட மன்றத்தின் முடிவுகள் பற்றி நீதி மன்றம் செய்கிற முடிவிற்கு மதிப்புக்கொடுக்கவேண்டியது நம் எல்லோருடைய கடமையுமாகும். ஆகவே, நம் அரசாங்கம் நீதி மன்றத்தின் முடிவுகளை சரியானபடி அமுலிற்குக்கொண்டு வராதது நீதியாகாது என்று நான்

இந்த சந்தர்ப்பத்தில் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால், ஹைக் கோர்ட்டில் இந்த முடிவு செய்து ஏழெட்டு மாதங்களுக்கு மேலாகிவிட்டது. அப்படி உயர்நீதி மன்றம் செய்த முடிவுகள் நாம் எண்ணிய எண்ணத்திற்கு மாறாக இருக்கிறது என்று அரசாங்கம் கருதியிருக்குமானால் உடனடியாக வேறு சட்டம் கொண்டுவந்து நிறைவேற்றி நாம் என்ன எண்ணுகிறோமோ அது சட்டமாக இங்கு கொண்டு வரப்பட்டிருக்கவேண்டும். இப்பொழுது உயர்நீதி மன்ற தீர்ப்பு வந்து ஏழெட்டு மாதமாகி இப்பொழுது அறுவடை வரப் போகிறது. ஆகவே இப்பொழுது திடீரென்று இதுபற்றி ஒரு அவசரச் சட்டம் கொண்டு வந்தது நியாயமான செயல் அல்ல என்பது தான் எனது அபிப்பிராயம். ஆக, இப்பொழுது அது பற்றி ஒரு மசோதா கொண்டுவந்திருக்கிறோம். அது பொறுக்கு கமிட்டிக்கு போகப்போகிறது. இது சம்பந்தமாக அதுபற்றி யோசித்து ஒரு முடிவு செய்யலாம். இன்னும் ஒரு மாதத்திற்குள் அது சட்டமாகிவிடும். சட்டசபையிலே வரும்போது அதற்கு ஒரு அவசரச் சட்டம் கொண்டுவர வேண்டிய அவசியம் என்னவென்று கேட்கிறேன். ஆக, விவசாயத்துறையில் மாறுதல் செய்ய வேண்டியது அவசியமே. விவசாயத் துறையில் மட்டுமல்ல பல துறைகளிலும் பொருளாதார மாறுபாடுகள் நம் தேசத்தில் செய்ய வேண்டியது அவசியமே. அதுபற்றி நான் சார்ந்திருக்கும் கட்சியின் மகாநாடுகள் முடிவு செய்திருக்கின்றன. நம் தேசத்தில் சோஷலிஸ சமுதாயம் அமைக்க வேண்டுமென்று கொள்கையில் நம்பிக்கை உடையவர்கள் நாம். ஸ்ரீ நாராயணசாமி நாயுடு அவர்கள் குறிப்பிட்டார்கள், நமது சமுதாயத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று. அதற்கு வேண்டிய சட்டங்கள் செய்ய வேண்டுமென்றும் அவர்கள் சொன்னார்கள். உண்மை. அதை நான் ஒத்துக் கொள்கிறேன். ஆனால் சட்டங்கள் செய்யும்போது அது சரியானபடி அமுல் நடத்தப்பட வேண்டும். ஆனால் அவைகள் சரியானபடி அமுல் நடத்தப்படவில்லை. சட்டத்திற்கு விரோதமாக, சட்டத்திற்கு புறம்பாக ஒரு அதிகாரி நடந்தால் அப்படி ஒரு அதிகாரி சட்டத்திற்கு புறம்பாக சென்றார் என்று நீதி மன்றம் சொன்னால் அரசாங்கம் அவர் மேல் ஏன் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவில்லை என்று கேட்கிறேன். ஒரு சட்டம் சரியல்ல என்றால் அதை மாற்றியமைக்க வேண்டுமென்றால் உடனடியாக அதை மாற்றியமைக்க வேண்டியது நமது கடமையாகும் என்று நான் வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். திருச்சியில் இன்றுள்ள நிலைமை குழப்பமாகவே இருக்கிறது. இன்றையதினம் கொண்டு வரப்பட்டிருக்கும் அந்த அவசரச் சட்டத்தினால் அங்குள்ள குழப்ப நிலை குறைந்துவிடவில்லை. நேர்மாறாக அங்குள்ள குழப்ப நிலை அதிகமாகத்தான் இருக்கிறது. சில தினங்களுக்கு முன்பு பத்திரிகைகளில் பார்த்தேன், விவசாய அறுவடைக்குச் சென்ற பெண்கள் அடிக்கப்படுகிறார்கள் என்றும் மானபங்கப்படுத்தப்படுகிறார்கள் என்றும் பத்திரிகைகளில் செய்திகள் பார்க்கிறோம். திருச்சி ஜில்லாவில் உள்ள குழப்ப நிலையை நீக்குவதற்காகவே இந்த அவசரச் சட்டம் கொண்டு வரப்பட்டது என்று ரெவன்யூ அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து பேசும்போது சொன்னார்கள். ஆனால் இந்த அவசரச் சட்டத்தால் அங்குள்ள குழப்ப நிலை தீர்ந்துவிடவில்லை. ஆனால் அந்தப் குழப்பநிலை மேலும் அதிகமாகத்தான் ஆகியிருக்கிறது என்று பத்திரிகை செய்திகள் கூறுகின்றன. இந்த கையேர் வாரந்தார், மாட்டு வாரந்தார் இவர்கள் யார் என்று பார்த்தால், அவர்கள் 'காஷ்வல் லேபர்' என்று சொல்கிற சாதாரண கூலி வேலை செய்கிறவர்கள் போலும் இல்லை. குத்தகைக்காரர்கள் போலும் இல்லை. இரண்டிற்கும் இடைத்தரமாயிருக்கிறார்கள். ஆகவே, இதைப்பற்றி ஒரு முடிவு செய்ய வேண்டியது அவசியமே. ஆனால் திடீரென்று இவர்கள் குத்தகைக்காரர்கள்தான் என்று சொல்லி ஒரு அவசரச் சட்டம் கொண்டு வருவது என்பது சரியல்ல என்றுதான் நான் அபிப்பிராயப்படுகிறேன். திருச்சி ஜில்லாவில் இருந்து வந்திருக்கக்கூடிய அங்கத்தினர்கள் பலருக்கும் திடீரென்று இந்த கையேர் வாரந்தார், மாட்டு வாரந்தார் என்று சொல்லக் கூடியவர்களை குத்தகைக்காரர்கள் என்று சொன்னால் அது அவ்வளவு

[Sri N. Mahalingam] [14th February 1958

பொருத்தமாகவில்லை என்றுதான் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகையால் இதேபோல் கூலியேர் என்றால் நஞ்சை பயிர் செய்யக்கூடிய எல்லா இடங்களிலும் தினசரிக் கூலி கொடுக்கக்கூடிய முறை இருந்துகொண்டுதான் இருக்கிறது. இவைகள் சம்பந்தமாக அரசாங்கத்திற்கு ஒரு நிச்சயமான கொள்கை வேண்டும். விவசாயத் துறையில் எந்தவிதமான மாறுபாடுகளை நாம் எதிர்பார்க்கிறோம் என்பதை நிர்ணயம் செய்துகொண்டால் அதற்கு வேண்டிய சட்டங்கள் செய்துகொண்டே போகலாம். நேரடி விவசாயம் என்றால் என்ன ? ராமச்சந்திரன அவர்கள் பேசும்போது தஞ்சை ஜில்லாவில் ஐந்து முதல் பத்து ஏக்கர் வரையில் ஒரு விவசாயி நேரடி விவசாயம் செய்ய முடியும் எனறு சொன்னார்கள். நேரடி விவசாயம் என்றால் அவரே உழுது, களை எடுத்து, அறுவடை செய்து, போர் அடித்து அவர் அல்லது அவரது குடும்பத்தினரே ஐந்து அல்லது பத்து ஏக்கர் நிலத்தை பயிர் செய்துவிட முடியுமா ? காஷ்வல் லேபர் என்று சொன்னார்கள். அந்தக் கூலிக்காரர்களை அவர் தினசரி வைததுக்கொண்டிருப்பார்களேயானால், அவருக்கும் என் இந்த உரிமைகள் கொடுக்க கூடாது? இது போன்று பல பிரச்னைகள் இருககின்றன. இன்றையதினம் விவசாயத் துறையில் அதிகம் உற்பத்தி செய்ய டிராக்டர்களை உபயோகப்படுத்துகிறோம். அந்த டிராக்டர் வாஙக அரசாங்கம் கடன் கொடுக்கிறது. மத்திய அரசாங்கமும் டிராக்டர்களுக்காக கோடிக்கணக்கில் ரூபாய் செலவு செய்து அதை அதிகப்படுத்திக் கொண்டு வருகிறது. டிராக்டர்கள் வைத்து உழவு செய்தால் ஏர் பிடித்து உழுவதைவிட அதிகம் உற்பத்தி செய்யலாம். இப்படியாக விவசாயத்துறையில் சிக்கல்கள் அதிகமாகிக்கொண்டே வருகின்றன. ஆகவே விவசாயத் துறையில் உள்ள சிக்கல்கள் பற்றி நன்கு சிந்தனை செய்து, எந்த விதமான ஒரு சூழ்நிலை நம் நாட்டில் இருக்கவேண்டுமென்று அரசாங்கம் நன்கு ஆலோசித்து ஒரு முடிவான அபிப்பிராயத்திற்கு வரவேண்டும். சர்வாதிகார நாடுகளில்கூட அதன் ஆரம்ப காலத்தில் சிறிய குடியானவர்களுக்கு, நேரடியாக விவசாயம் செய்ய பூமி கொடுக்கப்போகிறோம் என்று சொல்லி, **1926**-ல் குலாக்குகள் **(kulaks)** என்ற சிறிய குடியானவர்களுக்கு ரஷ்யாவில் பூமி கொடுத்தார்கள். பின்னர் அரசாங்கம் அவர்களை பிரதேசம்விட்டு பிரதேசம் மாற்றி அவர்களுக்கு வேலை கொடுத்து அந்த குலாப்ஸ்யையே சிறு குடியானவர்களையே அழித்துவிட்டார்கள். கிண்டர் கார்டன் என்று சொல்வார்களே காய் கறி பயிரிடுவதற்காக, அதற்காக சிறிய தோட்டங்கள் கால் அல்லது அரை ஏக்கர் நிலம் ஒரு வீட்டோடு கொடுக்கப்படுகிறதேயொழிய பெரிய அளவில் விவசாயம் செய்பவர்கள் என்று இல்லாமலாக்கிவிட்டு எல்லோரையும் விவசாயக் கூலிகளாக்கி விவசாயம் நடக்கிறது. அதே போல், சீனாவிலும் ஆரம்பத்தில் நிலத்தை பிரித்துக் கொடுத்தார்கள். நேரடியாக உழுவதற்கு விவசாயிகளுக்கு நிலம் கொடுக்கப்போகிறோம் என்று சொல்லி பெரிய நிலச்சுவான்தார்களிடம் இருந்து நிலத்தைப் பறித்துக் கொடுத்தார்கள். ஆனால் இப்பொழுது என்ன நடக்கிறது என்றால், பெரிய பெரிய பண்ணைகளாக்கி விவசாய மக்களை எல்லாம் விவசாயக் கூலிகளாக்கி விட்டார்கள். கௌண்டர் ரெவல்யூஷனரிகள் இருபது லட்சம் கொள்ளைக்காரர்களை தீர்த்துவிட்டோம் என்று ஒரு ஸ்டேட்மென்ட் கொடுத்தார்கள். அங்கு அரசாங்கம் கொள்கைகளை திடீர் திடீரென்று மாற்றிக்கொண்டு, சமுதாயத்தில் ஏற்பட்ட கலவரங்களை, பலாத்காரம் மூலம் அடக்கியிருக்கிறது. அவைகளை எல்லாம் பார்த்து நாம் விவசாயத் துறையில் எதைச் செய்யவேண்டும் என்ன செய்யவேண்டுமென்று ஒரு இறுதியான முடிவிற்கு அரசாங்கம் வர வேண்டியது அவசியம். அப்படி ஒரு திட்டம் செய்யாமல் இருந்தால் எங்கெங்கு கலவரங்கள் வருகிறதோ எங்கு சில கட்சிக்காரர்கள் கலவரத்தைக் கிளப்புகிறார்களோ அங்கெல்லாம் இப்படி சட்டங்கள் கொண்டு வந்தால் ஒவ்வொரு தாலூகாவிற்கும், ஒவ்வொரு கிராமத்திற்கும் சட்டம் கொண்டு வர வேண்டிய நிலை ஏற்படும என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளவிரும்புகிறேன். இப்பொழுதும் காலம் தள்ளிப் போய்விடவில்லை. கனம் அங்கத்தினர் அண்ணாமலை அவர்கள் பேசும்போது சொன்னார்கள், வரப்பிலே நின்றுகொண்டு இவ்வாறு வேலை செய், அவ்வாறு வேலை செய் என்று சொல்லக்கூடியவர்கள் விவசாயிகளாக

இருக்க மாட்டார்கள் என்று சொன்னர்கள். உண்மையில் யார் விவசாயி என்று முடிவு செய்ய வேண்டும். நேரடியாக உழக்கூடியவர் விவசாயியா, களை எடுக்கக்கூடியவர் விவசாயியா, அறுவடை செய்யக்கூடியவர் விவசாயியா அல்லது வேறு யார் விவசாயி என்பது முடிவு செய்யப்பட வேண்டும். அல்லது எல்லாவற்றையும் அரசாங்கமே எடுத்து நேரிடையாக விவசாயம் செய்து, அதற்காக வேலை செய்பவர்களுக்கு கூலி கொடுப்பதா? ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், அரசாங்கம் செய்யவேண்டிய முடிவு என்னவென்றால் ஒருவர் அதிகப்படியாக நேரிடையாக இவ்வளவு விவசாயம் செய்துகொள்ளலாம் என்பதை ஏக்கர் வாரியாகவோ அல்லது வருமான வாரியாகவோ நிச்சயித்து அதன்மேல் விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச கூலி என்ன கொடுக்கவேண்டுமென்று நிர்ணயிப்பது அவசியமாகும். கை ஏர், மாட்டு ஏர்க்காரர்களுக்கும் நியாயவாரச் சட்டப்படி 100-க்கு 60 கொடுப்பது என்பது விவசாயத் துறையில் சரியான நியாயம் வழங்குவதல்ல.

குத்தகைதாரர்களுக்கு நூற்றுக்கு அறுபது பங்கு கொடுக்கும்படி சட்டமியற்றியிருக்கிறோம். முன்னர் இவர்களுக்கு நூற்றுக்கு இருபத்தைந்து கிடைத்துக்கொண்டிருந்தது. இவர்களுக்கு அதிகம் கிடைத்துள்ளது என்றால் அவர்களின் கீழ் வேலை செய்யக்கூடிய விவசாய தொழிலாளர்கள் கூலி உயர்ந்துள்ளதா என்பதை சிந்திக்கவேண்டும். விவசாய துறையில் செய்யக்கூடிய சட்டங்கள் சரியானபடி நிலச் சொந்தக்காரர்களுக்கும், குத்தகைதாரர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் நீதி வழங்குவதாக இருக்கவேண்டும்.

அவசரச் சட்டத்தினால் திருச்சியில் சமாதான நிலை ஏற்பட்டு விட்டதா வென்றால் இல்லையென்று தெரிகின்றது. பத்திரிகையில் லால்குடிப் பக்கத்தில் விவசாய வேலைக்கு சென்ற பெண்கள் கற்பழிக்கப்பட்டனர், விலை பொருள்கள் கொள்ளையடிக்கப்பட்டன என்ற செய்திகள் வந்துள்ளன. ஜனநாயகத்தில் மக்களின் உரிமைகளை பாதுகாக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையாக இருக்க திருச்சி ஜில்லாவில் அந்தக் கடமை சரியாக நிறைவேற்றப்படவில்லையென்று குறிப்பிடவேண்டியுள்ளது. ஆக இந்த அவசர சட்டம் அவசரமானதுமட்டுமல்ல அவசியமில்லாதது என்று கூறி என் வார்த்தையை முடிக்கின்றேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மாட்டு வாரம், கையேர் வாரம் என்று சொல்லப்படுகிற விவசாயிகள் எந்த அளவுக்கு பல ஆண்டுகள்காலமாக பாதிக்கப்பட்டார்கள் என்பதை நாம் அறிவோம். அவர்களுடைய குறைகளை போக்குவதற்குவேண்டி இந்த சட்டத்தை கொண்டுவந்ததற்காக முதலாவது என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு கையேர் வாரம் தார்கள், மாட்டு வாரதம்தார்கள் படுகிற கஷ்டங்களை அமைச்சர் அவர்களுடைய பொன்னான வாயிலிருந்து கேட்கமுடிந்தது. அதற்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இன்று அவர்களுக்கென்று ஒரு சட்டம் வந்திருந்தபோதிலும்கூட இந்த விவசாயிகள் பல ஆண்டுகளாக போராடி, தங்களுடைய உரிமைகளை பெறுவதற்காக அரசாங்கத்தினிடத்தில் எத்தனையோ எடுத்துச் சொல்லியும் அவை எல்லாம் செவிடன் காதில் ஊதின சங்கைப்போலவே இருந்து வந்தது. அத்தனைக்கும் பின்னால் இந்த விவசாயிகளை ஆயிரக்கணக்கில் நிலத்திலிருந்து வெளியேற்றிய பிறகு குறிப்பாக இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டது. வெளியேற்றப்பட்ட இந்த விவசாயிகளில் பெரும்பாலோர் ஹரிஜனங்கள் என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். இந்த மாட்டுவாரம்தார், கையேர்வாரம்தார் என்கிற விவசாயிகள் என்ன வேலைகள் செய்கிறார்கள் என்பதை நாம் நன்றாக புரிந்துகொள்ளவேண்டும். சாதாரண விவசாயிகள் செய்யவேண்டிய வேலைகளை எல்லாம் செய்து, அதாவது நிலத்தில் உழுவது, நாற்று வைப்பது, நாற்று நடுவது, களை எடுப்பது இன்னும் இது போன்ற பலவிதமான வேலைகள் அத்தனையும் இந்த விவசாயியே செய்கிறான். மிராசுதார் 12-25 p.m.

என்ன செய்கிறார் என்றால் விதையும் உரமும் கொடுக்கிறார்கள். மற்றபடி எல்லா செலவுகளையும் செய்து அவர்களே பயிரிடுகிறார்கள். நிலச்சொந்தக்காரர்கள் கொடுக்கும் இந்த விதையும் உரமும் இலவசமாகக் கொடுக்கவில்லை. அதற்கு அறுவடையாகும்போது ஒன்றுக்கு இரண்டாக நெல் வாங்கிக்கொள்கிறார்கள். அவ்விதம் எடுத்துக்கொண்டது போக அறுவடை கூலி எல்லாம் அதிலிருந்துதான் கொடுக்கவேண்டும். இந்த விவசாயிடமிருந்து உரத்திற்கு ஒன்றுக்கு இரண்டாகவும் விதைக்கு ஒன்றுக்கு இரண்டாகவும் வாங்கினதின் பின்னாலும் காவல் சுதந்திரம் என்று இருக்கிறது. காவல் சுதந்திரம் என்றால் மிராசுதார் தடியை வைத்துக்கொண்டு வந்து நெல் கேட்பது. இதற்கு ஒரு எக்கருக்கு 6 மரக்கால் நெல் கொடுக்கவேண்டும். இது மாத்திரம் அல்ல மாப்புச் சுதந்திரம், வெற்றிலை பாக்கு சுதந்திரம் என்று பல சுதந்திரங்களுக்கு நெல் கொடுக்கவேண்டும். இது தவிர மிராசுதார் வெட்டியானை வேறு அழைத்துக்கொண்டு வருவார். அவருக்கு நெல் கொடுக்கவேண்டும். இவ்விதமாக நெல்லையெல்லாம் கையைக் கட்டி அளந்து எடுத்த பிற்பாடு எவ்வளவு கலம் நெல் விவசாயிக்குக் கிடைத்திருக்கின்றதோ அவ்வளவுக்கும் ஒரு மரக்கால் நெல் வீதம் கொடுக்கவேண்டும். விவசாயிக்கு அளவு சின்ன மரக்காலில் அளக்கவேண்டும், நெல் கொடுக்கும் சமயத்தில் பெரிய மரக்காலுக்கு அளக்கவேண்டும். கடைசியில் இந்த விவசாயிக்கு மீதம் கிடைக்கக் கூடிய நெல்லில், குறைந்த பட்சம் ஒரு விவசாயிக்கு ஒரு எக்கருக்கு 20 கலம் விளைவு கிடைக்கிறது என்று சொன்னால் அதில் பல சுதந்திரங்களுக்கும் கொடுத்ததுபோக பாக்கி 14 கலம் வருகிறது என்று சொன்னால் அதில் ஒரு கலத்திற்கு 2 மரக்கால் முதல் 3 மரக்கால் நெல் வரையிலும் கொடுக்கவேண்டும். அந்த அடிப்படையில் பார்க்கும்போது ஒரு எக்கருக்கு விவசாயிக்கு மூன்று அல்லது மூன்றரை கலம் நெல் தான் கிடைக்கிறது. இந்த அளவுக்கு பாதிக்கப்பட்டிருக்கிறான். உண்மையிலேயே இவர்கள் வெறும் கூலிகள் மாத்திரமல்ல. இவர்கள் விவசாயம் செய்கிற விவசாயிகள் என்பதை தயவு செய்து நன்றாக சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதில்லாமல் நாற்று நடுகிறவன் இதில் உரிமை கேட்பான். தண்ணீர் பாய்ச்சுகிறவன் உரிமை கேட்பான் என்று சொல்கிறார்கள் சிலர். ஆனால், உண்மையிலேயே இது போன்ற பலதரப்பட்ட வேலைகளை இந்த விவசாயிகளே செய்து வருகிறார்கள் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது எல்லாம் எந்தப் பகுதியில் இருக்கிறது என்று கனம் அங்கத்தினர் அவர்கள் தெரிவித்தால் அதைப் பற்றிக் கவனிக்கலாம்.

SRI V. K. KOTHANDARAMAN : இதை எல்லாம் இதற்காக கூறுகிறேன், என்றால் இது போன்ற கஷ்டங்கள் பல இடங்களிலிருந்தும் அதை சட்டரீதியாக நீக்குவதற்கு முடிகிறதா என்று பார்த்தால் அதுதான் இல்லை. இதுபோன்று வாதம் செய்துகொண்டு போனால் மாத்திரம் பிரயோஜனமில்லை. முதல் அமைச்சர் அவர்கள் சில கூட்டங்களில் சொல்லியிருப்பதாக பார்த்தேன். "உழுபவர்களுக்குத்தான் நிலம் சொந்தம் என்று சிலர் சொல்லுகிறார்களே, உண்மையில் உழுவது யார், மாடு அல்லவா உழுகிறது, ஆகவே, மாடுகளுக்குத்தான் நிலம் சொந்தமாகும்" என்று கூறியிருக்கிறார். அதுபோல்தான் தண்ணீர் பாய்ச்சுகிறவனுக்கும் களை எடுக்கிறவனுக்கும் இதில் உரிமை கொடுக்கப்படவேண்டிவரும் என்று சொல்லப்படுகிறது. நான் இந்த சமயத்தில் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்வது என்னவென்றால் இந்த மாதிரி மாட்டுவாரம்தார், கையேர் வாரம்தார் போன்று திருநெல்வேலி ஜில்லாவில் போத்து வாரம் என்று இருந்து வருகிறது. மற்ற ஜில்லாக்களிலும் இது போன்று பல பெயர்களின் பெயரில் இருந்து வருகிறது. இதைப் பற்றி நாராயணசாமிகாரு போன்றவர்கள் எடுத்துக்காட்டினார்கள், அதாவது இச்சட்டங்கள் பலவற்றில் பல ஓட்டைகள் இருக்கின்றன என்று சொன்னார்கள்.

14th February 1958] [Sri V. K. Kothandaraman]

இதன் மூலம் பண்டாரமும் கூட ஹைகோர்ட்டில் போய் தனக்கு சாதகமாக தீர்ப்பு வாங்கிக்கொண்டு வருவதற்கு வசதியாக இச்சட்டங்களில் ஓட்டைகள் இருக்கின்றன என்று கூறப்பட்டது. இவைகள் செலக்ட் கமிட்டியில் வரும்போது எதிர்க்கட்சித் தலைவர்கள் எப்பொழுதும் இப்படித்தான் சொல்வார்கள் என்று சொல்லுவதில் பிரயோஜனமில்லை. இது போன்ற தகராறுகள் இனிமேல் வராமல் இருக்க வேண்டும். ஆகவேதான் இம்மாதிரி சட்டங்களை கொண்டு வரும்போது இம்மாதிரியான தகராறுக்கு இடமில்லாமல் திட்டவட்டமாக சட்டத்தைப்பற்றி நிர்ணயிக்க வேண்டும் என்றுதான் சொல்ல ஆசைப்படுகிறேன். விவசாயிகளுக்கு கொண்டு வரப்படுகிற சட்டமாய் இருந்தாலும் சரி, தொழிலாளர்களுக்கு கொண்டு வரப்படுகிற சட்டமாயிருந்தாலும் சரி இவைகள் எல்லாம் திட்டவட்டமாக நிர்ணயித்திருக்க வேண்டும். பின்னல் பலவிதமான தகராறுகளுக்கு இடமில்லாதபடி இருக்க வேண்டும். இந்தமாதிரி சட்டங்கள் இன்றைக்கு எந்த நிலைமையில் இருக்கிறது என்று பார்ப்போமேயானால் இவைகள் கோர்ட்டுக்கு வரும்போது கோர்ட்டில் பலவிதமான தீர்ப்புகள் கொடுக்கப் படுகின்ற நிலைமை ஏற்படுகிறது. அந்த அளவுக்கு ஹைகோர்ட்டுக்கும் சுப்ரீம் கோர்ட்டுக்கும் போகக்கூடிய நிலைமையில் ஓட்டைகள் ஏற்பட்டு விடுகிறது. ஒரு கதை உண்டு, அதாவது "ஒய்" நாமக்காரர்களுக்கும் "யு" நாமக்காரர்களுக்கும் யாருக்கு முதலில் தீர்த்தம் கொடுக்கவேண்டும் என்று ஒரு வழக்கு கோர்ட்டில் நடந்தது. கோர்ட்டில் கேஸ் எவ்வளவோ நாட்கள் நடந்தது. கடைசியில் "யு" நாமக்காரர்களுக்குத்தான் முதலில் தீர்த்தம் கொடுக்கவேண்டும் என்று தீர்ப்பாயிற்று. அதே போன்றுதான் அங்குள்ள யானைக்கு எந்த நாமம் போடுவது என்று கேஸ் போடப்பட்டது. கடைசியில் "யு" நாமம் போடவேண்டும் என்று தீர்ப்பாயிற்று. அதன் பின் "யு" நாமம் நெற்றியில் போடுவதா அல்லது வயிற்றில் போடுவதா அல்லது வாலில் போடுவதா என்ற வழக்கு வந்தது. பின்னல் அது மேல் கோர்ட்டுக்குப் போனது. அப்படி மேல் கோர்ட்டுக்குப் போகும்போது 12-30 p.m.
வருஷக் கணக்கில் விவாதம் நடக்கிறது. வால்பாறையில் தொழில் கோர்ட் தீர்ப்பு வந்த பிறகு அந்தத் தீர்ப்பை அமுல் நடத்தக்கூடிய காலத்தில் பலர் துப்பாக்கியால் சுட்டுக் கொலை செய்யப்பட்டார்கள். ரஷ்யா வில் 20,000 பேர் சுட்டுக் கொலை பண்ணப்பாட்டார்கள் என்று சொல்வார்கள். அதைப்போல மேல் கோர்ட்டுக்குப் போயிருந்தபோது பெரிய யானை செத்து விட்டது. ஒரு குட்டி யானை இருந்தது. மேல் கோர்ட்டில் விவாதம் நடந்து "யு" நாமம் போடவேண்டியது என்றும், நெற்றியில் போடவேண்டியது என்றும் தீர்ப்பாயிற்று. உடனே பார்த்தார்கள் "ஒய்" நாமக்காரர்கள். அந்தத் தீர்ப்பின்படி பெரிய யானைக்குத்தான் போட வேண்டும், குட்டி யானைக்கு போடக்கூடாது என்று சொல்லி மறுபடியும் மேல் கோர்ட்டுக்குப் போனர்கள். அந்த மாதிரி இருக்கிறது சர்க்கார் சட்டம். இன்றைக்கு வரக்கூடிய சட்டம் நல்ல முறையிலே, அவர்களுக்குப் பாதுகாப்பளிக்கக்கூடிய முறையிலே இருக்கவேண்டுமென்றுதான் நாங்கள் சொல்கிறோம். இன்றைக்கு நிலத்திலிருந்து ஆயிரம் பேர்கள் வெளி யேற்றப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் பட்டினி கிடக்கிறார்கள். பசியால் வாடுகிறார்கள். அவர்களை நீங்கள் தூண்டி விட்டீர்கள் என்று சொல்லலாம். இதற்கு நீங்கள் வழிகாட்டி விட்டீர்கள் என்று சொல்லலாம். இதைப்போல வாதம் செய்யவேண்டுமானல் பல விஷயங்களை எடுத்துக் கூறுவோம். ஆகவே, கை ஏர் வாரக்காரர், மாட்டு வாரக்காரர் என்ற இந்த விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் இந்த மசோதாவை வரவேற்கும் நேரத்தில் ஒரு செலக்ட் கமிட்டிக்கு விடக்கூடிய ஒரு பிரேரணை கொண்டு வருவதையும் வரவேற்கிறேன். அதே போன்று நம் ராஜ்யத்தில் இருக்கக்கூடிய இந்த விவசாயிகள் பாதிக்கக்கூடாத அளவிற்கு நல்ல முறையில் இருக்கக்கூடிய தன்மையில் சட்டங்கள் இருக் வேண்டும் என்று வற்புறுத்தித் தெரிவித்துகொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI K. ANBAZHAGAN : சட்ட மன்றத் துணைத் தலைவர் 12-35 p.m.
அவர்களே, கை ஏர் வாரக்காரர், மாட்டு ஏர் வாரக்காரர் என்ற முறையிலே உழவர்களாக இருக்கும் மக்களுடைய நலனை சீர்படுத்துவதற்காக ஒரு

[Sri K. Anbazhagan] [14th February 1958

சட்டத்தை இப்போது நிறைவேற்ற முன் வந்த அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். உண்மையாகவே இந்த கை ஏர் வாரக்காரர், மாட்டு ஏர் வாரக்காரர் இவர்களுடைய நிலை கடந்த சில மாதங்களுக்கு முன்னாலே மிக மிகச் சீர்கேடான நிலையை அடைந்து, அது குறித்து பல கருத்துகள் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டு ஒரு அவசரச் சட்டம் கொண்டு வரப்பட்டது. பின்னரும் சிக்கலும், தொல்லையும் இருந்த காரணத்தால் இந்தச் சட்டம் வரவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது, இடையிலே இந்தச் சிக்கல் வளர்ந்து, மக்கள் உரிமை பறிபோகிற நிலைமை ஏற்பட்டு, நேரடியாக அமைச்சர் இடத்தில் முறையிட்டு உடனடியாக அவர்கள் ஏதும் செய்யாமல் கைவிரித்துவிட்ட நிலையில் திரும்பிய காரணத்தால், அரசியல் கட்சிகள் மக்கள் குறைகளை எடுத்துச் சொல்லுவது தங்கள் கடமை என்று சென்றார்களே தவிர, அவர்களைத் தூண்டிவிடவில்லை என்று நான் இங்கு பணிவன்போடு தெரிவிக்க விரும்புகிறேன்.

குளித்தலை வட்டார நங்கவரத்தில் மிராசுதார்களுடைய கட்டுப்பாடான எதிர்ப்பினால் அந்த மக்கள் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவரான அண்ணா அவர்களையும் அந்தத் தொகுதி உறுப்பினரான கருணாநிதி அவர்களையும் கண்டு பேசிய போது, எங்கள் தலைவர் அவர்களுக்குத் தெரிவித்தார். கடைசிவரையில் வேண்டுகோள் விட்டுப் பார்ப்போம். நேரடியாகத் தெரிவித்துப் பார்ப்போம். வருகின்ற அமைச்சர்களிடத்தில் கூறிப் பார்ப்போம். இவ்வளவிற்கும் முடியாமற்போனால் அறப்போர் நடத்துவோம். அதற்கு முன்னால் செய்யத்தக்க காரியம் இல்லை என்று ஆய்வுரை கூறினார். அதே முறையில் தோழர் கருணாநிதி அவர்கள் அமைச்சர் பக்தவச்சலம் அவர்களையும், முதல் அமைச்சர் அவர்களையும் சந்தித்து, சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கூடச் சந்தித்து நிலைமையை விளக்கியும் அந்த நேரத்தில் எத்தகைய முடிவும் காணப்படாத நேரத்தில், அவைகளைக் கண்டு, மக்கள் பரிதவிக்க நிலைமை ஏற்பட்ட காரணத்தால் நங்கவரம் அறப் போராட்டம் ஏற்பட்டதே தவிர—நாங்கள் எந்தவிதமான தூண்டுதலையும் செய்யவில்லை. அவர்களைத் தூண்டி திராவிட முன்னேற்றக் கழகம் வளர வேண்டிய நிலையில் இல்லை என்று நான் பணிவன்போடு தெரிவிக்க விரும்புகிறேன். உண்மை நிலையைப் பார்த்தால், பிரச்னை இருக்கும் இடத்தில் தான் போராட்டம் ஏற்படும். பிரச்னை இல்லாத இடத்தில் போராட்டம் இல்லை. இன்று கூட காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த மாயவரம் உறுப்பினர் திரு. நாராயணசாமி நாயுடு அவர்கள் மிக மிக உருக்கமாக, எந்த அரசியல் கட்சியாயினும் தனிப்பட்ட கருத்தாகக் குறிப்பிட்டபோதிலும், அவர் இந்த உழவர்கள் பிரச்னையை எந்தெந்த முறையில் பாடுபட்டு வருகிறார்களோ, அந்தந்தகருத்துகளை வலியுறுத்திக் கூறினார். அவர் என்ன கூறினாரோ அதே கருத்துகளை திராவிட முன்னேற்றக் கழகம் பல இடங்களிலும் திராவிடக்கழகம் சில யிடங்களிலும் கூறி வருகின்றது. நாங்கள் குறிப்பிட்டு வரும் இந்தப் பிரச்னைகள் பொதுவானவை. ஒரு பிரச்னை தீர இந்த வட்டாரத்தில் செல்வாக்குள்ள தலைவர், மக்களுடன் தொடர்புகொண்டவர்—அவர் ஒரு நாராயணசாமி நாயுடுவாகவோ அல்லது ஒரு கருணாநிதியாகவோ இருக்கலாம்—ஒரு பழனிச்சாமியாகவோ அல்லது ஒரு நல்லசிவமாகவோ இருக்கலாம்—யார் அந்த வட்டாரத்தில் பழக்கமுள்ளவர்களோ, யார் அந்த வட்டாரத்தில் அனுபவம் பெற்றிருக்கிறார்களோ, யார் பொறுப்பு எடுத்துக்கொள்வார்களோ அவர்களிடம் மக்கள் தமது குறையைக் கூறி அவர்கள் மூலம் அந்தப் பிரச்னையைத் தீர்க்க முற்படும் போது, அந்தப் பிரச்னையைச் சரியானபடி உணர்ந்து பரிகாரம் தேடாமல், அரசியல் கட்சிகள் தூண்டி விட்டன என்று கூறுவது சிறந்த, வலிவான அரசாங்கத்தின் லட்சணம் ஆகாது என்று இங்கு குறிப்பிடுவது தவிர்க்க முடியாததாகும். இந்தப் பிரச்னை வளர்ந்த நேரத்தில் ஒரு திருத்தச் சட்டத்தைச் கொண்டுவரவேண்டுமென்று கேட்டார்கள். திருச்சிராப்பள்ளி ஜில்லா விவசாயிகளைப் பொறுத்த மட்டிலும் கொண்டுவரப்பட்டிருந்த சட்டத்தில் ஏராளமான குறைபாடுகள் இருந்தன. உடனடியாக இந்தக் காரியத்தைச் செய்யவேண்டுமென்று ஒரு அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்து, அந்த அவசரச் சட்டம்பயன்படாத நிலையில் அதற்கு

14th February 1958] [Sri K. Anbazhagan]

பின்னால் இப்போது இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். எந்தச் சட்டத்திலும் சிற்சில குறைபாடுகள் இருக்கக்கூடும். வாய்க்கால் வெட்ட வெட்டத் தான் எந்த இடத்தில் கரை சரியாக இல்லையென்பதை உணர்ந்து மேலும் மேலும் அந்தக் கரையை பலப்படுத்த முடியும் அது போன்று, சட்டம் செய்யச் செய்யத்தான் அதைச் செம்மைப்படுத்த முடியும். ஆனால் சர்க்காரின் நோக்கம் இப்போது தெளிவுபடுத்தப் படவேண்டும். இந்த நாட்டிலேயுள்ள பல பிரச்னைகளைத் தீர்க்க பல சட்டங்களைக் கொண்டு வரும்போது அந்தச் சட்டங்கள் ஏற்கெனவேயுள்ள பழக்கத்தைக் காப்பாற்றுவதற்காகக் கொண்டுவரப்படுகிறதா, அல்லது ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்குவதற்காகவா என்பது தெளிவாக்கப்படவேண்டும். மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் பிரசங்கத்திலே தெரிவித்த ஒரு கருத்தைப் பற்றி இங்கே பேசப்பட்டது. அதாவது இப்போது நிலம் வைத்திருப்பவர்கள் ஒரு வரம்புக்கு மேற்பட்டு நிலத்தைச் சொந்தமாக வாங்குவதைத் தடை செய்யப்போவதாக சொல்லப்பட்டு இருக்கிறது. இப்படி வரப்போகிறது என்று தெரிந்தவுடனே அதன் விளைவைத் தடுத்துக்கொள்ள என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்துக்கொள்ள வழி வகைகள் ஏற்படுகின்றன. இந்த நிலைமையைப் பார்க்கும்போது இந்தப் பிரச்னை தீர்வதற்கு பதிலாக, எந்த நோக்கத்தோடு சட்டத்தை நிறைவேற்றுகிறோமோ அந்த நோக்கம் நிறைவேற்ற முடியாத ஒரு சூழ் நிலை நாட்டில் தோன்றுவது விளங்கும். இப்படிப்பட்ட தேசீய பிரச்னைகளுக்காகச் சட்டம் கொண்டுவருகின்ற நேரத்தில் உயர்ந்த கருத்துகளை வைத்து நிறைவேற்றுகிறோம். என்றாலும் எந்த நோக்கம் நிறைவேற வழி காணவேண்டும் உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்று பல ஆண்டு காலமாக கூறி வருகிறார்கள். உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்று சொல்லாத அரசியல் கட்சிகளே கிடையாது. எல்லா அரசியல் கட்சிகளும் அந்த உழவர்களிடம் செல்லவேண்டியிருப்பதால், அப்படி அந்த உழவர்களிடம் சென்று அவர்களுடைய ஆதரவைத் தேடுகின்ற நேரத்தில், அவர்களிடம் உழுபவர்களுக்கு நிலம் சொந்தம் என்று சொல்லும்போது, அந்த நிலத்தில் உழுகின்ற சொந்தத்தையாவது பறிக்கக் கூடாது என்றுதான் சொல்லுகிறேன். பறிக்கக் கூடாது என்று சொல்லும்போது, ஆலையில் வேலைசெய்யும் தொழிலாளிக்கு எந்த அளவு உரிமை தரப்படுகிறதோ, எந்த அளவு பாதுகாப்பு அளிக்கப்படுகிறதோ, அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு எந்த அளவுக்குப்பணி நிரந்தரமாக அளிக்கப்படுகிறதோ அந்த அளவுக்காவது அவர்களுக்கு நிச்சயம் நிலத்தில் உழுகின்ற உரிமை அளிக்கப்படவேண்டும். அதற்கு இடையூறு ஏற்படுகிறது. கையேர்வாரம்தார், மாட்டு ஏர் வாரம்தார்களோடு, மிராசுதாரர்கள் ஒப்பந்தம் பேசவில்லை என்று கூறி, அவர்களை நிலத்தில் வேலை செய்பவர்களாக கருதி நிலத்தைவிட்டு அகற்றுவதில் ஈடுபட்டார்கள். பல இடங்களில் அவர்களுக்கு தொல்லை கொடுத்து நிலத்தைப் பயிரிடுவதற்கு அனுமதிக்கவில்லை. அவர்களைக் குத்தகைக்காரர்கள் என்று கருதாது, கூலிக்காரர்கள் என்று கருதுவது, கருத்து அடிப்படையிலே தவறானது. இந்த நாட்டில் விவசாய முறையில் கூலிக்கார முறை இடையிலே ஏற்பட்டது. இன்று சமுதாயத்தில் வைதிக வளர்ச்சியால் இடையிலே புரோகிதம் ஏற்பட்டது போல், விவசாயத்திலும் கூலிக்காரர்கள் என்ற முறை இடைகாலத்தில் இடம் பெற்றது. அப்படி இடம் பெற்ற காரணத்தினாலே இந்த நாட்டிலே விவசாயத்தில் ஈடுபடுகின்றவர்களையெல்லாம் கூலிக்காரர்கள் என்று கருதுவது சரியல்ல. ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு ஓடி வந்தவர்கள், ராமனாதபுரம் மாவட்டத்திலிருந்து பிழைக்க வழியில்லாமல் தஞ்சை மாவட்டத்திற்கு வந்து மிராசுதார்களிடம் வேலைக்குச் சென்றவர்களே கூலிக்கு வேலை செய்பவர்கள. மற்றவர்களெல்லாம் நாள் கூலி வாங்கினாலும் சரி, வாரக் கூலி வாங்கினாலும் சரி, மாதக் கூலி வாங்கினாலும் சரி, அந்த உழைக்கும நிலத்தோடு ஓரளவு உரிமைத் தொடர்பு உடையவர்கள். ஆங்கில நாட்டிலே **'feudal system'** என்று சொல்லுவார்கள். வேலை செய்பவர்கள் அந்த நிலத்திற்கு உரியவர்களாகக் கருதப்படுவார்கள். நிலத்தோடு பிணைக்கப்பட்ட அடிமை என்று கூறுவார்கள். சொல்லிலே அடிமை என்று கருதப்பட்டாலும் அதிலிருந்து உரிமையை சுட்டிக் காட்டுவதற்காகத் தான் இதைக் குறிப்பிட்டேன். அந்த நிலம் யாருக்கு மாறுகின்றதோ

அந்த நிலத்தோடு சேர்ந்து அந்த உழவனும் அந்தப் புது எஜமானனிடத்தில் வேலை செய்வது அந்த முறை. இந்த அடிமைக் கருத்தை நான் வரவேற்க வில்லை என்றாலும், அதிலே உரிமை கருத்தை எண்ண வேண்டுகிறேன். அந்தந்த நிலத்திற்கு அந்தந்த உழவன் உரிமை படைத்தவன் உழைப்ப தற்கு. இதையடுத்து அப்படிப்பட்ட காரணத்தினாலே அவனுக்கு பண்ணையாள் என்ற பெயர் ஏற்படுகிறது. பண்ணையாரிடமிருந்த போதிலும் பண்ணையாள் மாறமாட்டான். பண்ணை முதலாளி மாறலாம். இதுதான் இயற்கை அடிப் படை. நிலம் மாறினாலும், நிலதில் உழைக்கின்ற பண்ணையாள் மாறுவதற் கில்லை. பண்ணைச் சொந்தக்காரர் வேண்டுமானால் மாறலாம். அந்தப் பண்ணை யாளுக்கு மற்றொரு பெயர் கையேர்வாரம்தார், மாட்டுவாரம்தார். இந்த வாரம்தார்களுக்கு தகுதி உயர்கிறது. எப்படி தகுதி உயர்கிறது என்றால், குத்தகைக்காரர்களுக்கும் பண்ணையாட்களுக்கு மிடைப்பட்ட நிலையில் மாட்டு வாரம்தார், கையேர்வாரம்தார் உள்ளனர். குத்தகைதாரர்தான் கண்டு முதல் செய்து, நெல்லை அறுவடை செய்து அதிலே எவ்வளவு பங்கு என்று நிலச் சொந்தக்காரருக்கு ஒப்படைக்கின்றான். ஒப்படைக்கின்ற உரிமைக்கு உரியவர் குத்தகைக்காரர். மாட்டுவாரம்தார், கையேர்வாரம்தார் என்பவர்கள் அறு வடை நடைபெறுவதை உடன் இருந்து நடத்தி அதிலே எந்த அளவுக்கு பங்கு தருகிறார்களோ அதைப் பெறுகிறார்கள். ஆகையால் வாரம்தார் என் றால், பங்குதார் என்று அர்த்தம், **shareholder** என்று அர்த்தம். ஆலை யிலுள்ள **shareholder**-க்கு உள்ள உரிமை இவர்களுக்கு இல்லை யென்று சொன்னாலும், இவர்களுக்கு உண்மையான பங்கு இருக்கிறது என்ற காரணத்தினாலே, வாரம் என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றதே தவிர, வேறு காரணம் அல்ல. வாரம்தார் எந்த அளவுக்கு தங்களுடைய பங்கை செலுத்துகின்றார்களோ, அந்த அளவுக்கு அவருக்கு பங்கு அளிக் கப்படவேண்டும். பங்கு என்றால் கூட்டுரிமை என்று அர்த்தம். மிராசு தாரர்கள் சொந்தக்காரர்கள் என்ற காரணத்தினால் உரிமைபாராட்டுகிறார்கள். வாரம்தார்கள் உழைப்பைக் கொடுக்கின்ற உரிமை பாராட்டுகிறார்கள். இரண்டு பேர்களும் சேர்ந்து பயிரை விளைவிப்பதினாலே,அந்த அடிப்படை தான் உரிமைக்குக் காரணம். அந்த முறையிலே அதற்கு எந்தவிதமான இடையூறும் இல்லாத விதத்திலே, மக்களை பாதுகாக்கக் கூடிய விதத் திலே இந்தச் சட்டம் செப்பனிடப்படவேண்டும்.

அடுத்து நான் சொல்லுவேன். இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் மிக எளிய முறையில் இருந்த காரணத்தினாலே, உழுகின்றவனுக்கு வாய்ப்பும் வசதியும் கிடைத்ததினாலே

" உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர் "

என்ற நிலைமை இருந்தது. இதை வள்ளுவர் எடுத்துக் கூறினார். ஆனால் இன்றுள்ள நிலைமை " உழுதுண்டு வாழ்வாரே தாழ்வார், மற்றெல்லாம் தொழுதுண்டு முன் செல்பவர் " என்று இருக்கிறது. இப்படி நிலைமை மாறி விட்டது. நிலைமை மாறிவிட்ட காரணத்தினாலே, மாறின நிலைமைக்கேற்ப சட்டம் கொண்டுவரவேண்டும். நிலத்தில் உழுகின்றவர்கள், ஏழை மக்கள் யார் நிலத்திலே பாடுபடுகின்றார்களோ அவர்களின் உரிமையை முன் அடிப்படையிலே வைத்து ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவர்கள் சட்டம் செய்தால் மக்கள், நன்மை அடைவார்கள். இன்னொன்று நான் சொல் லுவேன். உழுகின்ற மக்களை கம்யூனிஸ்டு கட்சி அணுகாவிட்டாலும், பிரஜா சோஷலிஸ்டு கட்சி அணுகாவிட்டாலும், திராவிட முன்னேற்றக் கழகம் அணுகாவிட்டாலும், அவர்களே தங்கள் பிரச்னைகளை தீர்த்துக் கொள்வதற்கு ஒரு கட்சியை நடத்துகின்ற ஆற்றல் படைத்தவர்கள். யார் அணுகாவிட்டாலும் உழவர்கள் அடங்கிவிடமாட்டார்கள். உலகத்தில் வரலாறு மாறிக்கொண்டு வருகிறது. மாறிக்கொண்டு வருகிற வரலாற் றில் வளர்கின்றசமுதாயம் அடையலாம். ஆட்சி பீடத்தில் இருப்பவர் களுக்கு பொறுப்பு அதிகமாக இருக்கலாம். நோக்கத்தை தெளிவுபடுத்

14th February 1958] [Sri K. Anbazhagan]

திக் கொண்டால் இவைகளை நல்ல முறையில் நிறைவேற்ற முடியும். சோஷலிஸ்டு சமுதாயம் அமையவேண்டுமென்ற குறிக்கோள் இருக்குமானால், அந்த குறிக்கோளிலிருந்து வழுவாமல் இருக்க விரும்பினால், நிச்சயம் முதல் கடமையாக நாட்டில் பெருவாரியாக மக்களாக இக்கின்ற உழவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக்கூடிய சட்டங்களைநிறைவேற்றுவதில் சர்க்கார் ஆர்வம் காட்டவேண்டும். அந்த முறையிலே இந்த சட்டம் கொண்டுவந்திருப்பதை நான் வரவேற்கிறேன். உழவர்கள் நல் வழ்வு நாட்டிலே உள்ள நிலங்கள் பங்கிடப்படுவதில்தான் நிறைவேற முடியும். பங்கிடப்படுவது என்றால் ஆளுக்கு ஆள் காணி காணியாக பிரித்துத் தருவது என்பதல்ல. மிகப் பெரிய மிராசுதார்களிடம் மடாதிபதிகளிடமும் உள்ள நிலங்களை அரசாங்கமே ஏற்றுக்கொள்ளலாம் அந்த நிலங்களை கூட்டுறவு சாகுபடிக்கு விடுவதற்கு முயற்சிக்கிறேன் என்ற கருத்தையும் அமைச்சரவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நாங்கள் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைகிறோம். ஆனால், இவைகளை உடனுக்குடன் செய்யவேண்டும். நாள் கடந்து செல்லசெல்ல இதனால் கிடைக்கின்ற பலன்கள், இதைப் பயன்படுத்த வேண்டுமென்ற விருப்பம், வெவ்வேறு வழியில் செல்லும். அந்த முறையிலே நான் சொல்லுவேன். மடாதிபதிகளின் நிலங்களையும் மிகப் பெரிய ஆலயங்களின் நிலங்களையும் இவ்வாறுஏற்றுக் கொண்டு கூட்டுறவு சாகுபடி முறையைக் கையாண்டு அரசாங்கமே அறநிலையமாக மாறிவிட்டாலும் அதை நாங்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்போம். அந்த முறையில் அரசாங்கம் நிலங்களை ஏற்றுக்கொண்டு அவைகளுக்கு மொத்த கூட்டுறவு சாகுபடி முறையை ஏற்படுத்தவேண்டும். ஏழை உழவர்களின் பிரச்னையை தீர்ப்பதற்கு, தனிப்பட்டவர்களிடத்தில் ஏராளமான நிலம் ஒப்படைக்கப்படாத நிலைமையிலே, ஏழை உழவர்களுக்கு விவசாயம் செய்யக்கூடிய நிலம் கண்டிப்பாக கிடைக்கும் என்ற உணர்ச்சியை உண்டாக்க அமைச்சர் முன்வரவேண்டும், ஆட்சி பீடத்திலுள்ளவர்கள் முன்வரவேண்டும்.

நான் இன்றையதினம் பேச விரும்பியது பிரச்னையில் பொது நோக்கத்தை வலியுறுத்துவதற்காகத்தான். பிரச்னையில் உள்ள சட்ட சிக்கல்களில் ஈடுபட்டு பேசுவதற்காக அல்ல. அவைகளையெல்லாம் ஆய்வுக் குழுவில் தெளிவாகப் பேசி ஒரு நல்ல முடிவுக்கு வரமுடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. அமைச்சர் அவர்கள் நேற்று கேட்டுக்கொண்டார்கள் ஒத்துழைப்பு கொடுக்கவேண்டுமென்று. இம்மாதிரி நல்ல சட்டங்கள் வரும் பொழுது நாங்கள் ஒத்துழைப்போம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அது மட்டுமல்ல. நாங்கள் சொல்லுவதில் ஏதாவது தவறு இருக்கிறது என்று யாராவது எடுத்துச் சொன்னாலும் அதை ஏற்றுக்கொள்ள நாங்கள் தயாராக இருக்கிறோம். நாங்கள் மட்டும் இதைச் சொல்லவில்லை. திருவாளர் நாராயணசாமி அவர்களும் நாங்கள் சொல்லவேண்டிய பல கருத்துகளை அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அவர் காங்கிரஸில் நீண்டகாலமாக உழைத்தவர். நான் சிறுவனாய் இருக்கும்பொழுது என்னுடைய தந்தை காங்கிரஸில் தொண்டாற்றினார். அந்த நாளில் அவர் அளித்த கதரை திருவாளர் நாரராயணசுவாமி வாங்கியிருக்கக்கூடும் என்று நம்புகிறேன். அந்த அளவு நீண்ட காலமாக காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திருவாளர் நாராயணசுவாமி அவர்கள் தமது கட்சிக்கு அப்பாற்பட்ட பல கருத்துகளை எடுத்துச் சொல்லியிருக்கிறார். அவர் என்னென்ன கருத்துகளை சொன்னாரோ, அவ்வளவு கருத்துக்களையும் சர்க்கார் கவனிக்கவேண்டும். தங்கள் கட்சியைச் சேர்ந்தவர்தானே என்று அவைகளை அலட்சியமாக விட்டுவிடக்கூடாது என்று வேண்டிக்கொண்டு, நான் என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, Sir, I will just take three or four minutes for my speech. 12-49 p.m.

I want to raise a very important point in respect of this Bill. In the Statement of Objects and Reasons contained in this Bill, it has been stated—

'It has been held by the High Court of Judicature at Madras that *kadaeruvaramdars* and *mattuvaramdars* in the Tiruchirappalli district, engaged by landlords to work on land for remuneration by a share in the crop on such land are not "cultivating tenants" . . .'

If my memory does not fail, I think, the Government have preferred an appeal in the High Court and the whole matter is *sub judice*. When such is the case, Mr. Deputy Speaker, is it in order for the Government to issue an Ordinance and now to come up with this Bill before this House? There is also another point involved in the matter. After all, the Assembly was going to meet shortly and they could have waited for the Assembly to meet and discuss this important Bill. I want to know why the Government issued an Ordinance first instead of bringing this Bill before this House. Of course, in this Bill, there is the Saving Clause 4 (1) which says—

'Any proceeding under the Madras Cultivating Tenants Protection Act, 1955 (Madras Act XXV of 1955) (hereinafter in this section referred to as the said Act) which has been disposed of after the commencement of the said Act and before the 6th January 1958 on the footing that the said Act did not apply to persons who became cultivating tenants within the meaning of the said Act by virtue of the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Ordinance, 1958 (Madras Ordinance I of 1958), shall be re-opened and disposed of in accordance with the provisions of the said Act as amended by this Act.'

It does not say anything about the case that is still pending before the High Court. I do not know what the Hon. Minister is going to say in this matter and I do not know whether we will be in order in discussing this matter when it is *sub judice*. My own view is that either the Government should have withdrawn the case or not brought this Ordinance now. I would request the Hon. Minister to examine this aspect of the matter very carefully and come to a decision. That is all my submission, Sir.

THE HON. SRI M. BHAKTHAVATSALAM: Mr. Deputy Speaker, Sir, I would like to make this observation with reference to the general question raised by the Hon. Leader of the Opposition. Sir, the judiciary has only to interpret the law that is passed by this Legislature. Whether that interpretation is correct or not is a different matter and on that there may be appeal or there may not be appeal. But the judiciary has to interpret the existing law and on that account this Legislature is not precluded from making a new law or an amending law to the existing law. The question that may be before the judiciary is an interpretation of a particular aspect and this is a new legislation. I do not think there is any question of *sub judice* in this case.

14th February 1958]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : My point is either they should have withdrawn the case pending the passing of the new law or they should have waited till the case was disposed of.

DEPUTY SPEAKER : The Hon. Home Minister has explained very clearly that the two things are separate questions.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : If my memory does not fail, Government have filed an appeal against the original order and that is pending . . .

DEPUTY SPEAKER : The Hon. Minister has explained that the question pending before the High Court is a different matter.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : All the same, no mention about the cases that are pending has been made. That also should be considered and that is my submission.

DEPUTY SPEAKER : I think the Hon. Minister for Revenue will explain it.

*THE HON. SRI M. A. MANICKAVELU : உதவி சபா நாயகர் அவர்களே, 12 52 p.m.
இந்த நிலப் பிரச்னையைப்பற்றி பல அங்கத்தினர்கள் விரிவாகவும், விளக்கமாகவும் பேசினார்கள். பல கோணங்களிலிருந்து பேசினார்கள். உச்ச வரம்புபற்றிப் பேசினார்கள். மடாதிபதி, பணக்கார ஸ்வாமி, ஏழை ஸ்வாமி, இதைப்பற்றி யெல்லாம் கூடப் பேசினார்கள். (சிரிப்பு.) அதைப்பற்றி யெல்லாம் நான் இப்பொழுது பதில் சொல்லுவதற்குக் காலமில்லை; சபாநாயகர் அதை அங்கீகரிப்பதும் கஷ்டம். ஆகவே, இப்பொழுது இங்கு எழுந்துள்ள பிரச்னையைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன், அதாவது, இந்த அவசர சட்டத்தை ஒட்டி இங்கே கொண்டுவந்திருக்கிற மசோதாவைப்பற்றி.

இதன் முக்கிய நோக்கம் என்னவென்றால் விவசாயம் செய்பவர்கள் அவர்களுடைய நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக் கூடாதென்பதுதான். இதைப்பற்றி நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். இரண்டாவது நோக்கம் என்னவென்றால், அவர்களுக்குப் போதுமான, நியாயமான ஊதியம் கிடைக்கவேண்டும். இந்த இரண்டு நோக்கங்களையும் மற்ற விவசாயிகள் பூராவுக்கும் அமலுக்கு கொண்டுவரவேண்டுமென்பதுதான். இந்த சந்தர்ப்பத்தில் சொந்த உரிமை பற்றியும் பேசப்பட்டது. நிலச்சொந்தக்காரனை ஆங்கிலத்தில் "landlord" என்பார்கள். "Supreme right" உள்ளவன், அதாவது எல்லா உரிமைகளும் உள்ளவன் என்று பொருட்பட இருந்தது. இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக உரிமை போய்க்கொண்டிருக்கிறது. ஒரு மிராசுதாரரோ, அல்லது நிலச் சொந்தக்காரனோ அந்த நிலத்தின் விவசாயியை அப்புறப்படுத்தக்கூடாது என்று சட்டம் செய்வது அவனுடைய உரிமையை பாதிக்கிறது. பல வருஷங்களுக்கு முன், நியாயம் என்ற முறையில் பாதிக்கப்பட்டவர்கள் பரிகாரம் தேடினார்கள். ஆனால், வர வர இம்மாதிரி அப்புறப்படுத்துவது அதிக அளவில் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. அந்த சந்தர்ப்பத்தில்தான் அரசாங்கம் பிரவேசித்து, அதைத் தடுக்க வேண்டுமென்கிற முறையிலே சட்டம் தீட்டியிருக்கிறார்கள். இந்த உரிமையை எடுக்கிற விஷயத்திலே நீதி மன்றம் தடுக்கலாம். Legal rights இருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலையிலே நீதி மன்றம் தடுக்க முடியவில்லை. ஏனென்றால், இப்பொழுது இந்த மாதிரி ஓரளவுக்கு மற்றவர்களுடைய உரிமையைக் கட்டுப்படுத்தலாம் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் அதற்கு ஒரு "test" இருக்கிறது, அதாவது "If it is for the greatest good of the greatest number of people" பெருவாரியான ஜனங்களுக்கு பெரிய பலனை அளிப்பதாய் இருக்கவேண்டும்.

[Sri M. A. Manickavelu] [14th February 1958

அடுத்தபடியாக, கையேர், மாட்டேர் விவசாயிகள் என்றல் எப்பேற்பட்ட விவசாயிகள் என்பதை பிற்பாடுசொல்லுகிறேன். அவர்களை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக் கூடாது என்பது கொள்கை. அப்பேற்பட்டவர்கள் கை விரலில் எண்ணக்கூடியவர்களாயிருந்தால் யாரும் கவனிக்க வேண்டியதில்லை. ஆனல், இவர்கள் பெரிய அளவில் இருக்கிருர்கள். ஆயிரக் கணக்கான ஏக்கராக்கள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. நூற்றுக்கணக்கான விவசாயிகள் பாதிக்கப்பட்டிருக்கிருர்கள். இதை ஒட்டி கலவரம் குழப்பம் எல்லாம் ஏற்பட்டால், அரசாங்கத்தின் கடமை அந்த சந்தர்ப்பத்தில் பிரவேசித்து நீதி மன்றம் மூலமாக தடுக்க முடியாவிட்டால், சட்ட பூர்வ மாகச் செய்யவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அந்த வகையில்தான் சட்டம் கொண்டுவரப்படுகிறது.

இந்தக் கையேர், மாட்டுவாரம்தார்கள் என்று சொல்லப்படுகிறவர்கள், சாதாரணமாக விவசாயிகள் என்று சொல்லுகிருேமே, அவர்களைப்போல் இல்லை. இந்த மாதிரி விவசாயத்தைப்பற்றி திருச்சிஞப்பள்ளியைச் சேர்ந்த ஸ்ரீ லாசர் உள்பட பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னர்கள். இவர்கள் முழு விவசாயிகள் அல்ல. இவர்கள் கால் விவசாயி, 3/8 விவசாயி, அரை விவசாயி, 5/8 விவசாயிகள் இன்னும் இதில் வீசம் கூட சேர்த்துக்கொள்ளலாம்—இப்படிப்பட்ட விவசாயிகள்; முழு விவசாயிகளல்ல. இருந்தாலும் ஓரளவு விவசாயிகள். அவர்கள் நிலத்தைச் சேர்ந்தவர்கள், நிலத்தில் பயிரிடுவதை நம்பி வாழ்க்கை நடத்துகிறவர்கள் ஆகவே, அரசாங்கம் இது விஷயமாகக் கவனிக்கவேண்டியிருக்கிறது. இப்பொழுது வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டு, வேலையில்லாமலிருந்தால் "Employment doles" என்று கொடுக்கிருர்கள். வேலை செய்யாமலே பணம் பெறுகிருர்கள். நாட்டிலே வேலையில்லாத நிலைமை ஏற்பட்டால் அது சமுதாயத்தைப் பாதிக்கிறது என்பதற்காக "Employment doles" கொடுக்கிருர்கள். மற்ற நாடுகளில் கொடுக்கிருர்கள். இங்கு "doles" கொடுக்காவிட்டாலும், நடத்திவருகின்ற தொழிலை செய்யக்கூடாத நிலைமை ஏற்பட்டால், தொழில் செய்வதற்கான சூழ் நிலையை ஏற்படுத்தக் கடமைப்பட்டிருக்கிருேம். மேலே சொன்ன அளவிலே, இந்த விவசாயிகள் ஒரு பின்ன (fraction) விவசாயிகள். ஆனல் அவர்களை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக்கூடாது என்ற நிலைமை ஏற்படவேண்டுமென்பதற்காக, முதலாவதாக Cultivating Tenants Protection Act-ஐ இதற்கும் உட்படுத்தவேண்டுமென்று ஏற்பாடு ஆகியிருக்கிறது. குடையைப் பிடித்துக் கொண்டு, வரப்பின் மேல் போகிறவர்கள் விவசாயிகளா என்று கேட்கப்பட்டது. Cultivating Tenant என்பவன் யார் என்று மசோதாவில் சொல்லப் பட்டிருக்கிறது. களை பிடுங்குதல் போன்ற வேலைகளுக்கு casual labour வைத்துக்கொள்ளலாம் என்று சொல்லப்பட்டது. மசோதாவிலே தெளிவாகச் சொல்லப்பட்டிருப்பதால் இதைப் பற்றி சர்ச்சை வேண்டியதில்லை. இந்த மாதிரி விவசாயிகள் கையேறு வேலை மட்டும் செய்யலாம்; அல்லது மாட்டேறு அடிப்படையில் வேலை செய்யலாம். கையேறு, மாட்டேறு இரண்டு வேலையையும் செய்யலாம். இன்னெருவன் நீர்கட்டி வேலையைச் செய்யலாம். இதைப் புரிந்துகொண்டால், ஓரளவுக்கு இவர்கள் குறைந்த பட்ச விவசாயிகளாக இருக்கிருர்கள் என்பது தெரியும். இன்னெரு சங்கடம் என்னவென்றல், இந்த வேலையை 4, 5 பேர்கள் கூட்டாகச் செய்கிருர்கள். ஆகவே "cultivating tenant" யார் என்ற கஷ்டமான பிரச்னை ஏற்படுகிறது.

1.00 p.m.

இம்மாதிரியான பல சிக்கல்கள் இருக்கின்றன. அதை நாம் செலெக்ட் கமிட்டியில் நன்றக பரிசீலனை செய்து பலர் குறிப்பிட்ட பிரகாரம் பலதரப்பட்ட பரிகாரத்தைத் தேடிக்கொள்ளலாம். முக்கியமாக நிலத்தையே நம்பி நிலத்தை சாகுபடி செய்து அதிலேயே தன்னுடைய வாழ்க்கையை நடத்திக் கொண்டு ஜீவனம் செய்துகொண்டிருப்பவர்களை திடீரென்று நிலத்தை விட்டு அப்புறப்படுத்தாமல் இருக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தினுடைய கருத்து. அப்படி அப்புறப்படுத்துவது சமுதாயத்திற்கு நல்லது அல்ல என்ற அடிப்படையில் சர்க்கார் சட்டம் செய்திருக்கிறது. அதனல் இந்தச் சட்டத்தை அந்த பகுதியிலும் கொண்டுவர எத்தனிக்கிருேம்.

14th February 1958] [Sri M. A. Manickavelu]

இரண்டாவதாக நியாய வாரம் அவர்களுக்கு உண்டா என்ற கருத்து இருக்கிறது அது விஷயத்திலும் சிக்கல் இருக்கிறது. நியாய வாரச் சட்டப் பிரகாரம் விவசாயச் செலவுகளையெல்லாம் விவசாயிகளே ஏற்றுக் கொள்ளலாம் என்றும் தீர்வை தான் மிராசுதார் ஏற்றுக்கொள்ளுகிறது என்றும் இருக்கிறது. ஆனால் மசோதா பிரகாரம் அப்படி இல்லை. மிராசு தார்கள் அதாவது நிலச் சொந்தக்காரர்கள் அதிகமாக பொறுப்பை எடுத்துக் கொண்டு, விதைச் செலவை எடுத்துக்கொண்டு பாக்கியை இருவரும் பங் கிட்டுக்கொள்ள வேண்டும் என்பது தற்காலிகம். விவசாயிகளுடைய வேலை என்னவென்றால், ஏர் ஒட்டுவது, மாடு இருந்தால் மாடுகளைக் கொண்டு ஏர் ஒட்டுவது, தண்ணீர் பாய்ச்சுவது. இவர்களும் கல்டிவேடிங் டெனன்ட் என்று கருதப்பட வேண்டும் என்றும் இவர்களுக்கும் நியாய வாரச்சட்டப்படி 60–40 என்ற பங்கு கிடைக்க வேண்டும் என்றும், அவர் களை நிலத்தைவிட்டு எந்தக் காரணத்தைக்கொண்டும் வெளியேற்றக்கூடாது என்றும், இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தில் எந்த நன்மைகள் விவசாயிகளுக்குச் செய்யப்பட்டிருக் கின்றனவோ அந்த நன்மைகள் எல்லாம் இவர்களுக்கும் கிடைக்கவேண்டும் என்றும் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. மிராசுதார்கள் விவசாயம் செய்ததில் முழு செலவு செய்திருந்தால் அதை எடுத்துக் கொண்டு மிச்சத்தில் நிலச் சொந்தக்காரரும் விவசாயியும் பங்கெடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்றும் இந்தச் சட்டத்தில் ஒரு ஷரா இருக் கிறது. 60–40 என்றபடி பூரா பாகமும் இவர்களுக்கு வேண்டும் என்று சொல்லுவது சரியல்ல. அவர்களுடைய ப்ரோபர்ஷன் பிரகாரம் தான் கிடைக்கும். 60 - 40 என்ற முறைல்தான் கொடுக்கவேண்டும் என்று சொன்னால் அது சரியல்ல, அது சர்க்காருடைய நோக்கமும் அல்ல.

அடுத்தபடியாக உப விவசாயியைப்பற்றி சொல்லப்பட்டது. அதாவது "சப் டெனன்ட்". விவசாயிக்கும் நிலச்சொந்தக்காரருக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது. ஏதாவது ஒரு காரணத்தால் அந்தத் தொடர்பு இல்லாமல் போயிருக்கலாம். அப்பொழுது விவசாயிக்குக் கீழ் வேலை செய்யக் கூடிய அதாவது "சப் டெனன்ட்" அவனும் விவசாயி என்று கருதப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நிலச் சொந்தக்காரருக்கும் விவசாயிக்கும் எந்த சந்தர்ப்பத்திலாவது இடஞ்சல் ஏற்பட்டு அவர்களுடைய தொடர்பு இல்லாமல் போய் விட்டால் இந்த சப் டெனன்ட்டுக்கு ஒரு உரிமை கிடைக்க வேண்டும் என்பதற்காக இதைக் கொண்டுவரப்பட்டது. இவைகளில் ஏதாகிலும் இடஞ்சல் ஏற்பட்டால் அதை செலக்ட் கமிட்டியில் நிவர்த்தி செய்து கொள்ளலாம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் அங்கே செய்து கொள்ளலாம்.

கனம் அங்கத்தினர் பேசியபோது திருச்சி ஜில்லா அதிகாரியைப்பற்றியும் அங்குள்ள நிலைமையைப்பற்றியும் சொன்னார். ஹைக்கோர்ட்டில் ஒரு தீர் மானம் கொடுத்திருக்கிறது. அதன் பிரகாரம் அரசாங்கம் ஏன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை என்று கேட்டார். ஹைகோர்ட் தீர்மானத்தில் ஏற்பட்ட மிக முக்கியமாக பிரச்னை அதன் இஷ்யூஸ் என்ன என்பதைப் பற்றி நாம் பரிசீலித்துப் பார்க்க வேண்டும். ஒரு அபிப்பிராயம் கொடுத் தால் அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. தீர்ப்புக் கிடைத்தால் தான் அது நமக்கு டைண்டிங். "ஓபிட்டர் டிக்டம்" என்று சொல்லுவார் கள். அதுவாக இருந்தால் அதற்கு நாம் டைண்டிங் அல்ல. தீர்ப்புக்குத் தான் நாம் டைண்டிங். "ஓபிட்டர் டிக்டத்தை"ப்பற்றி கவனித்து சூழ் நிலையை பரிசீலனை செய்து எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படிச் செய்ய வேண்டியதாக இருக்கிறது. ஆனால் கொடுக்கப்பட்ட "டெசிஷன்"பிர காரம் செய்துதானாக வேண்டும். அதை அரசாங்கம் மீறப்போவதில்லை. "ஓபிட்டர் டிக்டத்தில்" எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த அளவில் தான் அதை எடுத்துக்கொள்ள வேண்டும். அதை ஒரு தீர்மானமாக எடுத்துக் கொண்டு விவாதம் செய்வது சரியல்ல.

[Sri M. A. Manickavelu] [14th February 1958

என் இதற்கு ஒரு அவசரச் சட்டம் கொண்டு வரப்பட வேண்டும். சாதாரணமாக ஒரு மசோதாவாகவே கொண்டு வந்து நிறைவேற்றியிருக்கலாமே என்றும் குறிப்பிட்டார். இந்த அவசரச்சட்டம் ஜனவரி மாதம் 6-ம் தேதி பிரசுரிக்கப்பட்டது. அதிலிருந்து அமுலுக்கு வந்தது. நாம் இப்பொழுது பிப்ரவரி மாதம் 8-ம் தேதி கூடுகிறோம். சாதாரணமாக நாம் பிப்ரவரி மாதக் கடைசியிலோ அல்லது மார்ச்சு மாத ஆரம்பத்திலோதான் கூடுவோம். பிப்ரவரி மாதம் 8-ம் தேதி கூடுவோம் என்பது அந்த அவசரச் சட்டத்தை பிரசுரித்தபோது தெரியாது. அங்குள்ள நிலைமையைப் பார்க்கும்போது ஒரு அவசரச் சட்டம் இயற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அங்குள்ள சூழ் நிலை அப்படி இருந்தது. அங்குள்ள நிலைமையை உத்தேசித்து நான் அதற்கு வழி தேட வேண்டிய நிலைமை இருந்தது. பிப்ரவரி மாதம் 8-ம் தேதி கூடுவது தெரியாததால் அங்குள்ள நிலைமையை இரண்டு மாதங்கள் சமாளிக்க முடியாது என்று தோன்றியதால் அவசரச் சட்டத்தை பிரசுரிக்கும்படியாக ஏற்பட்டது. இரண்டு மாதங்கள் காத்திருந்தால் நிலைமை சீர்கெட்டிருக்கும். இப்படி நிலைமையை சமாளிக்க அரசியல் சட்டத்தில் நமக்கு இடம் கொடுக்கிறது. அதன்படிதான் அவசரச் சட்டம் கொண்டுவரப்பட்டது. இதற்கு யாதொரு ஆட்சேபணையும் சொல்ல முடியாது. பின்னுடி சட்டமாக கொண்டுவந்து சட்டசபையில் நிறைவேற்றப்போகிறோம். அது சந்தர்ப்பத்தையொட்டிச் செய்தால் அதில் தவறு ஒன்றும் இல்லை என்று நான் நினைக்கிறேன்.

ஆகையினுல் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் இந்த அரசாங்கத்தினுடைய முக்கியமான நோக்கத்தை நிறைவேற்ற இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. திருச்சி ஜில்லாவில் அப்பொழுது ஏற்பட்ட நிலைமையைச் சமாளிக்க இப்படிப்பட்ட அவசரச் சட்டம் கொண்டு வந்து சமாளிக்கப்பட்டிருக்கிறது. பெருவாரியான மக்கள் அங்குள்ள நிலைமையில் பாதுகாக்க வேண்டியதாக இருந்தது. பல மக்கள் பாதிக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டதால் நியாய வாரச் சட்டத்தையும், வெளியேற்றத் தடுப்புச் சட்டத்தையும் பயன்படுத்தும் பொருட்டு இதைக் கொண்டு வரப்பட்டது. விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்களிடத்தில் மாறுபட்ட கருத்துக்கள் இல்லாமல் இருப்பதற்கும் அங்கு ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்துவதற்கும் முக்கியமாக விவசாயத் தொழில் பாதிக்கப்படாமல் இருப்பதற்கும், உணவு உற்பத்தி தடங்கல்படாமல் இருப்பதற்கும், அரசாங்கத்தினுடைய கடமையை நிறைவேற்றுவதற்கும் இம்மாதிரியான ஒரு மசோதாவைக் கொண்டு வருதவற்கான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் இதை சரியான முறையில் உணர்ந்து நல்ல கோணத்திலிருந்து இதை புரிந்துகொண்டு இந்த மசோதாவைக் ஆதரித்து நிறைவேற்றி கொடுப்பார்கள் என்று வேண்டுகிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri Annamalai withdrawing his amendment?

SRI S. M. ANNAMALAI : I am withdrawing the amendment, Sir.

The amendment was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : I now put the original motion to the vote of the House. The question is—

"That under Rule 138 of the Madras Assembly Rules the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 24 Members (16 Members of the Assembly and 8 Members of the Council) to consider the Madras Cultivating Tenants Protection

14th February 1958] [Deputy Speaker]

and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958), and that the following Members of this House be selected to serve on such a Joint Select Committee :—

1. The Hon. Sri C. Subramaniam.
2. The Hon. Sri M. A. Manickavelu.
3. Sri P. G. Karuthiruman.
4. ,, S. Lazar.
5. ,, G. Annamalai Muthuraja.
6. ,, V. A. Muthaiya.
7. ,, T. V. Sannasi.
8. Srimathi T. N. Anandanayaki.
9. Sri R. Srinivasa Iyer.
10. ,, G. Narayanaswami Naidu.
11. ,, T. Sampath.
12. ,, S. R. Munusami.
13. ,, S. M. Annamalai.
14. ,, M. Kalyanasundaram.
15. ,, T. L. Sasivarna Thevar.
16. ,, A. R. Marimuthu.'

The motion was put and carried."

V.—MOTION UNDER RULE 21 (3) OF THE ASSEMBLY RULES—*cont.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That the Statement of Demands for Grants for Excess Expenditure in 1954–55 be taken up before the Madras Prohibition (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 2 of 1958).'

DEPUTY SPEAKER : The question is :

'That the Statement of Demands for Grants for Excess Expenditure in 1954–55 be taken up before the Madras Prohibition (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 2 of 1958.).'

The motion was put and carried.

VI.—VOTING ON THE DEMANDS FOR GRANTS FOR EXCESS EXPENDITURE IN 1954-55. 1-10 p.m.

DEMAND VI—MOTOR VEHICLES ACTS—ADMINISTRATION.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 23,435, under Demand VI—Motor Vehicles Acts—Administration."

[14th February 1958

**Sri N. K. PALANISAMI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1954-55 கணக்குகள் சம்பந்தமாக பப்ளிக் 'அகௌண்ட்ஸ்' கமிட்டியில் இதைப்பற்றி ஏற்கெனவே விவாதித்திருப்பார்கள். ஆனால், 12 பேர்களுக்கு 18 லட்ச ரூபாய் அதிகப்படியாக செலவு செய்யப்பட்டிருக்கிறது. எவ்வளவு செலவு செய்யவேண்டுமென்று முன்கூட்டியே மதிப்பிட்டுத்தான், எதிர் பார்த்துத்தான் அதிகாரிகள் பட்ஜெட் போட்டிருக்கவேண்டும். அது மட்டுமல்ல. ரூ. 6,51,946 ட்ரெயினேஜ் திட்டங்களுக்காக வரவழைக்கப்பட்ட பொருள்களையும் "ஸ்டாக்" பண்ணி வைத்திருக்கிறார்கள். செலவுகூட செய்யாமல் வைத்திருக்கிறார்கள். இதையெல்லாம் பார்க்கும்போது, சரியான பட்ஜெட் போடவில்லை என்று தெரிகிறது. இம்மாதிரி நிலை இனிமேலாவது ஏற்படாமல் பார்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யவேண்டும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் பேச ஆரம்பித்த போது, பப்ளிக் அகௌண்ட்ஸ் கமிட்டியின் அனுபவம் இல்லாதவரைபபோல அவர் பேசுகிறாரே என்ற சந்தேகம் ஏற்பட்டது. இரண்டு தடவை அவர் பப்ளிக் அகௌண்ட்ஸ் கமிட்டி மெம்பராக இருந்ததாகக் கேள்விப்படுகிறேன். அப்படியிருந்ததும் அவர் இப்படிப் பேசுவது ஆச்சரியமாக இருக்கிறது என்பதைத்தான் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 23,435, under Demand VI—Motor Vehicles Acts—Administration."

The Demand was put and carried and the Grant was made.

## DEMAND IX—HEAD OF STATE, MINISTERS AND HEADQUARTERS STAFF.

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 1,39,570 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff."

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** Sir, all these things have been gone through by the Public Accounts Committee and we may take them together.

DEPUTY SPEAKER : Anyway, it is my duty to put them to the vote of the House. The question is :—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 1,39,570 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XI—DISTRICT ADMINISTRATION AND MISCELLANEOUS.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 5,45,854 under Demand XI—District Administration and Miscellaneous."

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 5,45,854 under Demand XI—District Administration and Miscellaneous."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XVII—PUBLIC HEALTH.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 4,39,134 under Demand XVII—Public Health."

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 4,39,134 under Demand XVII—Public Health."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XX—CO-OPERATION.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 3,90,011 under Demand XX—Co-operation."

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted an additional sum not exceeding Rs. 3,90,011 under Demand XX—Co-operation."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XXIV—CIVIL WORKS—WORKS.

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 2,10,523 under Demand XXIV—Civil Works—Works."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 2,10,523 under Demand XXIV—Civil Works—Works."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XXVIII—FAMINE.

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 1,33,286 under Demand XXVIII—Famine."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 1,33,286 under Demand XXVIII—Famine."

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XXX—STATIONERY AND PRINTING.

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Public Accounts Committee and with the approval of the Governor, I move—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 61,745 under Demand XXX—Stationery and Printing."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted an additional sum not exceeding Rs. 61,745 under Demand XXX—Stationery and Printing."

The Demand was put and carried and the Grant was made.

(2) MESSAGE FROM THE GOVERNOR.

DEPUTY SPEAKER : I have to announce to the House the following Message, dated 14th February 1958, received from the Governor of Madras :—

" In pursuance of Article 207, clause (1) read with Article 199 (1) (d) of the Constitution of India, I, Bishnuram Medhi, Governor of Madras, hereby give my recommendation to the introduction in the Madras Legislative Assembly of the Madras Appropriation Bill, 1958, and in pursuance of clause (3) of Article 207, I also recommend to that Assembly the consideration of the said Bill."

IV—GOVERNMENTS BILLS—*cont.*

(3) THE MADRAS APPROPRIATION BILL, 1958.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg leave of the House to introduce the Madras Appropriation Bill, 1958.

DEPUTY SPEAKER : The question is—

" That leave be granted to introduce the Madras Appropriation Bill, 1958."

The motion was put and carried and leave was granted to introduce the Bill.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I introduce the Madras Appropriation Bill, 1958.

The Bill was introduced.

(4) THE MADRAS PROHIBITION (AMENDMENT) BILL, 1958[a]
(L.A. BILL NO. 2 OF 1958.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

" That the Concurrence of the Council be obtained for setting up of a Joint Select Committee of both the Houses consisting of 24 Members (16 Members of the Assembly and 8 Members of the Council) to consider the Madras Prohibition (Amendment) Bill, 1958 and that the following Members of this House be selected to serve on such a Joint Select Committee :—

1. The Hon. Sri M. Bhaktavatsalam.
2. Sri P. G. Karuthiruman.
3. Srimathi P. K. R. Lakshmikantham.
4. Sri G. Gomathisankara Dikshitar.
5. ,, K. Vinayakam.

[a]Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 13th February 1958

